## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

**கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி**

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமுகத்தில் காணப்படும் தொழில் வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான பல்வேறு மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமுகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்காலச் சவால்களை வெற்றிகொள்ளுவதற்கு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை ஒழுங்காகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்த சகோதரர்களின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே அரசினால் இலவசப் பாடநூல்களை உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

உலகில் மிக வேகமாக மாறி வரும் சுற்றுச்சூழல் மாற்றத்திற்கு பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதற்கும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதற்கும் ஓர் அரசாக நாம் செயற்படுவது ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளோம் என்பதனாலேயாகும். இலவசக் கல்வியின் உச்ச பயனை அனுபவித்துக்கொண்டு நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன் மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியது அதனாலேயே ஆகும். இதற்காக இந்நூலைப் பயன்படுத்துவதன் மூலம் நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகவும் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் என்பனவே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற் கொள்ளவேண்டும். நீங்கள் சமுகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமுகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக் கொள்ளவேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் மிகவும் கூடிய பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளில் கூட இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் ச ாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்தவொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

***டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க***
*கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்,*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## வழிகாட்டல்

***டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி***
*கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி),*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## இணைப்பாக்கம்

***அஷ்-ஷைக் எம்.ரீ. அப்துர் ரஹ்மான்***
*உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## எழுத்தாளர் குழு

***ஜனாப் எம்.எச்.எம் நாளிர்***
*விரிவுரையாளர், பாதிஹ் கலாபீடம், திஹாரிய.*

***அஷ்-ஷைக் எம்.எச்.எம். புஹாரி***
*ஆசிரிய ஆலோசகர், வலயக் கல்விக் காரியாலயம், மினுவங்கொடை.*

***அஷ்-ஷைக் ஏ.பீ.எம். அப்பாஸ்***
*சிரேஷ்ட விரிவுரையாளர், நளீமிய்யா இஸ்லாமியக் கலாபீடம், பேருவளை.*

***ஜனாப் எம்.எஸ்.எம். பூஸரி***
*சிரேஷ்ட ஆசிரியர், அல் அஸ்ஹர் மத்திய கல்லூரி, திஹாரிய.*

***அஷ்-ஷைக் எம்.எம். பஸ்லுர் ரஹ்மான்***
*சிரேஷ்ட ஆசிரியர், பாபுஸ் ஸலாம் ம.வி, நாம்புலுவ, பஸ்யால.*

***அஷ்-ஷைக் எம்.ஆர் ஹிஷாம் முஹம்மத்***
*சிரேஷ்ட ஆசிரியர், அல் அஸ்ஹர் மத்திய கல்லூரி, திஹாரிய.*

***மௌலவிய்யா எம்.ஐ.எஸ். ஸுஹாரா***
*ஆசிரியை, கைரியா முஸ்லிம் மகளிர் கல்லூரி, கொழும்பு - 09.*

***ஜனாப் ஏ. சாபுதீன்***
*அதிபர் (ஓய்வு), ஆனொலொந்தாவெவ, கப்புகொல்லாவ, ஹொரவப்பொத்தான.*

***ஜனாபா அஸீமா ஹுஸைன்***
*சிரேஷ்ட ஆசிரியை, டீ.எஸ். சேனாநாயக்க கல்லூரி, கொழும்பு - 07.*

## பதிப்பாசிரியர் குழு

***கலாநிதி எம்.ஏ.எம். சுக்ரி***
*பணிப்பாளர், நளீமிய்யா இஸ்லாமியக் கலாபீடம், பேருவளை.*

***அஷ்-ஷைக் எம்.எஸ். அப்துல் பாரி***
*சிரேஷ்ட விரிவுரையாளர், அரபு இஸ்லாமிய நாகரீகத் துறை,*
*பேராதனைப் பல்கலைக்கழகம்.*

**மௌலவி ஏ.பீ(B).எம். அலியார்**
*பீடாதிபதி, இஸ்லாம், அரபுமொழிபீடம், தென்கிழக்குப் பல்கலைக்கழகம், ஒலுவில்.*

***அஷ்-ஷைக் ஜே.எம். ஜஸார்***
*விரிவுரையாளர், (சமயப் பிரிவு) தேசிய கல்வி நிறுவகம் - மகரகம.*

**மௌலவி எம்.ஐ.எம். நவ்பர்தீன்**
*உதவிக் கல்விப் பணிப்பாளர், முஸ்லிம் பாடசாலைகள் அபி.பிரிவு, கல்வி அமைச்சு.*

***அஷ்-ஷைக் எம்.ரீ. அப்துர் ரஹ்மான்***
*உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## மொழிப் பதிப்பு

***ஜனாப் எம்.எம்.எம். இல்யாஸ்***
*ஆசிரிய ஆலோசகர், வலயக் கல்விப் பணிமனை, கம்பஹா.*

## இறுதி மதிப்பீடு

**மௌலவி எம்.என்.எம். இஜ்லான் (காஸிமி)**
*பிரதம கதீப், கொழும்பு பெரிய பள்ளிவாசல்,*
*பணிப்பாளர், பாதிபிய்யா அரபுக் கல்லூரி, கஹட்டோவிட்ட.*

**மௌலவி எம்.எல்.எம். ஹனீபா**
*சிரேஷ்ட விரிவுரையாளர், அரபு இஸ்லாமிய நாகரீகத் துறை,*
*பேராதெனிய பல்கலைக்கழகம்.*

## சரவை பார்த்தல்

***அஷ்-ஷைக் எம்.எம். ஸப்(B)ரி மக்கீன்***
*அபிவிருத்தி அலுவலர், அனைவருக்கும் கல்விக் கிளை, கல்வி அமைச்சு.*

## கணினி தட்டெழுத்து

***எச்.எப். ரிஸ்னா***
*கணினி வடிவமைப்பாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## தளக்கோலம், படங்கள், அட்டை வடிவமைப்பு

***ஜனாப் எம்.டப்ளிவ்.ஏ. அஸார்***
*கணினி வடிவமைப்பாளர், மீள்பார்வை ஊடக மையம், கொழும்பு - 09.*

# உள்ளடக்கம்

## முக்கிய குறிப்பு

இப்பாட நூலில் சிலரின் பெயர்களுடன் சேர்த்து அடைப்புக்குறிக்குள் சுருக்கமாக இடப்பட்டுள்ள சில சொற்களுக்கான முழுமையான வடிவம் கீழே தரப்படுகின்றது. அவற்றை முழுமையாக உச்சரிப்பதே இஸ்லாமிய முறையாகும். எனவே அவ்வாறு உச்சரித்துப் பூரண பயனைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

| | | |
|---|---|---|
| *(ஸல்)* | | *ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்* |
| *(அலை)* | ஒரு ஆணாயின் | *அலைஹிஸ்ஸலாம்* |
| | ஒருபெண்ணாயின் | *அலைஹஸ்ஸலாம்* |
| | இருவராயின் | *அலைஹிமஸ்ஸலாம்* |
| | பலராயின் | *அலைஹிமுஸ்ஸலாம்* |
| *(ரழி)* | ஒரு ஆணாயின் | *ரழியல்லாஹு அன்ஹு* |
| | ஒரு பெண்ணாயின் | *ரழியல்லாஹு அன்ஹா* |
| | இருவராயின் | *ரழியல்லாஹு அன்ஹுமா* |
| | பலராயின் | *ரழியல்லாஹு அன்ஹும்* |
| *(ரஹ்)* | ஒருவராயின் | *ரஹ்மஹுல்லாஹ் / ரஹ்மதுல்லாஹி அலைஹி* |
| | பலராயின் | *ரஹிமஹுமுல்லாஹ் / ரஹ்மதுல்லாஹி அலைஹிம்* |

1



# அகீதா (நம்பிக்கைக் கோட்பாடு)



பொதுவாக மனித வாழ்வு நம்பிக்கையின் அடிப்படையிலேயே எழுப்பப்பட்டிருக்கிறது. அன்றாட வாழ்வில் மனிதனை இயக்குவது கூட அவனிடம் காணப்படும் நம்பிக்கையே. ஒரு முஸ்லிமைப் பொறுத்த வரையில் அவனது வாழ்வு நம்பிக்கையின் அடிப்படையில் எழ வேண்டும், இறுதிவரை அவனை அந்நம்பிக்கையே இயக்க வேண்டும் என இஸ்லாம் விரும்புகின்றது. இதனாலேயே அல்குர்ஆன் மூன்றிலொரு பகுதிக்கும் அதிகமாக நம்பிக்கையைப் பற்றிக் கூறியுள்ளது. எழுபதுக்கும் மேற்பட்ட இடங்களில் ஈமானுடன் இணைத்து அமல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

நான் யார்? உலகில் எனது பணி யாது? எனது முடிவு என்ன? இவை போன்ற வாழ்வின் அடிப்படை வினாக்களுக்கு ஒரு முஸ்லிம் ஈமானை அடிப்படையாகக் கொண்டே விடை காண வேண்டும். இந்த வகையில் நம்பிக்கை இஸ்லாத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றது.

அகீதா அல்லது அகாஇத் எனும் சொற்கள் நம்பிக்கையைக் குறிக்கவே பயன்படுத்தப்படுகின்றன. இஸ்லாமிய வழக்கில் அகீதா என்பது ‘இறுதியானதும் உறுதியானதுமான சான்றுகளைக் கொண்டு கட்டியெழுப்பப்பட்ட நம்பிக்கைகளைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றது.

அல்லாஹ்வால் தேர்ந்தெடுக்கப்பட்ட தூதர்கள் அனைவரும் ஒரே அகீதாவையே போதித்துள்ளனர் என்பது அல்குர்ஆனின் சாட்சியமாகும். ‘நூஹுக்கு எதனை அவன் உபதேசித்தானோ அதனையே அவன் உங்களுக்கும் மார்க்கமாக்கியிருக்கிறான். ஆகவே, நபியே நாம் உமக்கு வஹி மூலம் அறிவிப்பதும், இப்ராஹீமுக்கும் மூஸாவுக்கும், ஈஸாவுக்கும் நாம் உபதேசித்ததும் என்னவென்றால், நீங்கள் அனைவரும் சன்மார்க்கத்தை நிலைநிறுத்துங்கள். நீங்கள் அதில் பிரிந்து விடாதீர்கள் என்பதேயாகும்’ (42:13) என அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது.

இஸ்லாமிய வரலாற்றில் பல்வேறு கலைகள் தோற்றம் பெற்றபோதும், இஸ்லாத்தின் நம்பிக்கைகளைத் தொகுத்துத் தருவதற்காகத் தோற்றம் பெற்ற ஒரு கலையே இல்முல் அகீதா அல்லது இல்முல் அகாஇத் எனும் கலையாகும்.

அல்குர்ஆனும் ஸுன்னாவுமே இல்முல் அகீதாவுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. இஸ்லாத்தின் அடிப்படை நம்பிக்கைகள் பற்றி அவை கூறியுள்ளன. உதாரணமாக ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம்

‘ஈமானைப் பற்றி எனக்குக் கூறுவீராக’ என வினவியபோது, ‘அல்லாஹ்வையும் அவனது மலக்குகளையும், அவனது வேதங்களை யும், அவனது தூதர்களையும், மறுமை நாளையும் விசுவாசிப்பதும் நன்மையும், தீமையும் இறை நாட்டப்படியே இடம்பெறும் என விசுவாசிப்பதும் தான் ஈமானாகும்’ எனப் பதிலளித்தார்கள். (புஹாரி)

மேற்குறிப்பிட்டுள்ள ஹதீஸ் ஆறு பிரதான நம்பிக்கைகளையும் எடுத்தியம்புகின்றது.

*01.* ***அல்லாஹ் பற்றிய நம்பிக்கை:*** *இப்பிரிவில் அல்லாஹ் இருக்கின்றான், அவன் ஒருவன் என்பதற்கான ஆதாரங்கள், அவனது பண்புகள், அவனது திருநாமங்கள், அவனது ஆற்றல்கள், சக்திகள் போன்றன விளக்கப்படுகின்றன.*

*02.* ***மலக்குகள் பற்றிய நம்பிக்கை:*** *இப்பிரிவில் மலக்குகள், ஜின்கள் பற்றிய விளக்கங்கள் இடம்பெறுகின்றன. ரூஹ் பற்றிய விளக்கமும் இதில் இடம்பெறுகின்றது.*

*03.* ***வேதங்கள் பற்றிய நம்பிக்கை:*** *மனித சமூகத்துக்கு வழிகாட்ட இறைவன் இறக்கி வைத்த ஸுஹுபுகள் வேதங்கள் பற்றி இங்கு விளக்கப்படுகிறன.*

*04.* ***நபிமார்கள் ரஸூல்மார்கள் பற்றிய நம்பிக்கை:*** *நபிமார்களின் பண்புகள், அவர்களுக்கு வழங்கப்பட்ட அற்புதங்கள், அவர்களது பணிகள் இதில் விளக்கப்படுகின்றன.*

*05.* ***மறுமைநாள் பற்றிய நம்பிக்கை:*** *கப்று, பஃஸ், ஹிஸாப், மீஸான், ஸிராத், ஜன்னா, நார் போன்ற விடயங்கள் இதில் உள்ளடங்குகின்றன.*

*06.* ***கழா கத்ர் பற்றிய நம்பிக்கை:*** *முழுப் பிரபஞ்சத்தையும் இயக்கும் இறைவனது நாட்டம் பற்றி இதில் விளக்கப்படுகின்றது.*

آمَنْتُ بِاللهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ
وَرُسُلِهِ وَالْيَوْمِ الْآخِرِ وَالْقَدْرِ خَيْرِهِ
وَشَرِّهِ مِنَ اللهِ تَعَالَى

*பிரதானமான நம்பிக்கைகள் ஆறினையும் அகீதா துறை அறிஞர்கள் கீழ்வருமாறு நான்கு பிரிவுகளாகப் பிரித்து விளக்குகின்றனர்.*

***1. அல் இலாஹிய்யாத்:*** *அல்லாஹ் பற்றிய நம்பிக்கை, கழாகத்ர் பற்றிய நம்பிக்கையும் அதனுடன் தொடர்புபடும் அனைத்தும் இப்பிரிவில் உள்ளடங்கும்.*

***2. அந் நுபுவ்வாத்:*** *நபிமார்கள், ரஸூல்மார்கள் பற்றிய நம்பிக்கை, வேதங்கள் பற்றிய நம்பிக்கை ஆகியவற்றுடன் தொடர்பான அனைத் தும் இப்பிரிவில் உள்ளடங்கும்.*

*3. அர் ரூஹானிய்யாத்:* சட உலகுக்கும் புலன்களுக்கும் அப்பாற்பட்ட மலக்குகள், ஜின்கள், ஷைத்தான்கள், ரூஹ் போன்றன இதில் அடங்குகின்றன.

*4. அஸ்ஸம்இய்யாத்:* மறுமை வாழ்வுடன் தொடர்புடைய அனைத்து விடயங்களும் இதில் உள்ளடங்குகின்றன. (கப்று, பஃஸ், மஹ்ஷர், ஹிஸாப், மீஸான், ஹவ்ழ், ஸிராத், ஜன்னா, நார்)

நம்பிக்கைகள், சிறந்ததாக அமையும்போதுதான் வாழ்க்கை சிறக்க முடியும். வாழ்க்கைக்கு உன்னதமான ஒரு குறிக்கோளை வழங்கி, அதனை வளப்படுத்துகின்ற ஓர் உன்னதமான பணியையே இஸ்லாமிய அகீதா செய்கிறது. இத்தகைய ஓர் அகீதா இன்றி, முஸ்லிம் தனி நபர்களோ, முஸ்லிம் சமூகமோ உருவாக முடியாது.

முஸ்லிம் சமூகத்தில், பிற்காலத்தில் உருவான அரசியல் ரீதியான பிளவுகள், அந்நிய சிந்தனைத் தாக்கங்கள், பகுத்தறிவை எல்லை கடந்து பிரயோகித்தமை முதலிய காரணங்களால் அகீதா அதன் இலகு தன்மையை இழந்தது. சிக்கலானதாக மாறியது. மனிதனை இயக்கி, வாழ்வை வளப்படுத்துவதற்கான உந்து சக்தியாக இருப்பதற்குப் பதிலாக அது சண்டைக்கும் சச்சரவுக்கும் வழிவகுக்கும் விடயமாக மாற்றம் பெற்றது. சுருங்கக் கூறின் அகீதா ஒரு பேச்சுபொருளாக மாறி விட்டது.

அகீதா விடயத்தில் பல்வேறுபட்ட பின்னணி கொண்டோர் பேச முற்பட்டபோது முஸ்லிம் சமூகத்தில் வித்தியாசமான பல குழுக்கள் தோற்றம் பெற்றன. ஜபரிய்யா, கதரிய்யா, முர்ஜிஆ, முஃதஸிலா போன்றன அவற்றுக்கான சில உதாரணங்களாகும்.

இஸ்லாமிய அகீதா இவ்வாறான பிழையான போக்குகளால் பாதிப்புறக் கூடாது. அதன் தூய்மை இழக்கப்படல் கூடாது எனக் கருதிய பல அறிஞர்கள் அதனைப் பாதுகாக்கப் பல பிரயத்தனங்களை மேற்கொண்டனர். இமாம்களான அஹ்மத் பின் ஹம்பல், அபுல் ஹஸன் அல் அஷ்அரி, அபூ மன்சூர் அல்மாதுரூதீ ரஹிமஹுமுல்லாஹ் போன்றோர் இப்பணியில் பெரும் பங்காற்றியுள்ளனர். இவர்கள் அனைவரும் 'அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ' வைச் சேர்ந்தவர்களாவர். இப்பதமானது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஸஹாபாக்களும் நடந்த வழிமுறையில் நடக்கக் கூடியவர்களைக் குறித்து நிற்கிறது. நாமும் இந்த வழிமுறையைப் பின்பற்றி வாழ்வை வளப்படுத்துவோம். இம்மையிலும் மறுமையிலும் பாக்கியவான்களாகுவோம்.

### பயிற்சி

1. அகீதா என்றால் யாது விளங்குவீர்?
2. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ சார்ந்த இமாம்கள் மூவரின் பெயர்களைத் தருக.
3. இஸ்லாமிய அகீதாவுக்கு அடிப்படையாக அமைகின்ற மூலாதாரங்கள் எவை?
4. அகீதா கால மாற்றங்களுக்கு ஏற்ப மாறக்கூடிய ஒன்றல்ல என்பதனை அல்குர்ஆன் வசனமொன்றின் மூலம் நிறுவுக.

2

# ஈமானும் அமலும்

இஸ்லாம் கூறுகின்ற விடயங்களை நம்புவதை ஈமான் என்றும் அதன் போதனைகளைச் செயற்படுத்துவதை அமல் என்றும் குறிப்பிடுவர். ஈமான் என்பது உள்ளத்தால் ஏற்று நாவினால் மொழிந்து, செயலால் உண்மைப்படுத்துவதாகும். ஒருவர் இஸ்லாத்தின் நம்பிக்கைகளை ஏற்று, அதன்வழி அமல்களை நிறைவேற்றினாலேயே அவர் முஃமின் எனப்படுவார். ஈமானும் அமலும், மலரும் நறுமணமும் போல இணைந்தே இருக்கும். ஈமானின்றி அமலோ அமல் இன்றி ஈமானோ அங்கீகரிக்கப்படுவதில்லை. அல்குர்ஆன் சுமார் எழுபதுக்கு மேற்பட்ட இடங்களில் ஈமானையும் அமலையும் ஒன்று சேர்த்துக் கூறியுள்ளமை இதனை உறுதிப்படுத்துகின்றது.

'(நபியே!) எவர் ஈமான் கொண்டு ஸாலிஹான அமல்களும் செய்தார்களோ அவர்களுக்கு நிச்சயமாக சுவனங்கள் உண்டு. அவற்றுக்குக் கீழே நீர் அருவிகள் ஓடிக் கொண்டிருக்கும் என நன்மாராயம் கூறுங்கள்.' *(2:25)*

'ஆணாயினும் பெண்ணாயினும் நம்பிக்கை கொண்டு, நற்செயல்களை எவர் செய்தாலும் நிச்சயமாக நாம் அவர்களை நல்வாழ்க்கை வாழச் செய்வோம்.' *(16:97)*

'ஈமான் எழுபதுக்கும் மேற்பட்ட கிளைகளைக் கொண்டது. அதில், அதி உயர்ந்தது, லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவும், மிகத் தாழ்ந்தது பாதையில் இடர்தரும் பொருட்களை அகற்றுவதுமாகும். வெட்கமும் ஈமானின் ஒரு பகுதியே' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். (புஹாரி)

இஸ்லாம், நாம் ஈமான் கொள்ள வேண்டிய விடயங்களை சுட்டிக்காட்டியுள்ளது போலவே அமல்களையும் சுட்டிக்காட்டியுள்ளது. வணக்க வழிபாடுகள், பொதுப் பணி, கொடுக்கல் வாங்கல், நற்பண்புகள் போன்றன அமல்களில் உள்ளடங்குகின்றன. எனவே, தொழுகை, நோன்பு, திக்ர் போன்ற சில இபாதத்துக்களுடன் மாத்திரம் அமல்கள் சுருங்கி விடுவதில்லை. இதனைப் பின்வரும் அல்குர்ஆன் வசனம் எடுத்துக்காட்டுகிறது.





'மேற்கிலோ கிழக்கிலோ உங்கள் முகங்களை நீங்கள் திருப்பி விடுவதனால் மட்டும் நன்மை செய்தவர்களாக ஆகிவிட மாட்டீர்கள். (உங்களில்) எவர் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் (மறுமையையும்) மலக்குகளையும் வேதங்களையும் நபிமார்களையும் நிச்சயமாக நம்பிக்கைகொண்டு (தனக்கு விருப்பமுள்ள) பொருளை அல்லாஹ்வுக்காக உறவினர்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் யாசகர்களுக்கும் விடுதலையை விரும்பிய (அடிமைகள், கடன்காரர்கள் ஆகிய) வர்களுக்கும் கொடுத்து (உதவிசெய்து) தொழுகையையும் கடைப்பிடித்து தொழுது ஸக்காத் (மார்க்க வரியு)ம் கொடுத்து வருகின்றாரோ அவரும் வாக்குறுதி செய்த சமயத்தில் தங்களுடைய வாக்குறுதியை (ச் சரிவர) நிறைவேற்றுபவர்களும் கடினமான வறுமையிலும் நோய்நொடிகளிலும் கடுமையான போர் நேரத்திலும் பொறுமையைக் கைக் கொண்டவர்களும் ஆகிய (இவர்கள்தாம் நல்லோர்கள்) இவர்கள்தாம் (அல்லாஹ்வை நம்பிக்கைக் கொள்வதில்) உண்மையானவர்கள். இவர்கள்தாம் இறை அச்சமுடையவர்கள்.' **(2:177)**

இதனை ஸுன்னாவும் உறுதிப்படுத்துகின்றது.

'ஒரு முஃமினுக்கும் காபிருக்கும் இடையில் உள்ள வேறுபாடு தொழுகையை விடுவதாகும்.' (புஹாரி)

'ஒரு விதவையினதோ ஏழையினதோ தேவையொன்றினை நிறைவுசெய்து கொடுப்பதற்காக முயற்சிப்பவர் தொடர்ந்து இரவில் நின்று வணங்கியும் பகலில் நோன்பு நோற்றும் வருபவர் போலாவார்.' (புஹாரி)

'ஒருவர் தமக்கு விரும்புவதையே தனது சகோதரனுக்கும் விரும்பாத வரை உண்மை முஃமினாக மாட்டார்' (புஹாரி)

'யார் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொள்கிறாரோ அவர் அண்டை வீட்டானுக்கு நல்லதைச் செய்யட்டும். யார் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொள்கிறாரோ அவர் தன் விருந்தினரை உபசரிக்கட்டும். யார் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொள்கிறாரோ அவர் பேசினால் நல்லதையே பேசட்டும் இல்லாவிடின் மௌனமாக இருக்கட்டும்.' (புஹாரி)

'முஃமின்களில் சிறந்தவர் நற்குணமுடையவரே.' (அஹ்மத்)

அமல் இல்லாத ஈமான் பயனற்றது போலவே ஈமான் இல்லாத அமல்களும் பயனற்றதாகும். அத்தகைய அமல்களை அல்குர்ஆன் கானல் நீர் என்கிறது.

'எவர்கள் நிராகரிப்பாளர்களாகி விட்டார்களோ அவர்களுடைய செயல்கள் வனாந்தரத்தில் தோன்றும் கானலைப் போல் இருக்கின்றது. தாகித்தவன் அதனைத் தண்ணீர் என எண்ணிக்கொண்டு அதன் சமீபமாகச் சென்றபோது ஒன்றையும் அவன் காணவில்லை' **(24:39)**

அல்குர்ஆன் ஈமானுடன் அமலை இணைத்துக் கூறும் போதெல்லாம் ஈமான் கொண்டு ஸாலிஹான அமல் புரிந்தவர்கள் என்றே கூறுகின்றது. ஸாலிஹான அமல்கள் என்பதை உரிய நேரத்திற்குப் பொருத்தமான உரிய செயல்கள் என விளக்கலாம். மற்றொரு வகையில், உலக - மறுமை வாழ்வுக்கும், தனிநபர் - சமூக வாழ்வுக்கும் ஆன்மீக - லௌகீக வாழ்வுக்கும் பொருத்தமாக அமையும் அனைத்து செயற்பாடுகளையும் ஸாலிஹான அமல்கள் என விளக்கலாம். ஸாலிஹான ஓர் அமல் அல்லாஹ்விடம் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு உளத்தூய்மை முக்கிய நிபந்தனையாகும்.

ஒருமுறை ஒரு நபித்தோழர் அல்லாஹ்வின் தூதுவரிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே அல்லாஹ்வுக்காகவே நான் சில அமல்களைச் செய்கிறேன். அத்துடன் மக்கள் எனது செயலைப் பார்ப்பதும் எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது என்றார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எந்த பதிலும் கூறவில்லை. அப்போது பின்வரும் அல்குர்ஆன் வசனம் இறங்கியது.

'எவர் தன் இறைவனைச் சந்திக்க விரும்புகின்றாரோ அவர் நற்செயல்களைச் செய்து தன் இறைவனுக்கு ஒருவரையும் இணையாக்காது (அவனையே) வணங்கி வருவாராக'. *(18:110)*

இந்நிகழ்வு, முகஸ்துதியுடன் கூடிய அமல் இணைவைத்தலுக்கு ஒப்பானது என்பதைத் தெளிவுபடுத்துகின்றது. ஒரு முஃமினின் செயற்பாட்டுக்கும் முஃமினல்லாதவரின் செயற்பாட்டிற்கும் இடையில் வேறுபாடுண்டு.

**ஒரு முஃமினின் செயற்பாடு பின்வரும் அம்சங்களை உள்ளடக்கியதாக அமையும்.**

1. அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் வழிப்பட்டதாக இருத்தல்.
2. நபி صلى الله عليه وسلم அவர்கள் செய்த முறையில் அச்செயற்பாடு அமைந்திருத்தல்.
3. அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காக என்று இருத்தல்.
4. அல்லாஹ்விடம் மட்டுமே பிரதிபலன் எதிர்பார்க்கப்பட்டதாக இருத்தல்.

ஈமான் கொண்ட மனிதர்களின் தூய்மையான செயற்பாடுகளை இஸ்லாமிய வரலாற்றில் நிறையவே காணலாம். ஒரு முஃமினின் ஒரே இலக்கு அல்லாஹ்வைத் திருப்திப்படுத்துவதாகும் என்பதற்கு அவை சிறந்த எடுத்துக்காட்டுகளாக உள்ளன.

ஒரு யுத்த களத்தில் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எதிரியுடன் போராடிக்கொண்டிருந்தார். எதிரி பலவீனமடைந்த நிலையில் அவன் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் முகத்தில் காறி உமிழ்ந்தான். உடனே, அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவனை அவ்விடத்திலேயே விட்டுவிட்டு வேறிடம் சென்றுவிட்டார். இதனைக் கண்டு ஆச்சரியமுற்ற அவன் அவரை வேகமாகப் பின்தொடர்ந்து சென்று 'ஏன் என்னை அவ்வாறு விட்டு வந்தீர்கள்?' என வினவினான். அப்போது அவர், 'நீ இறைவனின் எதிரி என்பதால் உன்னைக் கொலைசெய்யத் துணிந்தேன். ஆனால், நீ என்னில் காறி உமிழ்ந்த போது எனது எதிரியாக மாறிவிட்டாய். இந்நிலையில், நான் உன்னைக் கொலை செய்தால் சுயநலத்துக்காகக் கொலை செய்ததாக அமையும். அல்லாஹ்விடம் கூலி இல்லாமல் போய் விடும். எனவே தான் நான் உன்னை விட்டு விட்டேன்' என்றார்கள்.

எனவே எமது முன்னோர்களின் மேற்போன்ற முன்மாதிரிகளைப் பின்பற்றி நாமும் எமது ஈமானைப் பலப்படுத்துவதோடு அமல்களைச் சீர்செய்துகொள்வோம்.

### பயிற்சி

1. ஈமானுக்கும் அமலுக்குமிடையிலான தொடர்பை விளக்குக.
2. அல்குர்ஆனின் 18:110 ஆம் வசனம் அருளப்படுவதற்குக் காரணமாய் அமைந்த நிகழ்வு யாது?
3. நற்செயல் புரிவதில் முஃமினுக்கும் முஃமினல்லாதவருக்குமிடையில் உள்ள வேறுபாடுகளை அட்டவணைப்படுத்துக.
4. ஸாலிஹான அமல்கள் என்பதன் மூலம் யாது விளங்கிக் கொள்கிறீர்?
5. பாடத்தில் தரப்பட்டுள்ள அல்குர்ஆன், ஹதீஸ்களில் வந்துள்ள நல்லமல்களைப் பட்டியல் படுத்துக.

3

# ரிஸாலத்தும் ஹிதாயத்தும்





இறைதூதர்கள் எனப்படுபவர்கள் அல்லாஹ்வினது வழிகாட்டலை உலகுக்கு எத்தி வைக்கும் பணியை மேற்கொண்டவர்களாவர். அவர்கள் மூலமாகவே மனித சமூகம் இறைவழிகாட்டலைப் பெற்றுக் கொண்டது. அவர்களுக்கு அல்லாஹ்வினால் வழங்கப்பட்ட வழிகாட்டல்கள், போதனைகளே **ரிஸாலத்** (இறைதூது) எனப்படுகின்றது. இந்த ரிஸாலத் மனிதன் நேர்வழியில் நடப்பதற்கு இன்றியமையாதது. அல்லாஹ் நாடியவர்களுக்கு மட்டுமே இதனை ஏற்று வழிபடும் மனோபக்குவம் கிடைக்கப் பெறுகிறது. இதனையே **ஹிதாயத்** எனக் கூறுவர். இதனைப் பின்வரும் ஆதாரங்கள் ஊடாக விளங்கிக்கொள்ள முடியும்.

1. மனித அறிவானது தொழில்நுட்ப வளர்ச்சியிலும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களிலும் வியத்தகு சாதனைகளை நிலைநாட்டி வருகின்றது. ஆயினும், ஒழுக்க விழுமியங்களைப் பொறுத்தவரையில் தனியாக உறுதியான வழிகாட்டல்களை வழங்கும் ஆற்றலை அது பெறவில்லை. எனவே, உயர்ந்த ஒழுக்க விழுமியங்களை அறிந்துகொள்ளவும் அவற்றைப் பேணிவரவும் இறை வழிகாட்டல் அவசியமாகின்றது. மேலும் மறைவான அம்சங்கள் பற்றிய அறிவைப் பெறவும், அவற்றின்மீது நம்பிக்கை கொள்ளவும் இறை வழிகாட்டல்கள் அவசியமாகின்றன. பின்வரும் அல்குர்ஆன் வசனம் இதனைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.



*'யார் அல்லாஹ்வை இறுகப் பற்றிக் கொள்கின்றாரோ அவர் நேரான வழியை நிச்சயம் பெற்றுக்கொள்வார்.' (3:101) எனக் கூறியுள்ளது. அவ்வாறே இறைவனது வழிகாட்டலை ஏற்காது விதண்டாவாதம் புரிபவர்களைப் பற்றி அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது. அவர்களை நோக்கி 'அல்லாஹ் இறக்கிய (இவ்வேதத்)தைப் பின்பற்றுங்கள். எனக் கூறினால் அதற்கு அவர்கள், அன்று எங்கள் மூதாதைகள் எதன் மீது இருக்கக் கண்டோமோ அதனையே பின்பற்றுவோம் என்று கூறுகின்றனர். (என்னே) அவர்களது மூதாதைகளை ஷைத்தான் நரக வேதனையின் பக்கம் அழைத்து (அவர்களும் அதன்பால் சென்று) இருந்தாலுமா? (இவர்கள் அவர்களைப் பின்பற்றிச் செல்வார்கள்!)' (31:21)*

*2. மனிதன் படைக்கப்பட்டதன் நோக்கம் மிகச் சரியாக உணர்த்தப்பட வேண்டும். இல்லாதபோது, மனிதன் ஆசைகளுக்கு அடிமையாகி உலக வாழ்வை வீணாக்கிக் கொள்வான். மறுமையிலும் இழிவுறுவான். இந்நிலையில், அவனை விசாரிப்பதோ தண்டிப்பதோ நியாயமானதாக இருக்க மாட்டாது. எனவே, மறுமையில் அவன் தன்னைத் தண்டிப்பது நியாயமற்றது என வாதிட்டாலும் கூட அதனைப் பிழையாகக்கொள்ள முடியாது. ஆயினும், அல்லாஹ் நீதமானவன் எந்தவொரு ஆன்மாவையும் அநியாயமாகத் தண்டிக்கமாட்டான். எனவேதான், தனது தூதர்களை அனுப்பி ரிஸாலத்தின் மூலமாக மக்கள் படைக்கப்பட்ட நோக்கத்தை விளக்கி, அதனடிப்படையில் வாழ வழிகாட்டி யுள்ளான். 'அவர் வருகைக்கு முன்பே ஏதேனும் ஒரு வேதனையை இறக்கி அவர்களை நாம் அழித்திருந்தால், அப்போது அவர்களே கூறுவர்.. எங்கள் இறைவனே! எங்களிடம் ஒரு தூதரை நீ அனுப்பியிருக்கக் கூடாதா? அவ்வாறு அனுப்பியிருந்தால் இழிவிற்கும் கேவலத்திற்கும் நாங்கள் ஆளாகும் முன்பே உன் வசனங்களைப் பின்பற்றியிருப்போமே!' (20:134) என்ற வசனம், இறைவழிகாட்டல் வழங்கப்பட்ட பின்னரே வெகுமதியோ தண்டனையோ அல்லாஹ்வினால் வழங்கப்படும் என்பதைப் புலப்படுத்துகிறது.*

*3. மனித சமூகம் நேர்வழியில் நடைபோட சிறந்த முன்மாதிரி அவசியமாகும். மனித உள்ளங்களில் வெறும் பிரச்சாரம் ஏற்படுத்தும் தாக்கத்தை விட நடைமுறை முன்மாதிரி பெருந்தாக்கத்தை ஏற்படுத்தும். அவ்வாறான தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியவர்களாக இறைத்தூதர்கள் இருந்திருக்கிறார்கள். அதன் மூலம் ரிஸாலத் நேர்வழிக்கான ஊடகமாக அமைகிறது என்பதற்கு அவர்கள் சான்றாக அமைந்திருக்கிறார்கள். எனவேதான், அல்குர்ஆன் '(நபியே!) இவர்கள் அனைவரையும் அல்லாஹ் நேரான வழியில் செலுத்தினான். ஆகவே அவர்களுடைய நேரான வழியை நீங்களும் பின்பற்றுங்கள்' (6:90) என அவர்களைப் பார்த்துப் பிரஸ்தாபிக்கின்றது.*

*4. மனித வாழ்வுக்கு வழிகாட்டும் அனுமதி மனித அறிவுக்கு மாத்திரம் வழங்கப் பட்டிருக்குமாயின், மனித சமூகம் பல்லாயிரம் பிரிவுகளாகப் பிரிந்திருக்கும். ஒற்றுமை என்பது அசாத்தியமான ஒன்றாக மாறியிருக்கும். ரிஸாலத்தானது இந்நிலையிலிருந்து மனித சமூகத்தைப் பாதுகாக்கின்றது. அவர்கள் அனைவரும் கண்டிப்பாக ஒற்றுமைப்பட வேண்டிய இடங்களை அடையாளப்படுத்தி அவர்களை ஒற்றுமைப்படுத்தியிருக்கிறது.*

*மனித சமூகத்துக்கு இறைவழிகாட்டல் இன்றியமையாதது என்பதனால் இறைவன் ஆரம்பம் முதலே இறைத்தூதர்களை அனுப்பி வந்துள்ளான். ஸுஹுபுகளையும் வேதங்களையும் இறக்கியுள்ளான்.*

ஒரு முஸ்லிம் இறைவனிடமிருந்து அருளப்பட்ட வேதங்கள் அனைத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். இதற்கு 'இவர்கள் அனைவரும் அல்லாஹ்வையும் அவனுடைய மலக்குகளையும் அவனுடைய வேதங்களையும் மற்றும் அவனுடைய தூதர்களையும் நம்புகின்றனர்.' (2:285) என்பன போன்ற வசனங்கள் சான்றாக அமைகின்றன.

வேதங்களுக்கு முன்னர் அருளப்பட்ட ஸுஹுபுகளின் எண்ணிக்கை நூற்றுப் பத்து எனக் குறிப்பிடப்படுகிறது. அவை:

- ★ ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 10
- ★ ஷீத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 50
- ★ இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 30
- ★ இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 10
- ★ மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 10 ஆகியனவாகும்.

இவற்றுள், இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம், மூஸா அலைஹிஸ்ஸலாம் ஆகியோருக்கு வழங்கப்பட்ட ஸுஹுபுகளைப் பற்றி மாத்திரமே அல்குர்ஆன் பிரஸ்தாபித்துள்ளது.

இவ்வாறே,

- ★ மூஸா அலைஹிஸ்ஸலாம்அவர்களுக்கு தவ்ராத் வேதமும்,
- ★ தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஸபூர் வேதமும்,
- ★ ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இன்ஜீல் வேதமும்,
- ★ முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு புர்கான் வேதமும் அருளப்பட்டுள்ளன.

மேற்கூறப்பட்ட அனைத்து வேதங்களும் அல்லாஹ்விடமிருந்தே அருளப்பட்டதாக நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அதனுடன் இறுதி வேதமாகிய அல்குர்ஆனைப் பின்பற்றுவதே நேர்வழிக்கான இறுதித் தெரிவு என்பதிலும் உறுதிகொள்ள வேண்டும்.

### பயிற்சி

1. வேதங்கள், ஸுஹுபுகள் வழங்கப்பட்ட நபிமார்களின் பெயர்களைப் பட்டியல்படுத்துக.
2. மனித சமூகத்துக்கு நேர்வழிகாட்ட ரிஸாலத் அவசியப்படுவதற்கான நியாயங்களை எடுத்துக்காட்டுக.

4



# அத்தஹாரத் - சுத்தம்



## சுத்தத்தின் முக்கியத்துவம்

இஸ்லாம் முழு வாழ்க்கைக்குமான வழிகாட்டியாகும். அது மனித வாழ்வின் சகல துறைகளுக்குமான போதனைகளை, வழிகாட்டல்களை வழங்கியுள்ளது. அந்த வகையில் இஸ்லாம் அதனைப் பின்பற்றும் ஒவ்வொரு முஸ்லிமிடமும் சுத்தத்தைக் கடைப்பிடிக்குமாறு வலியுறுத்துகின்றது. சுத்தமாக இருப்பதை நன்மையை ஈட்டித்தருகின்ற இபாதாவாகவும் கருதுகின்றது.

அல்லாஹ் எப்போதும் சுத்தமாக இருப்பவர்களையே நேசிப்பதாக அல்குர்ஆனில் குறிப்பிடுகின்றான்.

'நிச்சயமாக அல்லாஹ் பரிசுத்தமானவர்களையே நேசிக்கின்றான்' (09:108)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆரம்பத்தில் அருளப்பட்ட ஸூறா முத்தஸ்ஸிரின் கீழ்வரும் வசனமும் சுத்தத்தின் அவசியத்தை உணர்த்தி நிற்கின்றது.

'(நபியே) உமது ஆடைகளைத் தூய்மையாக வைத்திருப்பீராக' (74:04)

அதேபோல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், சுத்தத்தை ஈமானின் அரைப் பகுதியாகக் குறிப்பிட்டு அதன் முக்கியத்துவத்தை உணர்த்தியுள்ளார்கள்.

'சுத்தம் ஈமானின் பாதியாகும்' (முஸ்லிம்)

ஒரு முஸ்லிம் தன் அன்றாட வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் சுத்தத்தைப் பேணி நடப்பதை வலியுறுத்தும் இஸ்லாம், தொழுகை, இஃதிகாப் போன்ற பல பிரதான இபாதத்களை நிறைவேற்றுவதற்கான அடிப்படை நிபந்தனையாகவும் அதனைக் குறித்துக் காட்டியுள்ளது. இதனைப் பின்வரும் ஹதீஸும் உறுதிப்படுத்துகின்றது.

'சுத்தம் இல்லாமல் அல்லாஹ் எந்தவொரு தொழுகையையும் ஏற்றுக்கொள்வதில்லை' (முஸ்லிம்)

சுத்தம் (தஹாரத்) என்பதை இஸ்லாம் விரிந்த கண்ணோட்டத்தில் பார்க்கின்றது. ஒரு முஸ்லிம் புறச் சுத்தத்தில் எந்தளவு கரிசனை செலுத்தவேண்டுமோ அதே போன்று அகச் சுத்தத்திலும் அக்கறை காட்டவேண்டும் என அது போதிக்கின்றது. ஒரு முஸ்லிமின் உடல் எவ்வாறு அசுத்தங்களிலிருந்து சுத்தமாக இருக்க வேண்டுமோ அவ்வாறே அவனது உள்ளமும் பொறாமை, பெருமை, தப்பெண்ணம், குரோதம் போன்ற மோசமான பண்புகளிலிருந்து பரிசுத்தமாகி இருக்கவேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றது.

## நீரும் அதன் வகைகளும்

மனிதனில் புறச் சுத்தத்தை ஏற்படுத்த இன்றியமையாதது நீர் ஆகும். நீரின் வகைகள், அதனைப் பயன்படுத்துவதில் உள்ள வரையறைகள் பற்றியெல்லாம் இஸ்லாம் மிகத் தெளிவாக விளக்கியுள்ளது.

இஸ்லாமிய சட்ட அறிஞர்கள் நீரைப் பின்வருமாறு வகைப்படுத்துகின்றனர்.

1. அல் மாஉத் தஹூர் (மிகச் சுத்தமான நீர்)
2. அல் மாஉத் தாஹிர் (சுத்தமானவை கலந்த நீர்)
3. அல் மாஉல் முதனஜ்ஜிஸ் (அசுத்த நீர்)

### 1. அல் மாஉத் தஹூர் (மிகச் சுத்தமான நீர்)

இது தன்னிலே சுத்தமானது. ஏனையவற்றையும் சுத்தப்படுத்தக்கூடியது. நீரின் இயற்கை அமைப்பில் எந்தவொரு மாற்றமும் இங்கு ஏற்பட்டிருக்காது. இதில் பலவகையான நீர் அடங்கும்.

♦ படிவுவீழ்ச்சி மூலம் பெறப்படும் நீர் (மழை, பனி, ஆலங்கட்டி)

♦ கடல் நீர்

♦ ஆற்று நீர், ஊற்று நீர்

♦ ஓரிடத்தில் நீண்டகாலம் தேங்கியிருந்ததால் இலை, பாசி, கனிப்பொருட்கள் போன்றவற்றால் மாற்றமடைந்த, பெரிய அளவில் காணப்படும் நீர் (உ+ம் குளத்து நீர்)

இவ்வகை நீர் வுழூ செய்தல், கடமையான குளிப்பு, ஜனாஸாவைக் குளிப்பாட்டல் போன்ற மார்க்கக் கடமைகளை நிறைவேற்றவும், நஜீஸ்களை நீக்கவும் பயன்படுத்தப்படும்.

இவ்வகை நீர் மூன்று பிரிவுகளாக வகைப்படுத்தப்படுகிறது.





***1 அல் மாஉல் கஸீர் (அதிக நீர்)***

இது குல்லதைன் அளவிலும் கூடுதலாக உள்ள நீராகும். குல்லதைன் என்பது 210 லீற்றரை விடக் கூடிய அளவு நீரைக் குறிக்கும். இவ்வாறான நீரில் ஒரு நஜிஸ் சேர்ந்து விடுவதால் மாத்திரம் அந்த நீர் நஜிஸாக மாட்டாது. மாற்றமாக அந்த நீரின் நிறம், மணம், சுவை ஆகிய பண்புகளில் ஏதேனும் ஒன்றிலேனும் மாற்றம் ஏற்பட்டால் மட்டுமே அது நஜீஸாகிவிடும். இவ்வகை நீர் **அல்மாஉல் முத்லக்** என்றும் அழைக்கப்படும்.

***மீண்டும் எவ்வாறு பயன்படுத்துவது?***

இந்த நீர் நாளடைவில் தானாகவோ அல்லது மேலதிகமாக நீரைச் சேர்ப்பதன் மூலமாகவோ அந்த நீரில் ஏற்பட்டிருந்த மாற்றம் நீங்கி மிகச் சுத்தமான நீராக (தஹூர்) மாற்றம் அடையலாம். அப்போது இந்நீரை மீண்டும் வுழூ, குளிப்பு போன்ற சன்மார்க்கத் தேவைகளுக்காகப் பயன்படுத்தலாம்.

***2) அல் மாஉல் கலீல் (குறைந்த நீர்)***

குல்லதைன் அளவை விடக் குறைந்த மிகச் சுத்தமான நீர் இவ்வாறு அழைக்கப்படு கிறது. இவ்வாறான நீரில் நஜீஸ் சேர்ந்து, நிறம், மணம், சுவை ஆகியவற்றுள் ஏதேனும் மாற்றம் ஏற்படாவிட்டாலும் கூட அந்த நீர் நஜீஸாகி விடும். எனினும் இரத்த ஓட்டம் இல்லாத ஈ, எறும்பு, தேனீ விழுவதால் நீர் நஜீஸாவதில்லை.

***மீண்டும் எவ்வாறு பயன்படுத்துவது?***

இந்நீருக்கு குல்லதைன் அளவு வரும் வரை மேலதிக நீரைச் சேர்த்து அதன் நிறத் திலோ மணத்திலோ சுவையிலோ எவ்வித மாற்றமும் காணப்படாத போது அதனை மீண்டும் சன்மார்க்கத் தேவைகளுக்காகப் பயன்படுத்தலாம்.

***3) அல் மாஉல் முஸ்தஃமல் (பயன்படுத்தப்பட்ட நீர்)***

குல்லதைன் அளவிலும் குறைந்த மிகச் சுத்தமான நீரை பர்ழான குளிப்பு மற்றும் வுழூ செய்தல் போன்ற பர்ளான கடமைகளில் பயன்படுத்தினால் அந்நீர் இவ்வாறு அழைக் கப்படும். இந் நீரை இன்னொரு பர்ளை நிறைவேற்றுவதற்காகக் பயன்படுத்த முடியாது.

***மீண்டும் எவ்வாறு பயன்படுத்துவது?***

இந் நீருக்கு மேலதிகமாக சுத்தமான நீரை ஊற்றி குல்லதைன் அளவை அடையச் செய்து மிகச் சுத்தமான நீராக (தஹூர்) மாற்றிய பின்னர் இதனை மீளவும் சன்மார்க்கத் தேவைகளுக்காகப் பயன்படுத்த முடியும்.

## 2. அல் மாஉத் தாஹிர் (சுத்தமான நீர்)

தன்னிலே சுத்தமாயினும் ஏனையவற்றைச் சுத்தம் செய்யாத நீர் இவ்வாறு அழைக்கப்படும். நீரில் சுத்தமான பொருட்கள் சேர்வதன் ஊடாக அதன் நிறத்தில் அல்லது மணத்தில் அல்லது சுவையில் மாற்றம் ஏற்பட்டிருக்கும். தேநீர், பன்னீர், பழச்சாறு, மென்பானங்கள் போன்ற திரவங்கள் இதில் அடங்கும். இளநீர் போன்று இயல்பாகவே நீரின் இயற்கைத் தன்மையிலிருந்து மாற்றம் பெற்றனவும் இவ்வகையில் சேரும்.

இவற்றை உணவு, மருந்து போன்ற வேறு தேவைகளுக்காகப் பயன்படுத்த முடிந்த போதிலும் மார்க்கக் கடமைகளுக்காகச் சுத்தம் செய்வதற்குப் பயன்படுத்த முடியாது.

### 3. அல் மாஉல் முதனஜ்ஜிஸ் (அசுத்த நீர்)

இது தன்னிலும் சுத்தமற்றது. ஏனையவற்றையும் சுத்தப்படுத்தாது. சிறுநீர் போன்ற இயல்பிலே நஜீஸான திரவங்களும், சாக்கடை நீர் போன்ற நஜீஸ் கலந்த நீரும் இதில் அடங்கும். இவ்வகை நீரை மார்க்கக் கடமைகளுக்காகவோ சுத்தம் செய்வதற்காகவோ பயன்படுத்த முடியாது.

## தொடக்குகளும் அவற்றை அகற்றலும்

ஒரு முஸ்லிம் சிறுதொடக்கு, பெருந் தொடக்கு நிலையை அடைதல் 'ஹதஸ்' எனப்படுகின்றது. இந்நிலைமைகளில் இஸ்லாம் இரு வகையான சுத்தம் செய்யும் வழிமுறைகளை காட்டித்தந்துள்ளது. இவ் வழிமுறைகள் சில கடமையாகவும் சில இபாதத்களை நிறைவேற்றுவதற்கு அத்தியவசியமாகவும் அமைந்துள்ளன.

### 1. சிறு தொடக்கிலிருந்து சுத்தமாகும் முறை

சிறு தொடக்கிலிருந்து சுத்தமாகும் முறையை வுழூ என்பர். முகம், கைகள், தலை, கால்கள் போன்ற உறுப்புக்கள் இதில் தொடர்புபடுகின்றன. சிறுதொடக்கை ஏற்படுத்தும் சந்தர்ப்பங்கள் அல்லது வுழூ முறியும் சந்தர்ப்பங்கள் பற்றியும் வுழூவின் பர்ளுகள், ஸுன்னத்கள், ஒழுங்குகள் பற்றியும் நீங்கள் ஏற்கனவே அறிந்து வைத்திருப்பீர்கள்.

### 2. பெருந் தொடக்கிலிருந்து சுத்தமாகும் முறை

பெருந்தொடக்கிலிருந்து சுத்தமாகும் முறையாகக் குளிப்பு (உஸ்ல்) உள்ளது. முழு உடம்பையும் நீரினால் சுத்தப்படுத்தும் வழிமுறையே இது. ஆண் பெண் உடலுறவு கொள்ளல், விந்து வெளிப்படல், ஹைழ், நிபாஸ் ஏற்பட்டு நின்றுவிடல். புதிதாக இஸ்லாத்தில் நுழைதல், மரணமடைதல் போன்ற பல்வேறு சந்தர்ப்பங்களில் குளிப்பு ஒரு முஸ்லிம் மீது கடமையாகி விடுகின்றது.

தொடக்கிலிருந்து நீங்குவதற்காக குளிப்பதும், வுழூச் செய்வதும் இபாதத்களாகும். அவற்றை நிறைவேற்றுவதற்காக நற்கூலி உண்டு.

### ★ சுத்தம் செய்யும் முறைகளில் காணப்படும் சலுகைகள்

இஸ்லாம் இலகுவான மார்க்கம் என்ற வகையிலும் நடைமுறைக்குப் பொருத்தமான மார்க்கம் என்ற வகையிலும் தொடக்குகளிலிருந்து சுத்தம் செய்யும் செயற்பாட்டில் (வுழூ செய்வதில் அல்லது குளிப்பதில்) தடைகள் ஏற்படும்போது சலுகைகள் சிலவற்றையும் தந்துள்ளது. அவ்வாறான சலுகைகளுள் தயம்மும், ஜபீரத் என்பன முக்கியமானவையாகும். இவையிரண்டும் குர்ஆன், ஸுன்னாவினால் உறுதிபடுத்தப்பட்டுள்ளன.

**1. தயம்மும்**

தயம்மும் என்பது கடமையான வுழூவுக்காகவோ, குளிப்புக்காகவோ நீரைப் பயன்படுத்த முடியாதபோது அதற்குப் பதிலாகச் சுத்தமான மண்ணைப் பயன்படுத்தி முகம் மற்றும் இரு கைகளை மஸ்ஹு செய்வதைக் (தடவுவதை) குறிக்கும். நோய் காரணமாகவோ, நீரின்மை காரணமாகவோ, நீரைப்பயன்படுத்த முடியாத சந்தர்ப்பங்களில் அல்லது குடிப்பதற்கு மாத்திரம் நீர் இருக்கும் நிலையிலோ தயம்மும் செய்துகொண்டு தொழுகை முதலிய இபாதத்களை நிறைவேற்ற முடியும்.



*2. ஜபீரத்*

*ஜபீரத் என்பது உடலுறுப்புக்களில் காயம் ஏற்பட்டதற்காகப் போடப்படும் கட்டு (பெண்டேஜ்) அல்லது பிளாஸ்டரைக் குறிக்கும். வுழூ செய்த நிலையில், வுழூவுடைய உறுப்புகளில் இக்கட்டு போடப்பட்டிருந்தால் அதனைக் கழுவுவதற்குப் பதிலாகத் தயம்மும் செய்துகொள்ளலாம். இதன்போது வுழூவின் ஏனைய உறுப்புக்களை நீரைப் பயன்படுத்தி வுழூ செய்து கொள்ளவேண்டும்.*





**பயிற்சி**

1. சுத்தம் பற்றி வந்துள்ள ஓர் அல்குர்ஆன் வசனத்தையும் ஒரு ஹதீஸையும் குறிப்பிடுக.
2. நீரின் பிரதான மூன்று வகைகளையும் ஒவ்வோர் உதாரணத்துடன் எழுதுக.
3. 'ஹதஸ்' என்றால் என்ன? இரு வகை ஹதஸ்களிலிருந்தும் சுத்தம் பெறும் இரு பிரதான வழிகளும் யாவை?
4. தயம்மும் செய்வதற்கான இரண்டு சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுக.
5. குளிப்பதற்குப் பயன்படுத்திய குல்லதைன் அளவை விடக் குறைந்த நீரை மீண்டும் வுழூச் செய்வதற்காகப் பயன்படுத்த வேண்டுமாயின் என்ன செய்ய வேண்டும்?

# 5

# அந் நஜாஸத் - அசுத்தம்

ஒரு முஸ்லிம் இபாதத்களை நிறைவேற்றுவதற்குச் சுத்தமாக இருப்பதன் அவசியம் பற்றி முன்னைய பாடங்களில் பார்த்தோம். ஒரு முஸ்லிம் எப்போதும் சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பதற்கு அவன் நஜீஸ்களிலிருந்து (அசுத்தங்களிலிருந்து) தவிர்ந்து வாழ்வது அவசியமானது. அறபு மொழியில் 'அந் நஜாஸத்' என்ற சொல் 'அசுத்தம்' என்ற கருத்தைக் கொடுக்கின்றது.

நஜீஸிலிருந்து சுத்தமாகும் முறைகள் பற்றியெல்லாம் இஸ்லாம் எமக்குத் தெளிவாகச் சொல்லித்தந்துள்ளது. இப்பாடத்தில் நஜீஸ்கள் பற்றி அறிந்துகொள்வோம்.

### நஜிஸின் வகைகள்

நஜிஸ்களை அவற்றைச் சுத்தம் செய்யும் முறைகளைக் கவனத்திற்கொண்டு மூன்றாகப் பிரித்து நோக்குவர்.

1. சாதாரண நஜீஸ்
2. இலகுவான நஜீஸ்
3. கடுமையான நஜீஸ்



### *1. சாதாரண நஜீஸில் அடங்குபவை*

- *மலம்*
- *சிறுநீர்*
- *இரத்தம்*
- *சீழ்*
- *வாந்தி*
- *மதி*
- *வதி*
- *மதுபானம்*
- *ஆழ்ந்த தூக்கத்தின்போது வாயிலிருந்து வடியும் வீணீர்*
- *சாப்பிட அனுமதிக்கப்படாத பிராணிகளின் பால்*
- *பிராணிகளின் இறந்த உடல்*
- *உயிருள்ள பிராணிகளிலிருந்து பிரிந்த பகுதிகள்*

**விதிவிலக்குகள்**

- *தானாகவே இறந்த மீன், வெட்டுக்கிளி (இவை சாப்பிட அனுமதிக்கப் பட்டுள்ளன)*
- *இரத்தம் சிந்தாத பிராணிகளான எறும்பு, தேனீ போன்றன.*
- *சாப்பிட அனுமதிக்கப்பட்ட இறந்த பிரணிகளின் எலும்பு, கொம்பு, நகம், உரோமம், சிறகு போன்றவை.*
- *மிகச் சிறிய அளவில் உடையில், உடம்பில் படும் இரத்தம்*
- *தாய்ப்பால்*

#### சுத்தம் செய்யும் முறை

மேலே குறிப்பிடப்பட்டுள்ள நஜீஸ் உடலிலோ, ஆடையிலோ படிந்துவிட்டால் குறித்த நஜீஸை முதலில் அவ்விடத்திலிருந்து நீக்கிவிட வேண்டும். பின்னர் நஜீஸின் சுவை, நிறம், மணம் ஆகிய மூன்றும் நீங்கும் வரை கழுவ வேண்டும். நீரால் மாத்திரம் நஜீஸை நீக்க முடியாதபோது சவர்க்காரம், சலவைத்தூள் போன்றவற்றைப் பயன்படுத்த வேண்டும். சுத்தம் செய்தபின்னரும் குறித்த நஜீஸின் நிறம், மணம் ஆகிய இரண்டுமோ அல்லது சுவை மட்டுமோ எஞ்சியிருந்தாலும் அது சுத்தமாகக் கருதப்படமாட்டாது.



### 2. இலகுவான நஜீஸில் அடங்குபவை

தாய்ப்பாலை மட்டும் உணவாகக் உட்கொள்ளும் இரண்டு வயதுக்குட்பட்ட ஆண் குழந்தையின் சிறுநீர்.

#### சுத்தம் செய்யும் முறை

இத்தகைய நஜீஸை சுத்தம் செய்யும்போது குறித்த நஜீஸைப் பிழிந்து அகற்றிய பின்னர், அவ்விடத்தில் சுத்தமான நீரைப் போதியளவு தெளித்துவிடுவது போதுமானது.

### 3. கடுமையான நஜீஸில் அடங்குபவை

நாய், பன்றி என்பவற்றின் மலம், சலம், உமிழ்நீர், வியர்வை, இரத்தம் போன்ற அனைத்தும் இதில் அடங்கும்.

#### சுத்தம் செய்யும் முறை

இந்நஜீஸை சுத்தம் செய்யும்போது முன்னர் கூறப்பட்ட முறைகளைக் கடைப்பிடிப்பதுடன் இவற்றுக்கு மேலதிகமாக மண் கரைசலை உபயோகித்தல், ஏழு தடவைகள் நீரூற்றிக் கழுவுதல் என்பவற்றையும் கைக்கொள்ள வேண்டும். முதல் தடவையிலோ அல்லது இடையிலோ மண் கரைசலை உபயோகிக்கலாம். கடுமையான நஜீஸ் படிந்துள்ள இடத்தில் நஜீஸின் மூவகைப் பண்புகளும் புலப்படாவிட்டாலும் கூட ஏழு தடவைகள் கழுவுதல் வேண்டும்.

பரந்த (கடல், குளம் போன்ற) நீர் நிலைகளில் சுத்தம் செய்யும்போதும், ஓடும் நீரில் சுத்தம் செய்யும்போதும் நீரைச் சிறிது கலக்கி அந்நீரில் அமிழ்த்திய பின் ஆறு தடவைகள் நீரினுள் அலசியெடுத்தல் போதுமானது.

### நஜீஸானவற்றைச் சுத்தம் செய்தல்

பொதுவாக நஜீஸானவற்றைச் சுத்தம் செய்ய முடியாது. ஆயினும் ஒருசில நஜிஸ்களைச் சுத்தம் செய்து பயன்படுத்த முடியும். அவ்வாறானவற்றுக்கு உதாரணமாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

#### விலங்குகளின் தோல்

நாய், பன்றி தவிர்ந்த ஏனைய விலங்குகளின் தோல்களைப் பொறுத்த வரை அவற்றை நன்கு பதனிடுவதன் மூலம் உணவு தவிர்ந்த ஏனைய பல்வேறு தேவைகளுக்காகப் பயன்படுத்த முடியும்.

#### மதுபானம் (கள்)

இயற்கையாக எடுக்கப்படுகின்ற வேறு கலவைகள் சேர்க்கப்படாத கள், தானாகவே வினாக்கிரியாக மாறிவிட்டால் அதனை உணவுத் தேவைகளுக்குப் பயன்படுத்த முடியும்.

#### நஜிஸ் விழுந்த உறைந்த பால்

பால் உறைந்து நெய், பட்டர், சீஸ் போன்ற கட்டியான நிலையில் இருந்து அதில் நஜிஸ் விழுந்தால் அந்நஜீஸ் படிந்த பகுதியை எடுத்துவிட்டு எஞ்சியதைப் பயன்படுத்த முடியும்.

**பயிற்சி**

1. நஜீஸின் பிரதான வகைகளை உதாரணங்களோடு குறிப்பிடுக.
2. கடுமையான நஜீஸ் ஒருவரது ஆடையில் படிந்துவிட்டால் அதனை நீக்க என்ன செய்ய வேண்டும்?
3. உண்பதற்கு தடை செய்யப்பட்ட நாய், பன்றி தவிர்ந்த ஏனைய விலங்குகளின் தோல்களைச் சுத்தப்படுத்த யாது செய்ய வேண்டும்?
4. பின்வரும் விடயங்கள் குறித்த இஸ்லாமிய சட்டத்தீர்ப்புகளைக் கண்டறிந்து எழுதுக.

    அ. இறந்துபோன ஒரு மாட்டின் தோலைக் கொண்டு மேளம் தயாரித்தல்

    ஆ. நுளம்பை அடிப்பதன் மூலம் உடலில் இரத்தம் படுதல்

    இ. தயிர் மீது ஒரு நஜீஸ் விழுதல்

    ஈ. தானாக இறந்த, அழுகாத நிலையில் உள்ள ஒரு வெட்டுக்கிளியை சாப்பிடுதல்

6



# இபாதத்



ஒரு முஸ்லிம் மூன்று வகையான பொறுப்புக்களை நிறைவேற்றுமாறு பணிக்கப்பட்டுள்ளான். அவை *1.* இபாதத் *2.* இமாரத் *3.* கிலாபத் என்பனவாகும்.

1. இபாதத் என்பது அல்லாஹ்வை வணங்கி வழிப்படுவதையும்,
2. இமாரத் என்பது பூமியை வளப்படுத்துவதையும்,
3. கிலாபத் என்பது பூமியில் அல்லாஹ்வின் பிரதிநிதியாக இருந்து அதனை நிருவகிப்பதையும் குறிக்கும்.

இவற்றுள் இபாதத் என்பது முதலும் முதன்மையானதுமாகும்.

## இபாதத் என்பது

'இபாதத்' எனும் அறபு மொழிச் சொல் 'அபத' எனும் வினையிலிருந்து வருகின்றது. இச் சொல் - வணங்கினான், கட்டுப்பட்டான், அடிபணிந்தான் என்ற கருத்துக்களைக் கொடுக்கின்றது. இதன்படி, இபாதத் என்பது - வணங்குதல், வழிபடுதல், கீழ்ப்படிதல் எனப் பொருள்படுகின்றது. இஸ்லாமிய வழக்கில் இபாதத் என்பதை **அல்லாஹ் எமக்கு ஏவியவற்றை எடுத்து நடப்பதன் ஊடாகவும் விலக்கியவற்றைத் தவிர்ந்து நடப்பதன் ஊடாகவும் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகும்** என வரைவிலக்கணப்படுத்துவர்.

இக்கீழ்ப்படிவு அல்லாஹ்வின் மீது கொண்ட அன்பின் காரணத்தால் ஏற்படுதல் வேண்டும். எனவே, இபாதத் என்பதை **அல்லாஹ் மீது கொண்ட உச்ச அன்புடன் கூடிய பூரண கட்டுப்பாடு** எனவும் கருத்துக்கொள்ளலாம்.

அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது...

'இன்னும் ஜின்களையும் மனிதர்களையும் என்னை வணங்கி வழிபடுவதற்காகவன்றி நான் படைக்கவில்லை' *(51:56)*

இதனடிப்படையில் நோக்கும்போது, இபாதத் முழு வாழ்வையும் உள்ளடக்கியது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். உண்மையில் இபாதத் என்பது, வரையறுத்த வணக்க வழிபாடுகள் உள்ளடங்கலாக நாம் அன்றாட வாழ்வில் செய்கின்ற சகல நற்கருமங்களையும் குறித்து நிற்கின்றது.



எனவே, எமது முழு வாழ்வும் இபாதத் ஆக அமைய வேண்டுமாயின் ஒவ்வொரு செயலையும் ஷரீஆவின் வழிமுறையில் அமைத்துக்கொள்வது அவசியமாகும். அப்போது தான் நாம் படைக்கப்பட்டதன் நோக்கத்தை நிறைவு செய்தவர்களாவோம்.

## இபாதத்களின் நோக்கம்

அல்லாஹ் எமக்கு விதியாக்கியுள்ள சகல இபாதத்களும் ஈருலகிலும் விமோசனம் பெறும் உயர் நோக்கம் கொண்டவை. தொழுகை, ஸக்காத், நோன்பு, ஹஜ் போன்ற அடிப்படையான இபாதத்கள், விதியாக்கப்பட்ட நோக்கங்கள் பற்றிய குர்ஆனின் கருத்துக் களைப் பின்வருமாறு தொகுத்து நோக்கலாம்.

- உள்ளத்தைப் பக்குவப்படுத்தி இறையச்சத்தை ஏற்படுத்துவது
- அல்லாஹ்வுடனான நெருக்கத்தை அதிகரிப்பது
- பாவமான காரியங்களிலிருந்து தவிர்ந்து வாழப் பயிற்றுவிப்பது
- தியாகம், பொறுமை, பிறர் நலன்பேணல் போன்ற நற்பண்புகளை வளர்ப்பது
- இறைதிருப்தியைப் பெற்று சுவனம் நுழைய வழியமைப்பது

## இபாதத்களின் வகைகள்

இபாதத்கள் இரண்டு பிரிவுகளாக வகைப்படுத்தப்படுகின்றன.

*1. அடிப்படையான, வரையறுக்கப்பட்ட இபாதத்கள்*

தொழுகை, ஸக்காத், நோன்பு, ஹஜ் முதலிய இபாதத்கள் இதில் அடங்கும். இவை ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு இரண்டு முக்கிய நிபந்தனைகள் உள்ளன. ஒன்று, அல்குர்ஆன், ஸுன்னாவின் அடிப்படையில் அமைந்திருப்பது. மற்றையது தூய எண்ணத்துடன் நிறைவேற்றப்படுவது.

இவ்வாறான இபாதத்களை,

1) **உடலோடு, செயலோடு தொடர்பானவை**

தொழுகை, நோன்பு, ஹஜ் போன்றன.

2) **உள்ளத்தோடு தொடர்பானவை**

இஃலாஸ், பொறுமை போன்றன.

3) **செல்வத்தோடு தொடர்பானவை**

ஸக்காத், ஸதகா, உழ்ஹிய்யா போன்றன.

4) **வார்த்தையோடு தொடர்பானவை**

திக்ர், குர்ஆன் திலாவத் போன்றன எனவும் நோக்குவர்.

இவ்வாறு வகைப்படுத்தப்பட்டாலும் இவற்றுள் சில ஏனைய சிலவற்றுடன் தொடர்புற்றிருப்பதையும் அவதானிக்கலாம். உதாரணமாக ஹஜ் என்பது உடலுடனும் செல்வத்துடனும் உள்ளத்துடனும் தொடர்புற்றிருப்பதைக் கூறலாம்.

### 2. அன்றாட வாழ்வோடு தொடர்பான இபாதத்கள்

உண்ணல், உறங்கல், தொழில் நடவடிக்கைகளில் ஈடுபடுதல் போன்ற நாளாந்த செயற்பாடுளில் இஸ்லாம் சொல்லும் நிபந்தனைகள் பேணப்படும் பட்சத்தில் அவை இபாதத்தாக மாறிவிடுகின்றன. உதாரணமாக ஒருவர் அல்லாஹ்வுக்காகத் தன் உடம்பைப் பலப்படுத்த ஹலாலான உணவு உட்கொள்வாராயின் அவர் சாப்பிடுவதும் இபாதத் ஆக அமையும்.

இவ்வாறான நாளாந்த நடவடிக்கைகள் இபாதத் என்ற அங்கீகாரத்தைப் பெறுவதற்குப் பின்வருவன நிபந்தனைகளாக அமைகின்றன.

#### அ) ஷரீஆவின் அனுமதி (சட்டதிட்டங்கள்)

எமது நாளாந்த, உலகியல் செயற்பாடுகள் இபாதத் வடிவம் பெற இஸ்லாத்தின் அனுமதி இன்றியமையாதது. உதாரணமாக, பொருளீட்டல் அல்லது உழைப்பு ஒரு இபாதத். ஆனால் இஸ்லாமிய ஷரீஆ அனுமதிக்காத மதுபான விற்பனை, வட்டி, சூதாட்டம் போன்ற எந்தவொரு செயலும் இபாதத் ஆக அமைய முடியாது.

#### ஆ) தூய்மையான எண்ணம் (இஃலாஸ்)

அல்லாஹ்வுக்காகவும் அவனது திருப்தியைப் பெறுவதற்காகவும் என்ற தூய எண்ணத்தோடு செய்யப்படும் செயல்களே இபாதத் ஆக அமையும். உதாரணமாக, உழைத்து வாழ வேண்டும், ஹலாலான முறையில் பொருள்தேட வேண்டும், இறைபாதையில் செலவழிக்க வேண்டும் போன்ற நல்ல நோக்கங்களோடு ஒருவர் ஆகுமாக்கப்பட்ட தொழிலில் ஆகுமான வழியில் ஈடுபடும் போது அத்தொழில் முயற்சி இபாதத் ஆக மாறிவிடுகின்றது.



### இ) ஷரீஆ வரையறைகளை மீறாதிருத்தல்

இஸ்லாம் எமது அன்றாட செயற்பாடுகளுக்குப் பல வரையறைகளை விதித்துள்ளது. அவற்றை மீறும் போது அவை இபாதத் ஆக அமையமாட்டாது. உதாரணமாக வியாபாரம் ஒரு இபாதத். ஆயினும் அது இபாதாவாக கணிக்கப்படுவதற்கு வட்டி, கலப்படம், பதுக்கல் போன்ற தடுக்கப்பட்ட விடயங்கள் தவிர்க்கப்பட்டதாய் அமைய வேண்டும்.

### ஈ) அடிப்படை வணக்கங்களுக்குத் தடையின்றி இருத்தல்

எமக்கு விதிக்கப்பட்டுள்ள பல அடிப்படையான இபாதத்கள் நேரம் வரையறுக்கப் பட்டவைகளாகவே உள்ளன. அவ்வாறான இபாதத்களுக்கு இடையூறு விளைவிப்பதாக அன்றாட செயல் ஒன்று அமைந்தால் அது இபாதத் என்ற எல்லையை விட்டும் வெளியே போய்விடும். உதாரணமாக, ஒருவரின் விளையாட்டு ஐவேளைத் தொழுகைகளை நிறைவேற்றத் தடையாக இருக்கும்போது அதில் ஏனைய நிபந்தனைகள் பூர்த்தியானாலும் அவ்விளையாட்டு இபாதத்தாகக் கருதப்படமாட்டாது.

### உ) நேர்த்தியாகவும் ஒழுங்காகவும் செய்தல்

இஸ்லாம் எப்போதும் ஒழுங்கையும் நேர்த்தியையும் பேணுகின்ற நடுநிலையான மார்க்கமாகும். இப்பண்புகளை மீறிய செயற்பாடுகளை அது ஆதரிப்பதில்லை. உதாரண மாக, விளையாட்டின் போது, சட்டதிட்டங்களைப் பேணாமை, தலைமைத்துவத்துக்குக் கட்டுப்படாமை போன்றன நடைபெறும்போது அது இபாதத் ஆகக் கருதப்படமாட்டாது.

இஸ்லாமிய சட்டவறிஞர்கள் இபாதத்களை அவற்றின் முக்கியத்துவத்திற்கேற்ப பின்வருமாறு பிரித்து நோக்குவர்.

### *1. பர்ழு*

கட்டாயமான இபாதத்களை இது குறிக்கும். இது இரு வகைப்படும்.

### *அ) பர்ழு ஐன்*

இது ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயமாகச் செய்யவேண்டிய விடயமாகும். இதனை நிறைவேற்றாது விடுபவர் குற்றவாளி ஆகிவிடுகிறார். ஐவேளைத் தொழுகை, ரமழான் நோன்பு, குடும்பப் பராமரிப்பு, போன்ற பல விடயங்கள் இதில் அடங்கும்.

### ஆ) பர்ழு கிபாயா

இதுவும் ஒவ்வொரு முஸ்லிமும் செய்யவேண்டிய விடயமாகும். ஆயினும், சமூகத்தில் சிலர் இதனை நிறைவேற்றிவிட்டால் ஏனையோர் மீதுள்ள கடமை நீங்கிவிடும். சமூகத்தில் போதியளவினர் இதனை நிறைவேற்றாதவிடத்து அனைவரும் பாவிகளாக மாறிவிடுவர். உதாரணமாக ஜனாஸாவுக்கான கடமைகள், மார்க்க அறிஞர்களை உருவாக்குதல், சமூகத்துக்குத் தேவையான விஞ்ஞானிகள், பெண் மகப்பேற்றியல் வைத்தியர்கள், பொறியியலாளர்கள் போன்ற துறைசார் நிபுணர்களை உருவாக்குதல்.

### 2. ஸுன்னத்

பர்ழுகளில் அடங்காத வணக்க வழிபாடுகள் இப்பிரிவில் உள்ளடங்கும்.

இவை பர்ழுகளுக்கு மேலதிகமாக நிறைவேற்றப்படுகின்ற இபாதத்களாகும். இவற்றை நிறைவேற்றுவதன் மூலம் அதிகமான நன்மையையும் இறை நெருக்கத்தையும் பெற்றுக்கொள்ளமுடியும். அத்துடன் பர்ழான இபாதத்களில் இடம்பெறும் குறைகளையும் நிவர்த்தி செய்துகொள்ளமுடியும். ஸுன்னத்தான தொழுகைகள், திக்ர், ஸலாம் கூறுதல், நோயாளிகளைத் தரிசித்தல் போன்ற பல விடயங்கள் இதில் அடங்கும்.

எனவே, நாம் எந்த நோக்கத்துக்காகப் படைக்கப்பட்டோமோ அதனை நிறைவு செய்யும் வகையில் எமது முழு வாழ்க்கையையும் இபாதத் ஆக மாற்றிக்கொள்ள முயற்சிப்போம்.

### பயிற்சி

1. சரி பிழை கூறுக.
   - அ. ஸலாம் கூறுவது வார்த்தையோடு தொடர்பான இபாதத்தாகும். ( )
   - ஆ. எல்லா வகையான இபாதத்களுக்கும் தூய எண்ணம் அவசியமாகும். ( )
   - இ. தகுதியானவர்கள் ஸக்காத்தை நிறைவேற்றுவது பர்ழு ஐனாகும். ( )
   - ஈ. மார்க்க அறிவு, உலக அறிவு படைத்த திறமையான ஆலிம்களை உருவாக்குவது பர்ழு கிபாயாவாகும் ( )
2. இபாதத் என்ற பதத்தின் விரிந்த கருத்து யாது?
3. மனிதன் படைக்கப்பட்டதன் நோக்கம் பற்றி அல்குர்ஆன் கூறும் கருத்துக்களை எடுத்துக்காட்டுக.
4. எமது அன்றாட செயற்பாடுகளை இபாதத்தாக மாற்றியமைக்க நாம் கருத்திற் கொள்ள வேண்டிய நிபந்தனைகள் யாவை?



## 7

# தொழுகையின் முக்கியத்துவம்






இஸ்லாம் கடமையாக்கியுள்ள அடிப்படை இபாதத்களில் தொழுகை முதன்மை யானதாகும். இதனாலேயே இஸ்லாம், தொழுகையை முஃமினின் அடையாளமாகவும், முஃமினுக்கும் காபிருக்கும் இடையிலான பிரிகோடாகவும் குறிப்பிடுகின்றது. தொழுகை விதியாக்கப்பட்ட முறையும், அது நிலைநாட்டப்படும் ஒழுங்கும் இஸ்லாத்தில் பிரதான கடமை என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

**கட்டாயக் கடமை:**

தொழுகை ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயம் நிறைவேற்ற வேண்டிய 'பர்ழு ஐன்' ஆன இபாதத் ஆகும். '... தொழுகையை (முறைப்படி) நிலைநாட்டுங்கள். நிச்சயமாக தொழுகை நம்பிக்கையாளர்கள் மீது நேரம் குறிக்கப்பட்ட கடமையாக இருக்கின்றது' *(4:103)*

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தொழுகையை இஸ்லாத்தின் அடிப்படையாகவும்; அதன் தூணாகவும் எடுத்துக்கூறியுள்ளார்கள். 'விவகாரங்களில் தலையாயது இஸ்லாமாகும். அதன் தூண் தொழுகையாகும், அதன் கடிவாளம் அல்லாஹ்வின் பாதையில் போராடுவதாகும்' (அஹ்மத்)

தொழுகையை அடிப்படைக் கடமையாக ஏற்று நிறைவேற்றாதிருப்போரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கடுமையாக எச்சரித்திருக்கிறார்கள். 'மக்கள் அல்லாஹ்வைத் தவிர வணங்கத் தகுதியானவன் வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி பகர்ந்து, தொழுகையை நிலைநாட்டி, ஸக்காத் கொடுத்து வரும்வரை போராடுமாறு நான் ஏவப்பட்டுள்ளேன்... (புஹாரி)' என நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

### பெறுமதிமிக்க கடமை

'யாருக்கு ஒரு வேளை தொழுகை தவறுகின்றதோ, அவர் தனது குடும்பம், சொத்து என்பவற்றைத் தொலைத்துவிட்டு நிற்கும் தனி மனிதர் போன்றவராவார். (இப்னு ஹிப்பான்)' என நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

### ஈமானின் அடையாளம்

ஈமான் கொண்டவருக்கும், ஈமான் கொள்ளாதவருக்கும் இடையிலான பிரிகோடாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுகையை சுட்டிக் காட்டியுள்ளார்கள். 'முஃமினுக்கும், காபிருக்கும் இடையிலான வேறுபாடு தொழுகையை விடுவதாகும்.' (முஸ்லிம்)

'எமக்கும் அவர்களுக்கும் இடையிலான உறுதிமொழி தொழுகையாகும். யார் அதை விட்டு விட்டாரோ அவர் காபிராகிவிட்டார்.' (இப்னு ஹிப்பான்) என நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

### வெற்றிக்கான வழி

தொழுகையை நிலைநிறுத்துவது பயபக்தியாளர்களினதும் வெற்றிபெற்ற முஃமின் களினதும் முதல்நிலைப் பண்பு என அல்குர்ஆன் புகழ்ந்துரைக்கின்றது. '(பயபக்தியுள்ள முஃமின்களான) அவர்கள் மறைவானவற்றை நம்பிக்கை கொள்வார்கள். தொழுகையையும் நிலை நாட்டுவார்கள்' *(2: 2-3)*



*'நம்பிக்கையாளர்கள் வெற்றியடைந்து விட்டனர். அவர்கள் தங்களது தொழுகையில் உள்ளச்சமுடையவர்களாக இருப்பார்கள்' (23 : 1-2)*

*'மேலும், (வெற்றி பெற்ற முஃமின்களான) அவர்கள் தமது தொழுகைகளில் பேணுதலாக இருப்பார்கள்.' (23 : 9)*

இது வரை சுட்டிக்காட்டப்பட்டவாறு தொழுகை ஒரு முஸ்லிமின் வாழ்வில் முக்கியத்துவம் பெறுகின்றது. எனவேதான் வாழ்வின் எல்லா சூழ்நிலைகளிலும் நிலைநாட்டப்பட வேண்டும் என இஸ்லாம் கட்டாயப்படுத்தியுள்ளது. அதற்காகத்தான் அல்லாஹ் தொழுகை விடயத்தில் பல சலுகைகளையும் வழங்கியுள்ளான். **அல்கஸ்ரு வல் ஜம்உ, ஸலாதுல் கவ்ப்** முதலானவை அவற்றுள் முக்கியமானவையாகும்.

அல்குர்ஆனும் ஹதீஸும் தொழுகை பற்றிக் குறிப்பிடும்போது இகாமதுஸ் ஸலாத்- தொழுகையை நிலைநாட்டுதல், முஹாபழதுஸ் ஸலாத் - தொழுகையைப் பேணுதல் ஆகிய சொற்பிரயோகங்களைப் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**தொழுகையில் பேணுதலாக இருக்கும் முஃமின் இம்மையிலும் மறுமையிலும் பல நன்மைகளைப் பெற்றுக் கொள்வான். அவையாவன,**

### 1. இறைவனுடன் உரையாடும் சந்தர்ப்பமாக அமைதல்

உங்களிலொருவர் தொழுதால் அவர் தனது ரப்போடு உரையாடுகின்றார். எனக்கும் எனது அடியானுக்கும் இடையில் தொழுகை இரு பாதியாக்கப்பட்டுள்ளது. எனது அடியானுக்கு அவர் கேட்டது கிடைக்கும். அடியான், **அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்** என்று கூறினால் அல்லாஹுதஆலா, என் அடியான் என்னை மகிமைப்படுத்தி விட்டான் எனக் கூறுகிறான். அடியான் **அர்ரஹ்மானிர் ரஹீம்** என்று கூறினால், **என் அடியான் என்னைப் புகழ்ந்து விட்டான்** என அல்லாஹ் கூறுகிறான். அடியான் **மாலிகி யவ்மித்தீன்** என்று கூறினால், **என் அடியான் என்னைப் பெருமைப்படுத்தி விட்டான்** என அல்லாஹ் கூறுகிறான். அடியான், **இய்யாக நஃபுது வஇய்யாக நஸ்தஈன்** என்று கூறினால் **இது எனக்கும் என் அடியானுக்கும் இடையேயானது, அவன் கேட்டது நிச்சயமாக அவனுக்குத்தான்** என்று அல்லாஹ் கூறுகிறான். அடியான், **இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம். ஸிராதல்லதீன அன்அம்த அலைஹிம் கைரில் மஃழூபி அலைஹிம் வலழ்ழால்லீன்** என்று கூறினால் அல்லாஹ் **இது எனக்கும் என் அடியானுக்கும் இடையேயானது, அவன் கேட்டது நிச்சயமாக அவனுக்குத்தான்** என்று கூறுகிறான் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

### 2. இறை சிந்தனையும் உள அமைதியும் ஏற்படல்

*'என்னையே நீர் வணங்குவீராக! என்னை நினைவுகூர்வதற்காக தொழுகையை நிலைநாட்டுவீராக!' (20:14)*

*'அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் தியானத்தில்தான் உள்ளம் அமைதி அடைகின்றது' (13:28)*

*'எனக்கு தொழுகையில்தான் கண்குளிர்ச்சி ஏற்படுத்தப்பட்டுள்ளது' (புஹாரி)*

### 3. இறையருள் கிட்டல்

*'நீங்கள் அருள் செய்யப்படும் பொருட்டு தொழுகையை நிலைநாட்டுங்கள். ஸக்காத்தையும் கொடுங்கள், இத்தூதருக்கும் கட்டுப்படுங்கள்' (24:56)*

### 4. சுவனத்தின் திறவுகோலாய் அமைதல்

*'மறுமை நாளில் அடியானிடம் விசாரிக்கப்படும் முதலாவது அமல் தொழுகையாகும். அது சீராகி விட்டால் அவன் வெற்றிபெறுவான். அது சீரற்றுப் போனால் அவன் தோல்வியுற்று நஷ்டமடைவான்' (அஹ்மத்)*

*'தொழுகையின் திறவுகோல் வுழூவாகும். சுவனத்தின் திறவுகோல் தொழுகையாகும்' (திர்மிதீ)*

### 5. உறுதிமிக்க மனநிலையையும் தயாள சிந்தனையையும் உருவாக்கும்

*'நிச்சயமாக மனிதன் பெரும் பதற்றக் காரனாகப் படைக்கப்பட்டுள்ளான். அவனுக்குத் தீங்கு நேர்ந்தால், பதற்றமடைகின்றான். மேலும், அவனுக்கு நன்மை ஏற்பட்டால் (பிறருக்கு வழங்காது) தடுத்துக் கொள்கின்றான். தொழுகையாளிகளைத் தவிர. அவர்கள் தாம், தமது தொழுகையில் நிரந்தரமாக இருப்பவர்கள்' (70:19-23)*

### 6. பாவச் செயல்களிலிருந்து தடுக்கும்

*'(நபியே!) மேலும், தொழுகையை நிலை நாட்டுவீராக! நிச்சயமாகத் தொழுகை மானக்கேடானதையும், வெறுக்கத்தக்கதையும் விட்டுத் தடுக்கும். அல்லாஹ்வை நினைவு கூர்வது மிகப் பெரிதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிவான்' (29:45)*

### 7. பாவ மன்னிப்பைப் பெற்றுத் தரும்

*'பகலின் இரு ஓரங்களிலும், இரவின் ஒரு பகுதியிலும் தொழுகையை நிலை நாட்டுவீராக! நிச்சயமாக நல்லவைகள் தீயவைகளைப் போக்கிவிடும். இது (அல்லாஹ்வை) நினைவு கூருவோருக்கு நல்லுபதேசமாகும்' (11:114)*

*'பர்ழான தொழுகைக்கான நேரம் வந்துவிட்டால் அழகாக வுழூச் செய்து கொண்டு (தொழுகைக்குரிய) உள்ளச்சத்தோடும் பணிவோடும் (குஷூஉ, குழூஉ) தொழுகையில் கலந்து கொள்ளும் முஸ்லிமின் சிறுபாவங்களுக்கான குற்றப்பரிகாரமாக (கப்பாராவாக) அத்தொழுகை அமைந்து விடுகின்றது' (முஸ்லிம்)*

### 8. மறுமையில் சாட்சியாய் அமைதல்

*'யார் தொழுகையைப் பேணி வருகின்றாரோ அது அவருக்கு மறுமையில் ஒளியாகவும், அத்தாட்சியாகவும், வெற்றியாகவும் இருக்கும். யார் அதைப் பேணவில்லையோ அவருக்கு மறுமையில் ஒளியோ, அத்தாட்சியோ, வெற்றியோ கிட்டாது. மாறாக, அவர் காரூன், பிர்அவன், ஹாமான், உபை இப்னு கலப் என்போருடன் இருப்பான்' (அஹ்மத்)*

### 9. அக - புறச் சுத்தத்தை ஏற்படுத்தும்

*'முஃமின்களே! நீங்கள் தொழுகைக்காகத் தயாரானால் உங்கள் முகங்களையும்*

*முழங்கைகள் வரை உங்கள் கைகளையும் கழுவிக்கொள்ளுங்கள். மேலும், உங்கள் தலைகளைத் (தண்ணீர் தொட்டுத்) தடவிக்கொள்ளுங்கள். அன்றி கணுக்கால் வரையில் உங்கள் இரு பாதங்களையும் (கழுவிக்கொள்ளுங்கள்). அல்லாஹ் உங்களுக்கு எவ்வித சிரமத்தையும் விரும்பவில்லை. எனினும் நீங்கள் நன்றிசெலுத்தும் பொருட்டு உங்களைத் தூய்மைப்படுத்தவும் தன் அருட்கொடைகளை உங்கள் மீது பூரணமாக்கி வைக்கவுமே விரும்புகின்றான்' (5:6)*

### *10. நரகை விட்டும் காப்பாற்றும்*

*'(சுவனவாசிகள் குற்றவாளிகளிடம்), உங்களை (ஸகர் எனும்) நரகில் நுழைவித்தது எது? எனக் கேட்பார்கள். அ(தற்க)வர்கள், நாம் தொழுகையாளிகளில் இருக்கவில்லை... எனக் கூறுவார்கள்' (74:40-43)*

இவற்றுக்கெல்லாம் மேலாக தொழுகையானது தனிமனிதனைச் சமூகத்தோடு பிணைக்கும் ஒரு இபாதத் ஆகவும் காணப்படுகின்றது. ஊரிலிருக்கும் ஆண்கள் மீது ஜமாஅத்தாகத் தொழுவது கடமையாக்கப்பட்டிருப்பதால் ஒரு நாளைக்கு ஐந்து வேளை மக்களோடு தொடர்புறும் சந்தர்ப்பம் கிடைக்கின்றது. நேரமுகாமை, தலைமைத்துவக் கட்டுப்பாடு போன்ற இன்னோரன்ன சமூகவியல் நன்மைகளைத் தரும் இபாதத் ஆக மிளிர்கிறது. முஸ்லிம்களுக்கு முதன்முதலாக விதியாக்கப்பட்ட, விண்ணுலகப் பரிசான தொழுகையானது, முன்னைய நபிமார்களுக்கும் விதியாக்கப்பட்டிருந்த கடமையாகும். இதுபற்றியே மறுமையில் முதன்முதலாக விசாரிக்கப்படும் எனக் கூறிய நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமது இறுதித்தருவாயில் உம்மத்திற்கு வஸிய்யத் செய்த கடமையாகவும் உள்ளது. எனவே தொழுகையின் முக்கியத்துவத்தை அறிந்து, உணர்ந்து, செயற்படுத்துவதன் மூலம் உண்மை முஃமினாக மாறி ஈருலக வெற்றியையும் பெற்றுக் கொள்ளத் திடசங்கற்பம் பூணுவோமாக!

**பயிற்சி**

1. ஒரு தனிமனிதனது வாழ்வை நெறிப்படுத்துவதில் தொழுகை வகிக்கும் முக்கியத்துவம் பற்றி விளக்குக.
2. தொழுகையின் மூலம் பெற்றுக்கொள்ளும் சமுகப் பயன்களைப் பட்டியல்படுத்துக.
3. தொழுகையை, விட்டு விட்டுத் தொழுகின்ற உமது நண்பனொருவனுக்கு தொழுகையை விடுவதன் பாரதூரம் பற்றி விளக்கி ஒரு கடிதம் வரைக.

# 4

# ஸிபதுஸ் ஸலாத்



இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் இரண்டாவது கடமை தொழுகை ஆகும். அது முஸ்லிம்களுடைய வாழ்க்கையில் தவிர்க்க முடியாத கடமையாகும். அது மிஃராஜின் போது கடமையாக்கப்பட்டது. அன்று முதல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமது மரணம் வரை தொழுகையை மிகக் கவனமாகக் கடைப்பிடித்து வந்திருக்கிறார்கள். தொழுகையைக் கடைப்பிடிப்பது முஸ்லிமுக்குரிய அடையாளமாக சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது. ஒரு அடியானுக்கும் குப்ருக்கும் (நிராகரித்தலுக்கும்) இடையிலுள்ள வேறுபாடு தொழுகையை விட்டுவிடுவதாகும். (முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஒருமுறை நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பள்ளிக்கு வந்தார்கள். அவ்வேளை வேறொரு நபரும் வந்து தொழுதார். தொழுது முடிந்ததும் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஸலாம் கூறினார். நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பதில் கூறிய பின் ‘நீர் மீண்டும் தொழுவீராக! ஏனெனில் நீர் தொழவே இல்லை’ என்றும் கூறினார்கள். அந்த மனிதர் முன்பு தொழுதது போலவே மீண்டும் தொழுதுவிட்டு வந்து நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஸலாம் கூறினார். திரும்பவும் ‘தொழுவீராக! நீர் தொழவே இல்லை’ என்று நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இவ்வாறு மூன்று தடவைகள் நடந்தன). அதன் பிறகு அந்த மனிதர் ‘சத்திய மார்க்கத்துடன் உங்களை அனுப்பியுள்ள இறைவன் மீது ஆணையாக இவ்வாறு தொழுவதைத் தவிர வேறு எதையும் நான் அறிந்திருக்கவில்லை! எனக்கு கற்றுத்தாருங்கள்!’ என்று கேட்டார்.

‘நீர் தொழுகைக்காக நின்றதும் தக்பீர் கூறுவீராக. பின்னர் குர்ஆனில் உமக்குத் தெரிந்தவற்றை ஓதுவீராக. பின்னர் அமைதியாக ருகூஉ செய்வீராக. பின்னர் ருகூஉவிலிருந்து

எழுந்து சரியான நிலைக்கு வருவீராக. பின்னர் நிதானமாக ஸஜ்தா செய்வீராக. சஜ்தாவிலிருந்து எழுந்து நிதானமாக உட்காருவீராக. இவ்வாறு உமது எல்லாத் தொழுகையிலும் செய்து வருவீராக!' (புகாரி) என்று நபி ஸல்லல்லாஹுˇ அலைஹிவஸல்லம் கூறினார்கள்.

'மறுமை நாளில் ஓர் அடியானின் செயல் பற்றி விசாரிக்கப்படும்போது முதன்மையாக கேட்கப்படுவது தொழுகை பற்றியாகும். அது சீராக இருந்தால் அவர் வெற்றி பெற்று விட்டார். அது சீரற்றிருந்தால் அவர் கவலையும் துயரமும் அடைந்தவராவார்.' (திர்மிதி)

தொழுகை மிகவும் பேணுதலாக தொழப்பட வேண்டும் என்பதனால் ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி ஸல்லல்லாஹுˇ அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மிஃராஜைத் தொடர்ந்து முதல் இரண்டு நாட்களும் இமாமாக நின்று தொழுகையை நிறைவேற்றிக்காட்டியுள்ளார்கள்.

இனி நாம் தொழுகை நிறைவேற்றப்படும் முறையினைக் கவனிப்போம்.

### கிப்லாவை முன்னோக்கி நிற்றல்

தொழுகையை நிறைவேற்றுவதற்குத் தயாராகி விட்ட ஒருவர் (நிற்பதற்கு சக்தி பெற்றவராக இருந்தால்) கிப்லாவை முன்னோக்கி, நிமிர்ந்து நிற்க வேண்டும். ஆண்கள் தமது இரு பாதங்களுக்கிடையில் சிறிது இடைவெளி விட்டும், பெண்கள் கால் பாதங்களை நெருக்கமாக வைத்தும் நிற்க வேண்டும்.

### நிய்யத் வைத்தல்

நிய்யத் என்பது உள்ளத்தில் ஏற்படுத்தும் எண்ணமாகும். தொழுவதற்கு ஆயத்தமாகும் போது முதலில் அத்தொழுகைக்குரிய நிய்யத்தை மனதில் பதிய வைத்து அல்லாஹுˇ அக்பர் என முதலாவது தக்பீர் சொல்ல வேண்டும். இம் முதல் தக்பீர் **தக்பீர் தஹ்ரீமா** என வழங்கப்படும். குறித்த பர்ழான அல்லது ஸுˇன்னத்தான தொழுகையைத் தொழுகிறேன் என சுருக்கமாக நிய்யத் வைக்கலாம். அல்லது குறித்த தொழுகையையும், அதன் ரகஅத்துக்களின் எண்ணிக்கையையும் குறிப்பிட்டு, அதாவாக கஃபாவை முன்னோக்கி அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன் என விரிவாகவும் நிய்யத் வைக்கமுடியும்.

உதாரணமாக, ஸுˇப்ஹுˇடைய பர்ளைத் தொழுகிறேன், என்பது நிய்யத்தின் மிகக் குறைந்த அளவாகும். ஸுˇப்ஹுˇடைய பர்ளு இரண்டு ரகஅத்துக்களையும் அதாவாக கஃபாவை முன்னோக்கி அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன், என விரிவாகவும் நிய்யத் வைக்க முடியும். ஜமாஅத்தாகத் தொழும் போது, தொழுகை நடத்தும் இமாம் நிய்யத்தில் **இமாமன்** என்பதையும், மஃமூமாகத் தொழுவோர் **மஃமூமன்** என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

### கைகளைக் கட்டுதல்

'நபி ஸல்லல்லாஹுˇ அலைஹி வஸல்லம் அவர்கள் தக்பீர் கூறும் போது தமது இரு கைகளையும் இரு காதுகள் வரை உயர்த்தினார்கள்' (முஸ்லிம்). 'இரு தோள் புஜங்கள் வரை உயர்த்தக் கூடியவர்களாக இருந்தார்கள்' (புகாரி). நிய்யத்தை மனதில் உறுதிப் படுத்திக் கொண்டு அல்லாஹுˇ அக்பர் என தக்பீர் கூற ஆரம்பிக்கும் போது, இரு கை

களின் விரல்களையும் நேராகவும், இலேசாக விரித்த வண்ணமும், உள்ளங்கைகள் இரண்டும் கிப்லாவை முன்னோக்கியதாகவும், பெரு விரலின் நுனி காதின் கீழ்ப்பகுதிக்கு, அல்லது தோள் புஜங்கள் வரை உயர்த்தியும் இருக்க வேண்டும். அவ்வேளை தக்பீர் சொல்லியவாறு இரு கைகளையும் மெதுவாகக் கீழே இறக்கி, நெஞ்சுக்கும் தொப்புளுக்கும் இடையில் உயர்த்திக் கட்டிக் கொள்ள வேண்டும். இடது கைக்கு மேல் வலது கையை வைத்து, வலது உள்ளங்கையால் இடது மணிக்கட்டைப் பற்றிக் கொள்ள வேண்டும். ஆண்கள் தமது முழங்கைகளை விலாப்புறங்களிலிருந்து சிறிது தூரமாக்கியும், பெண்கள் சேர்த்தும் வைத்துக் கொள்ள வேண்டும்.

### துஆஉல் இஸ்திப்தாஹ்

தக்பீர் தஹ்ரீமா சொல்லி தக்பீர் கட்டியவுடன் ஆரம்ப துஆவை ஓத வேண்டும். இந்த ஆரம்ப ஓதலே **துஆஉல் இஸ்திப்தாஹ்** ஆகும். இது தொழுகையின் முதல் தக்பீரைத் தொடர்ந்து ஓதப்படும். இதன்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பல சந்தர்ப்பங்களில் பல்வேறு துஆக்களை ஓதியுள்ளார்கள். அவைகளில் விரும்பியதை ஓதலாம். நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தொழுகையின்போது அல்லாஹு அக்பர் எனத் தக்பீர் கூறியதும் வஜ்ஜஹ்த்தை ஓதி வந்துள்ளார்கள்.

**وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِيْ فَطَرَ السَّمَاوَاتِ وَالْأَرْضَ حَنِيْفًا مُسْلِمًا، وَمَا أَنَا مِنَ الْمُشْرِكِيْنَ، إِنَّ صَلَاتِيْ وَنُسُكِيْ وَمَحْيَايَ وَمَمَاتِيْ لِلَّهِ رَبِّ الْعَالَمِيْنَ، لاَ شَرِيْكَ لَهُ وَبِذَلِكَ أُمِرْتُ وَأَنَا مِنَ الْمُسْلِمِيْنَ**

### ஸூறதுல் ஃபாதிஹா ஓதுதல்

அஊது பில்லாஹி மினஷ்ஷைத்தானிர் ரஜீம் என ஆரம்பித்து, பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் எனக்கூறி ஸூறதுல் பாதிஹாவை அமைதியாகவும், திருத்தமாகவும் ஓதவேண்டும். மற்றும் ஒவ்வொரு ரகஅத்திலும் பிஸ்மியுடன் ஸூறதுல் பாதிஹா ஓத வேண்டும்.

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ
اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ ۝١ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝٢
مٰلِكِ يَوْمِ الدِّيْنِ ۝٣ اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ ۝٤
اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَ ۝٥ صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ
عَلَيْهِمْ ۙ غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ وَلَا الضَّآلِّيْنَ ۝٧

முதல் இரண்டு ரகஅத்திலும் ஸூறதுல் பாதிஹாவுக்குப் பின் வேறு ஸூறாக்களை அல்லது அவற்றின் ஒரு பகுதியை ஓதுவது ஸுன்னத் ஆகும். முதல் ரகஅத்தில் ஓதப்படும் ஸூறாவை விட இரண்டாவது ரகஅத்தில் ஓதப்படும் ஸூறா அளவில் சற்று சிறிதாக இருப்பது (முஸ்தஹப்) வரவேற்கத்தக்கதாகும்.

**ருகூஉ செய்தல்**

அல்குர்ஆன் வசனங்களை ஓதி முடித்த பிறகு, ஆரம்பத் தக்பீரின் போது கைகளை உயர்த்தியவாறு உயர்த்தி தக்பீர் கூறிக் கொண்டு ருகூவிற்குக் குனிதல் வேண்டும். தலை, கழுத்து, முதுகு ஆகியன ஒரே சீராக வருகின்ற வரை குனிந்து, இரு உள்ளங் கைகளையும் விரித்தவாறு முழங்கால்களின் மேல் வைத்துப் பிடித்துக் கொள்ள வேண்டும். ருகூவிலும் ஆண்கள் விலாவிலிருந்து முழங்கைகளை அப்புறப்படுத்தியும், பெண்கள் தமது விலாவோடு சேர்த்தும் வைத்துக் கொள்ள வேண்டும். பின்னர்,

**سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمُ (وَبِحَمْدِهِ)**

*(மகத்தான எனது இரட்சகனை தூய்மைப் படுத்துவதோடு, அவனைப் புகழ்கிறேன்.)* என்று மூன்று தடவைகள் ஓதிக் கொள்ள வேண்டும்.

**ருகூவிலிருந்து எழுதல் (இஃதிதாலுக்கு வருதல்)**

ருகூவிலிருந்து ஆரம்பத் தக்பீருக்கு கைகளை உயர்த்துவது போன்று உயர்த்தி

**سَمِعَ اللهُ لِمَنْ حَمِدَهُ**

*(அல்லாஹ் தன்னைப் புகழ்பவனின் புகழை செவிமடுத்தான்)* எனக் கூறிக் கொண்டே எழும்புதல் வேண்டும்.

நிலைக்கு வந்ததும் இரு கைகளையும் தொங்க விட்டவராக,

**رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْءَ السَّمَاوَاتِ و مِلْءَ الْأَرْضِ وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ.**

*(நாயனே! வானங்கள் நிரம்பிய, பூமி நிரம்பிய அதன் பின்னர் நீ நாடிய அனைத்தும் நிரம்பிய புகழ் யாவும் உனக்கே உரியன)* என ஓதிக்கொள்ள வேண்டும்.

**ஸஜ்தா செய்தல் (ஸுஜூது செய்தல்)**

பின்னர் நிலையிலிருந்து கைகளை உயர்த்தாமல் அல்லாஹு அக்பர் எனக்கூறி ஸுஜூதுக்குச் செல்ல வேண்டும். இரு பாதங்கள், இரு முட்டுக் கால்கள், இரு உள்ளங் கைகள், நெற்றி ஆகிய ஏழு உறுப்புக்கள் தரையில் படுமாறு ஸஜ்தா செய்தல் வேண்டும். ஸுஜூதின்போது கை விரல்களை கிப்லாவை முன்னோக்கியும், காது அல்லது தோள் புஜத்திற்கு நேராகவும் வைத்துக் கொள்ள வேண்டும். ஆண்கள் தமது இரு முழங்கை களையும் விலாவிலிருந்தும், வயிற்றை தொடைப் பகுதியிலிருந்தும் அகற்றி வைத்துக் கொள்ள வேண்டும். பெண்கள் முழங்கைகளை விலாவோடும், வயிற்றை தொடைப் பகுதியோடும் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும். ஸுஜூதின் போது,

سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى (وَبِحَمْدِهِ)

*(உயர்வான எனது இரட்சகனை தூய்மைப் படுத்துவதோடு, அவனைப் புகழ்கிறேன்)* என மூன்று முறை ஓதிக் கொள்ள வேண்டும்.

#### நடு இருப்புக்கு வருதல்

ஸுஜூதில் சற்றுத் தாமதித்த பின்னர், தக்பீர் கூறியவாறு தலையை உயர்த்தி கால்களை மடித்த நிலையில் இருப்பில் உட்கார வேண்டும். அவ்வேளை, வலது கால் விரல் நுனியை தரையில் நட்டு வைத்ததாக, இடது கால் பாதத்தின் மீது அமர வேண்டும். கை விரல்களை கிப்லாவை முன்னோக்கியவாறும், முழங்கால்களுக்கு நேராகவும், தொடைகள் மீது வைத்தல் வேண்டும். இவ்விருப்பு **இப்திராஷ் இருப்பு** எனப்படும். அவ்வேளை,

رَبِّ اغْفِرْلِيْ وَارْحَمْنِيْ وَاجْبُرْنِيْ وَارْفَعْنِيْ وَارْزُقْنِيْ وَاهْدِنِيْ وَعَافِنِيْ

*(ரப்பே! எனக்கு மன்னிப்பு வழங்கி அருள் புரிவாயாக, என் குறைகளை நிவர்த் திப்பாயாக,என்னை உயர்வு படுத்தி பாக்கியங்களை அளிப்பாயாக,என்னை நேர் வழியில் செலுத்துவாயாக, எனக்கு சுகமளிப்பாயாக)* என ஓதிக் கொள்ள வேண்டும்.

#### இரண்டாம் ஸஜ்தா (ஸுஜூது)

நடு இருப்பில் சற்று தாமதித்த பின்பு, அல்லாஹு அக்பர் என சொல்லியவாறு இரண்டாம் ஸுஜூதுக்குச் செல்ல வேண்டும். முதல் ஸுஜூதைப் போன்றே அதில் தாமதித்து தஸ்பீஹையும் ஓதிக் கொள்ள வேண்டும்.

இரண்டாம் ஸுஜூதுக்குப்பின் ஓரளவு நீட்டியதாய் தக்பீர் கூறியவாறு தலையை உயர்த்தி இரண்டாம் ரகஅத்துக்காக எழுந்து நிற்க வேண்டும். இரண்டாவது ரகஅத்திலும் கைகளைக் கட்டிக் கொண்டு, முதல் ரகஅத்தில் ஓதியவாறே ஸூறா பாதிஹாவையும் அதன் பின் மற்றறொரு ஸூறாவையும் ஓதிக்கொள்ள வேண்டும். தொழுகையின்போது முதல் இரண்டு ரக்அத்துகளில் மட்டுமே ஸூறா பாத்திஹாவின் பின் பிரிதொரு ஸூறா அல்லது வசனங்கள் ஓதப்பட வேண்டும். மூன்றாம் நான்காம் ரகஅத்துகள் உள்ள தொழுகை களில் ஸூறா பாத்திஹா மட்டுமே ஓதப்படும்.

#### குனூத்

ஸுப்ஹ் தொழுகையின் இரண்டாம் ரகஅத்திலும், ரமழான் மாதத்தின் பதினாறாம் இரவு முதல் இறுதிவரை வித்ரு தொழுகையிலும், ருகூவிலிருந்து எழுந்து இஃதிதாலுடைய துஆவை ஓதியபின், இரு உள்ளங்கைகளையும் தோள்மட்டத்திற்கு உயர்த்தி, முகத்தின் முன்பாக வைத்து குனூத் ஓதிக்கொள்வது ஷாபிஈ மத்ஹபின்படி ஸுன்னத்தாகும்.

اَللَّهُمَّ اهْدِنِيْ فِيْ مَنْ هَدَيْتَ وَعَافِنِيْ فِيْمَنْ عَافَيْتَ وَتَوَلَنِيْ فِيْمَنْ تَوَلَّيْتَ
وَبَارِكْ لِيْ فِيْمَا اَعْطَيْتَ وَقِنِيْ شَرَّ مَاقَضَيْتَ فَاِنَّكَ تَقْضِيْ وَلاَ يُقْضى عَلَيْكَ اِنَّهُ

لاَيَذِلُّ مَنْ وَالَيْتَ وَلاَيَعِزُّ مَنْ عَادَيْتَ تَبَارَكْتَ رَبَّنَا وَتَعَالَيْتَ, فَلَكَ الْحَمْدُ عَلَى مَا قَضَيْتَ, وَأَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ, وَصَلَّى اللهُ عَلَى نَبِيِّنَا مُحَمَّدٍ النَبِيِّ الْأُمِّيِّ وَعَلَى آلِهِ وَصَحْبِهِ وَسَلَّمَ.

### அத்தஹிய்யாத்

அத்தஹிய்யாத் இரு சந்தர்ப்பங்களில் ஓதப்படும். அவை முறையே முதல் அத்தஹிய்யாத், இறுதி அத்தஹிய்யாத் ஆகும். மூன்று அல்லது நான்கு ரகஅத்துகள் கொண்ட தொழுகைகளில் இரண்டாம் ரகஅத்தில் இரண்டாம் சுஜூதுக்கு பின்னர் இப்திராஷ் உடைய இருப்பில் இருந்து ஓதுவதே **முதல் அத்தஹிய்யாத்** ஆகும்.

التَّحِيَّاتُ الْمُبَارَكَاتُ الصَّلَوَاتُ الطَّيِّبَاتُ لِلّهِ السَّلَامُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ, السَّلَامُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللهِ الصَّالِحِيْنَ, أَشْهَدُ أَنْ لَاإِلَهَ إِلاَّ اللهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ.

எல்லாத் தொழுகைகளின் இறுதி ரகஅத்தின் இரண்டாம் ஸுஜூதுக்குப் பின் வலது கால் பாதத்தை நட்டு வைத்து, இடது கால் பாதத்தை வலது கணுக்காலுக்கு கீழாக செலுத்தி தரையில் உட்கார்வதை **கடைசி அத்தஹிய்யாத்** (தவர்ருக் இருப்பு) என்பர். இவ்வாறு உட்கார்ந்து இறுதி அத்தஹிய்யாத் ஓதப்படும். முதலாம் அத்தஹிய்யாத்தில் அத்தஹிய்யாத் துஆவில் ஸலவாத்துல் இப்றாஹீமியா வரையும் ஓதப்படும் அதேவேளை இறுதி அத்தஹிய்யாத்தில் ஸலவாத் இப்றாஹீமியாவும் சேர்க்கப்பட வேண்டும்.

اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ, كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ وَبَارِكْ عَلى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ, كَمَا بَارَكْتَ عَلى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّك حَمِيدٌ مَجِيدٌ.

இரு அத்தஹிய்யாத்துடைய அமர்வுகளிலும், கைகளை முழங்காலுக்கு நேராக தொடை மீதுவைத்து, வலது கையின் சுட்டு விரலை சற்று உட்புறமாக வளைத்து அவ்விரலின் அடிப்பாகத்தை பெருவிரலின் நுனிப்பகுதியால் சிறிது அழுத்தி வைத்தல் வேண்டும். ஏனைய மூன்று விரல்களையும் உட்புறமாக மடித்துக் கொள்ள வேண்டும். அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லா என்ற வார்த்தைகளை ஓதும் போது, வளைந்து இருந்த வலக்கையின் சுட்டு விரலை முழுமையாக நீட்டிக் கொள்ள வேண்டும். ஸலாம் கூறும் வரை நீட்டிய அந்த சுட்டு விரலை பார்த்தவாறு இருப்பதும் தொழுகையின் ஏனைய சந்தர்ப்பங்களில் ஸுஜூது செய்யும் இடத்தைப் பார்த்துக் கொண்டு இருப்பதும் ஸுன்னத்தாகும்.

இறுதி அத்தஹிய்யாத் ஓதி முடிந்த பின்னர், அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத் துல்லாஹ் என ஸலாம் கூறியவாறு முகத்தை வலது பக்கமும், தொடர்ந்து இரண்டாம் ஸலாம் கூறியவாறு இடது பக்கமும் திருப்ப வேண்டும். இத்தோடு தொழுகை நிறைவு பெற்றுவிடும்.

السَّلَامُ عَلَيْكُمْ وَرَحْمَةُ اللهِ.

பர்ளுத் தொழுகையின் பின்னர் இறைஞ்சப்படும் துஆக்கள் கபூலாகின்றன. ஆகவே தேவையான துஆக்களைக் கேட்டுக்கொள்ள முடியும். துஆக்கள் ஹம்து ஸலவாத்துடன் ஆரம்பித்து ஹம்து ஸலவாத்துடன் முடிக்கப்படல் வேண்டும்.

எனவே தொழுகையின் விதிமுறைகளை தெளிவாக அறிந்து, மரணிக்கும்வரை அதனை ஒழுங்காக நிறைவேற்றி வர அல்லாஹ் அருள்புரிவானாக.

பயிற்சி

1. தொழுகை என்ற கடமையின் முக்கியத்துவத்தை விளக்குக.
2. ஸுஜூதின் போது நிலத்தில் படவேண்டிய உறுப்புக்கள் யாவை? அதில் ஓத வேண்டிய தஸ்பீஹ் யாது?
3. தொழுகையில் கவனயீனமாக இருப்போருக்கு நீர் வழங்கும் நல்லுபதேசம் யாது?
4. பின்வரும் அறபுச்சொற்களின் விளக்கத்தை தருக.

(அ) தக்பீர் தஹ்ரீமா　　(இ) இஃதிதால்

ஆ) இப்திராஷ்　　(ஈ) தவர்ருக்

# 9

# தொழுகையைத் தொடர்ந்து ஓத வேண்டியவை

மனிதன் எப்போதும் எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வின் பக்கம் தேவையுடைய வனாகவே இருக்கிறான். எனவே, அவனது தேவைகள் எதுவாயினும் அவற்றை அவனிடமே கேட்குமாறும் அதனை நிறைவேற்றுவதற்கு அவன் எப்பொழுதும் தயாராக இருப்பதாகவும் அல்லாஹ் அழைப்பு விடுக்கிறான். ஒரு ஹதீஸில் ‘யார் தனது தேவைகளை அல்லாஹ்விடத்தில் கேட்கவில்லையோ அவன்மீது அல்லாஹ் கோபமடைகிறான்’ என நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். அதனை இன்னும் வலுப்படுத்தி ‘துஆவே வணக்கமாகும்’ எனவும் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

எனவேதான் எல்லா இபாதத்துக்களின் போதும் துஆக்களுக்கு முக்கியத்து வமளிக்கப்படுகிறது. விசேடமாகத் தொழுகையை எடுத்து நோக்கும் போது ‘ஸலாத்’ எனும் அறபுப் பதத்திற்குப் பிரார்த்தனை என்றே பொருள் கொள்ளப்படுகிறது. தொழுகையின் போதும் அதனை நிறைவேற்றிய பின்னரும் ஓத வேண்டிய பல துஆக்களை, அவ்ராதுகளை இஸ்லாம் எமக்குக் கற்றுத்தருகிறது. குறிப்பாக பர்ழான தொழுகைகளுக்குப் பின் கேட்கப்படும் துஆக்கள் அல்லாஹ்வினால் அங்கீகரிக்கப்படுகின்றமையால் அவை பற்றி அதிகமாக அல்குர்ஆனிலும் ஸுன்னாவிலும் ஆர்வமூட்டப்பட்டுள்ளதைக் காணலாம்.

ஐங்காலத் தொழுகைகளை நிறைவேற்றிய பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நீண்டநேரம் அவ்விடத்தில் அமர்ந்தவாறு பல திக்ருகள், அவ்ராது களை ஓதுவதை வழக்கமாகக் கொண்டிருந்ததோடு ஸஹாபாக்களுக்கும் அதனைக் கற்றுக் கொடுத்துள்ளார்கள். ஸஹாபாக்களும் அவற்றைத் தமது நடைமுறையில் கடைப்பிடித்து வந்துள்ளார்கள். அதுமட்டுமல்லாது யாராயினும் ஒரு ஸஹாபி தொழுது முடித்ததும் அவ்ராதுகளை ஓதுவதைத் தவிர்த்து அவசர அவசரமாக எழுந்து செல்வாராயின் அவரைப் பற்றி விசேடமாக விசாரிக்குமளவு நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் துஆ விடயத்தில் கரிசனை காட்டியுள்ளார்கள். ஆகவே, நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் இந்த வழிகாட்டலை எமது வாழ்விலும் நடைமுறைபடுத்த நாம் முழுமையாக முயற்சிப்பது இன்றியமையாததாகும்.

இனி, நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் ஸஹாபாக்களும் வழக்கமாகத் தொழுகைகளுக்குப் பின் ஓதி வந்த தஸ்பீஹ், அவ்ராது துஆக்களைத் தொகுத்து நோக்குவோம்:-



நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஜமாஅத் தொழுகை முடிந்ததும் முதலில்

أَسْتَغْفِرُ اللّهَ، أَسْتَغْفِرُ اللّهَ، أَسْتَغْفِرُ اللّهَ. أَللّهُمَّ أَنْتَ السَّلاَمُ وَمِنْكَ السَّلاَمُ، تَبَارَكْتَ يَاذَا الْجَلاَلِ وَالْإِكْرَامِ

எனக் கூறுவார்கள்.

பொருள்: அல்லாஹ்விடம் நான் பாவமன்னிப்பு தேடுகிறேன். யாஅல்லாஹ்! நீ சாந்தியானவன். உன்னிடமே சாந்தியுண்டு. சங்கைக்கும் கண்ணியத்திற்குமுரியவனே! நீ பாக்கியங்களுக்கு உரியவனாகிவிட்டாய்.

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தொழுகைக்குப் பின்

لاَ إِلهَ إِلاَّ اللّهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْر،لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللهِ، لاَ إِلهَ إِلاَّ اللهُ، وَلاَ نَعْبُدُ إِلاَّ إِيَّاهُ ، لَهُ النَّعْمَةُ وَلَهُ الْفَضْلُ ،وَلَهُ الثَّنَاءُ الْحَسَن، لاَ إِلهَ إِلاَّ اللهُ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ وَلَوْ كَرِهَ الْكَافِرُوْنَ. اَللّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدّ

என்பதையும் ஓதியுள்ளார்கள்.

பொருள் : வணங்கப்படுபவன் அல்லாஹ்வையன்றி (வேறு எதுவும், எவரும்) இல்லை. அவன் ஏகன், அவனுக்கு இணை இல்லை. அவனுக்கு ஆட்சி உரியது, புகழும் அவனுக்கே உரியது. அவன் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றலுடையவன். யா அல்லாஹ் நீ கொடுத்ததைத் தடுப்பவர் இல்லை. நீ தடுத்ததைக் கொடுப்பவர் (எவரும்) இல்லை. செல்வந்தனின் செல்வம் உன்னில் இருந்துவரும் தண்டனையிலிருந்து காத்துக் கொள்ள , பயனளிக்காது. (புகாரி, முஸ்லிம்)

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள். எவர் ஒருவர் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் **சுப்ஹானல்லாஹ்** 33 தடவை, **அல்ஹம்துலில்லாஹ்** 33 தடவை, **அல்லாஹு அக்பர்** 33 தடவை ஓதி 100 ஐ பூர்த்தியாக்குவதற்கு பின்வரும் கலிமாவை ஒருமுறை ஓதினால் அவரது பாவங்கள் கடல் நுரை போன்றிருப்பினும் மன்னிக்கப்படும்.

**لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كَلِّ شَيْءٍ قَدِيْرُ**

வணங்கப்படுபவன் அல்லாஹ்வையன்றி (வேறு எதுவும், எவரும்) இல்லை. அவன் ஏகன், அவனுக்கு இணை இல்லை, அவனுக்கு ஆட்சி உரியது, புகழும் அவனுக்கே உரியது. அவன் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றலுடையவன்.

**سُبْحَانَ اللهِ** என்பது அல்லாஹ் மிகத் தூய்மையானவன் என்றும்

**اَلْحَمْدُ لِلَّهِ** என்பது அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்றும்

**اَللهُ أَكْبَرْ** என்பது அல்லாஹ் மிகப் பெரியவன் என்றும் பொருள்படுகின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் இஹ்லாஸ், பலக், மற்றும் நாஸ் ஆகிய ஸூராக்களையும் ஓதியுள்ளார்கள்.

(திர்மதி, அபூதாவூத், நஸாஈ)


سُورَةُ الْإِخْلَاصِ مَكِّيَّةٌ وَهِيَ أَرْبَعُ آيَاتٍ
بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ
قُلْ هُوَ اللهُ اَحَدٌ ۝١ اَللهُ الصَّمَدُ ۝٢ لَمْ يَلِدْ ۙ وَلَمْ
يُوْلَدْ ۝٣ وَلَمْ يَكُنْ لَّهٗ كُفُوًا اَحَدٌ ۝٤

(நபியே!)நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே.

அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன்

அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை.

அன்றியும் அவனுக்கு நிகராக எவரும் இல்லை.


سُورَةُ الْفَلَقِ مَدَنِيَّةٌ وَهِيَ خَمْسُ آيَاتٍ
بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ
قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ ﴿١﴾ مِن شَرِّ مَا خَلَقَ ﴿٢﴾ وَمِن شَرِّ غَاسِقٍ إِذَا
وَقَبَ ﴿٣﴾ وَمِن شَرِّ النَّفَّاثَاتِ فِي الْعُقَدِ ﴿٤﴾ وَمِن شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ ﴿٥﴾

*(நபியே!) நீர்சொல்வீராக: அதிகாலையின் இறைவனிடத்தில் நான் காவல் தேடுகிறேன்.*

*அவன் படைத்தவற்றின் தீங்கைவிட்டும்,*

*இருள் பரவும்போது ஏற்படும் இரவின் தீங்கைவிட்டும்,*

*இன்னும், முடிச்சுகளில் (மந்திரித்து) ஊதும் பெண்களின் தீங்கைவிட்டும்,*

*பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது உண்டாகும் தீங்கை விட்டும் (காவல் தேடுகிறேன்).*


سُورَةُ النَّاسِ مَدَنِيَّةٌ وَهِيَ سِتُّ آيَاتٍ
بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ
قُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ ﴿١﴾ مَلِكِ النَّاسِ ﴿٢﴾ إِلَٰهِ النَّاسِ ﴿٣﴾
مِن شَرِّ الْوَسْوَاسِ الْخَنَّاسِ ﴿٤﴾ الَّذِي يُوَسْوِسُ فِي
صُدُورِ النَّاسِ ﴿٥﴾ مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ ﴿٦﴾

*(நபியே!) நீர் கூறுவீராக: மனிதர்களின் இறைவனிடத்தில் நான் காவல் தேடுகிறேன்.*

*(அவனே) மனிதர்களின் அரசன்;*

*(அவனே) மனிதர்களின் நாயன்;*

*பதுங்கியிருந்து வீண் சந்தேகங்களை உண்டாக்குபவனின் தீங்கைவிட்டும் (இறைவனிடத்தில் நான் காவல் தேடுகிறேன்)*

அவன் மனிதர்களின் இதயங்களில் வீண் சந்தேகங்களை உண்டாக்குகிறான்.

(இத்தகையோர்) ஜின்களிலும், மனிதர்களிலும் இருக்கின்றனர்.

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்கும் பின் ஆயத்துல் குர்ஸியையும் தொடர்ந்து ஓதிவந்துள்ளார்கள்.

எவர் ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் ஆயத்துல் குர்ஸியை ஓதுகின்றாரோ அவர் மரணிப்பதைத் தவிர வேறு எதுவும் சுவனம் செல்வதிலிருந்து தடுக்காது. (நஸாஈ)

எவர் பர்ளான தொழுகைக்குப் பின் ஆயத்துல் குர்ஸியை ஓதுகிறாரோ அவர் அடுத்த தொழுகை வரை அல்லாஹ்வின் பாதுகாப்பில் இருப்பார். (தபரானி)

## ஆயத்துல் குர்ஸி




அல்லாஹ் - அவனைத் தவிர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறு இல்லை. அவன் என்றென்றும் ஜீவித்திருப்பவன். என்றென்றும் நிலைத்திருப்பவன். அவனை உறக்கம் பீடிக்காது. வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன. அவன் அனுமதியின்றி அவனிடம் யார் பரிந்துரை செய்ய முடியும்? (படைப்பினங்களுக்கு) முன்னருள்ளவற்றையும் அவற்றுக்குப் பின்னருள்ளவற்றையும் அவன் நன்கறிவான். அவன் ஞானத்திலிருந்து எதனையும் அவன் நாட்டமின்றி எவரும் அறிந்து கொள்ள முடியாது. அவனுடைய அரியாசனம் (குர்ஸிய்யு) வானங்களிலும் பூமியிலும் பரந்து நிற்கின்றது. அவ்விரண்டையும் காப்பது அவனுக்கு சிரமத்தை உண்டாக்குவதில்லை. அவன் மிக உயர்ந்தவன். மகிமைமிக்கவன் (2:255.)

*முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எல்லாத் தொழுகைகளுக்குப் பின்பும் பின்வருமாறு ஓதியுள்ளார்கள்.*

**اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْبُخْلِ ، وَأَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ ، وَأَعُوذُ بِكَ مِنْ أَنْ أُرَدَّ إِلَى أَرْذَلِ الْعُمُرِ ، وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا ، وَأَعُوذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ**

*பொருள் : யா அல்லாஹ்! நான் கோழைத்தனத்தையும், உலோபித்தனத்தையும் விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். தள்ளாடும் முதிய வயதை நான் அடைவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இவ்வுலகின் குழப்பங்களை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மண்ணறையின் சோதனைகளை விட்டும் உன்னிடம் பாது காவல் தேடுகிறேன். (புகாரி, திர்மதி)*

*முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எல்லா தொழுகைக்குப் பின்பும் இந்த துஆவையும் ஓதிவந்துள்ளார்கள்.*

**اللَّهُمَّ أعِنِّي عَلَى ذِكْرِكَ، وَشُكْرِكَ، وَحُسْنِ عِبَادَتِكَ**

*பொருள் : யா அல்லாஹ்! உன்னை திக்ரு செய்வதற்கும் உனக்கு நன்றி செலுத்து வதற்கும் உன்னை அழகாக வணங்குவதற்கும் நீ எனக்கு உதவிசெய்வாயாக. (அபூதாவூத், நஸாஈ)*

*சுப்ஹு மற்றும் மஃரிப் தொழுகைக்குப் பின் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விஷேடமாக ஓதிய துஆக்கள் காணப்படுகின்றன. அந்தவகையில் கலிமதுத் தௌஹீதை 10 தடவை ஓதினார்கள்.*

*எவர் சுப்ஹுத் தொழுகையைத் தொடர்ந்து எவருடனும் கதைக்க முன்பு கலிமதுத் தௌஹீத் ஓதுகிறாரோ அவருக்கு 10 நன்மைகள் எழுதப்படும். 10 தீமைகள் அழிக்கப்படும். அவரின் அந்தஸ்து 10 உயர்த்தப்படும். இன்னும் அந்நாளில் எல்லாத் தீமைகளை விட்டும் நீக்கி பாதுகாக்கப்படும். ஷைத்தானின் தீங்கைவிட்டும் அவர் பாதுகாக்கப்படுவார் எனவும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள். (திர்மதி)*

**لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ وَهُوَ عَلَى كَلِّ شَيْءٍ قَدِيْرٌ**

*பொருள் : வணங்கப்படுபவன் அல்லாஹ்வையன்றி (வேறு எதுவும், எவரும்) இல்லை. அவன் ஏகன், அவனுக்கு இணை இல்லை, அவனுக்கு ஆட்சி உரியது, புகழும் அவனுக்கே உரியது. அவன் உயிர்ப்பிக்கச் செய்யக் கூடியவன். மேலும் மரணிக்கச் செய்யக்கூடியவன். அவன் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றலுடையவன்.*

சுப்ஹு மற்றும் மஃரிப் தொழுகைக்குப் பின் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதனை 7 தடவைகள் ஓதினார்கள்.

اَللَّهُمَّ أَجِرْنِيْ مِنَ النَّارِ

பொருள்: யா அல்லாஹ்! நரகின் தண்டனையை விட்டும் என்னைப் பாதுகாத்து விடுவாயாக.

எவர் ஸுப்ஹுத் தொழுகைக்குப் பின் எவருடனும் கதைக்க முன்பு இதை 7 தடவை ஓதுகிறாரோ, அந்நாளில் அவர் மரணித்தால் அவர் நரகத்தைவிட்டு விடுதலை பெறுவார். அவ்வாறே மஃரிப் தொழுகைக்குப் பின் ஓதுகிறோரோ அந்த இரவில் அவர் மரணித்தால் அவர் நரகத்தைவிட்டு விடுதலை பெறுவார். (அபூதாவூத்)

ஸுப்ஹுத் தொழுகைக்குப் பின் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஓதினார்கள்.

اَللَّهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ عِلْمًا نَافِعًا وَرِزْقًا طَيِّبًا وَعَمَلاً مُتَقَبَّلاً

பொருள்: யாஅல்லாஹ்! பயனளிக்கும் கல்வியையும், தூய்மையான (ஹலாலான) உணவையும் ஏற்றுக் கொள்ளப்பட்ட அமலையும் நான் உன்னிடம் கேட்கிறேன். (இப்னு மாஜா)

இவ்வாறான பல துஆக்களை முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பர்ளுத் தொழுகைகளுக்குப் பின்னால் ஓதியுள்ளார்கள். இவற்றை பொருளுடன் மனனம் செய்து தொழுகைக்குப் பின் அமைதியாக இருந்து ஓதுவதன் மூலம் அல்லாஹ்வின் திருப்தியைப் பெற்றுக் கொள்வோம்.

இன்னும் இது போன்ற பல திக்ருகளும், துஆக்களும் ஹதீஸ்களில் வந்துள்ளன. அவற்றையும் முடியுமான அளவு கற்று இம்மையிலும் மறுமையிலும் பயனடைவோமாக.

**பயிற்சி**

1. 'துஆ முக்கியமான இபாதத் ஒன்றாகும்' ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டுக.
2. சுப்ஹானல்லாஹ், அல்ஹமதுலில்லாஹ், அல்லாஹு அக்பர் என்ற பதங்களை அரபியில் எழுதி அவற்றின் பொருளையும் சிறப்பையும் எடுத்துக் காட்டுக.
3. ஆயதுல் குர்ஸியில் அல்லாஹ்வின் பண்புகள் கூறப்பட்டுள்ள முறையினைக் குறிப்பிடுக.
4. மேலே கற்ற துஆக்கள் தவிர்ந்த தொழுகையைத் தொடர்ந்து ஓதக்கூடிய மற்றொரு துஆவைத் தேடி எழுதுக.

**செயற்பாடு**

தொழுகையைத் தொடர்ந்து ஓதும் ஓதல்களை மனனமிட்டு ஓதிக்காட்டுக.

# 10



# அத் தஸ்கியா



## தஸ்கியா என்றால் என்ன?

தஸ்கியா என்ற அறபுச்சொல் பரிசுத்தப்படுத்தல், சீர்படுத்தல் போன்ற கருத்துக்களைக் கொடுக்கிறது. இஸ்லாமியப் பரிபாஷையில் உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்தல் எனும் கருத்தைக் கொடுக்கும் தஸ்கியதுன் நப்ஸ் - என்பதே, சுருக்கமாக தஸ்கியா எனப்படுகிறது. தஸ்கியா என்பதன் மூலம் ஒரு முஸ்லிம் இணைவைத்தல் உள்ளிட்ட சகல மோசமான பண்புகளில் இருந்தும் தனது உள்ளத்தையும் செயல்களையும் பாதுகாப்பதுடன் அல்லாஹ் விரும்பாத சகல செயற்பாடுகள், ஆசைகள், எண்ணங்களில் இருந்தும் உள்ளத்தைக் கட்டுப்படுத்தி அதில் நற்பண்புகளை வளர்த்து அதனைத் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

அல்குர்ஆனில் உள்ளத்தின் (நப்ஸ்) மூன்று நிலைகள் பற்றிக் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

1. **நப்ஸுல் அம்மாரா பிஸ் ஸூஃ** எனும் தீமையை ஏவும் உள்ளம். இங்கு நன்மைக்கான தூண்டுதல் இருக்காது. இச்சைகளுக்கும் ஷைத்தானுக்கும் அடிமைப்பட்ட ஒரு நிலை காணப்படும்.

2. **நப்ஸுல் லவ்வாமா** எனும் தன்னையே நொந்துகொள்ளும் உள்ளம். இங்கு இச்சைகளுக்கு எதிரான போராட்டம் இருக்கும். அதேநேரம் இச்சைகள் மிகைத்து பாவங்களில் ஈடுபட்டுவிட்டால் உடனே அதற்காக அந்த மனம் வருந்தும். தன்னையே குறைகூறும். தன் நிலையறிந்து கைசேதப்படும்.

3. **நப்ஸுல் முத்மஇன்னா** எனும் அமைதியடைந்த உள்ளம். அது பதற்றம், தடுமாற்றம் இன்றி அமைதியான நிலையில் காணப்படும். தீமைக்கான தூண்டுதல் இங்கு மிகக் குறைவாகவே இருக்கும். நன்மைக்கான தூண்டுதலே மிகைத்துக் காணப்படும். இந்த மூன்றாவது நிலையான தீமைகளிலிருந்து பாதுகாக்கப்பட்டதாக உள்ளத்தை அமைத்துக் கொள்வதே தஸ்கியா மூலம் எதிர்பார்க்கப்படுகின்றது.

## தஸ்கியாவின் முக்கியத்துவம்

மனிதன் ஈருலகிலும் வெற்றி பெறுவதற்கு உளத்தூய்மை இன்றியமையாதது. உள்ளத்தைப் பாவங்களிலிருந்து பரிசுத்தப்படுத்துவதனூடாகவே இம்மையிலும் மறுமை யிலும் வெற்றி பெற முடியுமென அல்குர்ஆன் கூறுகிறது.

*'நிச்சயமாக யார் அதனை (உள்ளத்தை) தூய்மைப்படுத்துகிறாரோ அவர் வெற்றி பெற்றுவிட்டார். மேலும் யார் அதனை மாசுபடுத்துகிறாரோ அவர் நிச்சயமாக நஷ்டமடைந்து விட்டார்' (91: 9,10)*

இவ்விடயத்தை அல்லாஹ் தனது படைப்புகளான சூரியன், சந்திரன், இரவு, பகல் போன்றவை மீது சத்தியம் செய்துவிட்டுக் குறிப்பிட்டுள்ளமை உள்ளத்தைப் பரிசுத்தப் படுத்துவதன் முக்கியத்துவத்தை மென்மேலும் உறுதிப்படுத்துகிறது.

இறைதூதர்கள் இவ்வுலகிற்கு அனுப்பப்பட்டதன் பிரதான நோக்கங்களுள் ஒன்றாக, உள்ளங்களை பரிசுத்தப்படுத்தல் அமைந்துள்ளது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பணிகளைப் பற்றிக் குறிப்பிடும் போது அல்லாஹ் தன் அருள் மறையில் இவ்வாறு கூறுகின்றான்.

*'அவன் தான் எழுத வாசிக்கத் தெரியாதோர் மத்தியில் அவர்களில் இருந்து ஒரு தூதரை அனுப்பினான். அவர் அவர்களுக்கு அவனது வேத வசனங்களை ஓதிக் காட்டுபவராகவும் அவர்களை பரிசுத்தப்படுத்துபவராகவும் அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் (ஸுன்னாவையும்) கற்றுக்கொடுப்பவராகவும் உள்ளார்' (62:2)*

சுவனத்துக்குச் செல்வதற்கான ஓர் அடிப்படைத் தகுதியாக உள்ளத்தைப் பரிசுத்தப் படுத்தும் செயற்பாடு அமைந்துள்ளது. இதனை மிகக் கவனமாகக் கையாள வேண்டும். அதனைச் சீரான பாதையில் வழிநடத்தினாலே ஒழிய சுவனத்துக்கான பாதையில் பயணிக்க முடியாது. இதனைப் பின்வரும் குர்ஆன் வசனம் தெளிவுபடுத்துகின்றது.

*'யார் தன் இரட்சன் முன்நிற்பதைப் பயந்து, தன் உள்ளத்தை மனோ இச்சை களிலிருந்தும் தடுத்துக் கொள்கின்றாரோ நிச்சயமாக அவரது புகலிடமாகச் சுவனமே இருக்கும்' (79:40,41)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உளத்தூய்மையின் முக்கியத்து வத்தைப் பல்வேறு சந்தர்ப்பங்களில் தன் தோழர்களுக்கு எடுத்தியம்பியுள்ளார்கள். ஒரு முறை ஒருவரின் உள்ளம் சீர்பெறுவதன் முக்கியத்துவத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பின்வருமாறு உணர்த்தினார்கள்.

*'நிச்சயமாக உடம்பில் ஒரு சதைத்துண்டு உள்ளது. அது சீர்கெட்டுவிட்டால் முழு உடம்பும் சீர்கெட்டுவிடும். அது சீரடைந்து விட்டால் முழு உடம்பும் சீரடைந்து விடும். அதுதான் உள்ளம் ஆகும்' (புகாரி, முஸ்லிம்) என்றார்கள்.*

இஸ்லாத்தில் மிகச் சிறந்த ஜிஹாத்களுள் ஒன்றாக **முஜாஹததுன் நப்ஸ்** எனும் உளப் போராட்டம் கருதப்படுகின்றது. இதனையே கீழ்வரும் ஹதீஸ் தெளிவுபடுத்துகின்றது.

*'(மல்யுத்தத்தில்) பிறரை வீழ்த்துபவன் பலசாலி அல்லன். கோபத்தின்போது தனது உள்ளத்தைக் கட்டுப்படுத்திக்கொள்பவனே உண்மையான பலசாலி ஆவான்.' (புஹாரி, முஸ்லிம்)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடிக்கடி உளப் பரிசுத்தத்தை அல்லாஹ்விடம் வேண்டிப் பிரார்த்தனை செய்துவந்துள்ளார்கள்.

اللَّهُمَّ آتِ اَنْفُسَنَا تقْوَاهَا، وَزَكِّهَا أَنْتَ خَيْرُ مَنْ زَكَّاهَا، أَنْتَ وَلِيُّهَا وَمَوْلاَهَا.

'யா அல்லாஹ் எமது உள்ளங்களுக்கு இறையச்சத்தைக் கொடுத்துவிடுவாயாக. அதனை நீ பரிசுத்தப்படுத்துவாயாக. நிச்சயமாக நீயே சிறந்த பரிசுத்தப்படுத்துவோனாக இருக்கின்றாய். நீதான் அதன் பொறுப்புதாரியாகவும் எஜமானாகவும் உள்ளாய்' (முஸ்லிம்)

முன், பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இந்தளவுக்கு உளத்தூய்மைக்காக இறைஞ்சினார்கள் என்றிருந்தால் நாங்கள் இதன்பால் எந்தளவு தேவையுள்ளோராக இருக்கின்றோம் என்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

எமது செயற்பாடுகள் எவ்வளவு பாரியதாக இருந்தாலும் உளப் பரிசுத்தத்தோடு அவை நிறைவேற்றப்படாதபோது அவற்றுக்கு அல்லாஹ்விடத்தில் எந்தப் பிரயோசனமும் பெறுமானமும் இல்லாமல் போய்விடுகின்றது. அல்லாஹ் எமது ஒவ்வொரு செயலின் போதும் எமது உள்ளத்தையே அவதானிக்கின்றான். எமது வெளித்தோற்றத்தை விட உள்ளமே அல்லாஹ்விடத்தில் முக்கியம் பெறுகின்றது. அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து அறிவிக்கும் 'நிச்சயமாக அல்லாஹ் உங்களுடைய உடல்களையோ, முகங்களையோ பார்ப்பதில்லை. மாற்றமாக உங்களுடைய உள்ளங்களையே பார்க்கின்றான்' (முஸ்லிம்) என்ற ஹதீஸ் இதனை எமக்கு நன்கு தெளிவுபடுத்துகின்றது.

எனவே, அல்குர்ஆன், ஹதீஸ் காட்டித்தருகின்ற வழிமுறைகளைப் பின்பற்றி முகஸ்துதி, பெருமை, பொறாமை போன்ற இழிகுணங்களிலிருந்து தவிர்ந்துகொள்ளல், பர்ளான கடமைகளை உரியமுறையில் நிறைவேற்றல், நபிலான (உபரியான) வணக்கங்களை நிறைவேற்றல், திக்ர்களில் ஈடுபடல், அல்குர்ஆனை அதிகமாக ஓதுதல், தவ்பா செய்தல் போன்ற பல்வேறு செயற்பாடுகள் ஊடாக எமது உள்ளங்களைப் பரிசுத் தப்படுத்தி ஈருலகிலும் ஈடேற்றம் அடைய முயற்சிப்போம்.

**பயிற்சி**

1. தஸ்கியா என்பதன் மொழிக்கருத்து என்ன?
2. இஸ்லாமிய வழக்கில் 'தஸ்கியதுன் நப்ஸ்' என்பது எதனைக் குறிக்கிறது?
3. தஸ்கியா தொடர்பாக அல்குர்ஆன் ஹதீஸிலிருந்து ஒவ்வொரு ஆதாரத்தை தெரிந்தெடுத்து எழுதுக.
4. அல்குர்ஆன் மனித உள்ளத்தை எவ்வாறு பிரித்துக்காட்டுகின்றது?
5. தஸ்கியாவின் முக்கியத்துவத்தை ஐந்து அம்சங்களினூடாக எடுத்துக்காட்டுக.
6. எம்மில் உளப்பரிசுத்தம் ஏற்படுவதற்காக நாம் கடைப்பிடிக்க வேண்டிய ஐந்து விடயங்களை எடுத்துக்காட்டுக.

# 11



# நற்பண்புகள் பற்றிய இஸ்லாமியக் கண்ணோட்டம் - I



பக்குவப்பட்டதும், அங்கீகரிக்கப்பட்டதுமான ஒரு வாழ்வு எவ்விதமாக அமைய வேண்டும் என்பதை நற்பண்புகள் வரையறை செய்கின்றன. வாழ்வியலின் எல்லாப் பக்கங்களிலும், எல்லா நிலைகளிலும், எப்போதும் அவை பிரதிபலிக்க வேண்டும். ஏனெனில் ஏனைய உயிரினங்கள் அனைத்திலிருந்தும் வேறுபட்டு நிற்கும் மனிதன், தனித்துவமான உயர் நிலையை அடைவதற்கு இந்த நற்பண்புகளே காரணங்களாக அமைகின்றன.

நற்பண்பு குறித்த இந்த உயர்ந்த நிலை காரணமாகவே வரலாறு நெடுகிலும் நற்பண்பு பற்றிய கருத்துக்களும் சிந்தனைகளும் முன்வைக்கப்பட்டு வந்துள்ளன. உலகில் தோன்றிய சகல சமூகங்களும் நற்பண்புகளுக்குத் தனியான ஓர் இடத்தைக் கொடுத்ததோடு, அந்தந்த சமூகங்கள் நற்பண்பு தொடர்பான செயற்பாடுகளைப் பேணியும் வந்துள்ளன.

அறபு மொழியில் **குலுக் ஹஸன், அக்லாக் ஹஸனா, மகாரிமுல் அக்லாக், அதப், ஆதாப்** முதலான அரபுப் பதங்கள் நற்பண்புகளைச் சுட்டுவதற்காகப் பிரயோகிக்கப் படுகின்றன. நற்பண்புகளுக்கு இஸ்லாம் உயர்ந்த இடத்தை வழங்குகிறது. மனிதன் பெற்றிருக்க வேண்டிய நற்பண்புகளைப் போதிப்பதில் அல்குர்ஆனும் ஸுன்னாவும் பெரும் பங்காற்றுகின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நற்பண்பின் சிகரம் என வருணிக்கும் அல்குர்ஆன், நற்பண்புகளை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இருந்தே கற்றுக்கொள்ளுமாறும் பணிக்கின்றது. நற்பண்புகளால் சிறந்தவர்களே உங்களில் சிறந்தவர்கள் என்ற அல்குர்ஆன் வசனம், நற்பண்பு மிக்கோராய் வாழ்வதன் அவசியத்தையும் முக்கியத்துவத்தையும் விளக்கி நிற்கின்றது.

சிறு வயது முதலே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நற்பண்பு மிக்கவராய் இருந்துள்ளார்கள். அல்-அமீன் என்றும் அஸ்ஸாதிக் என்றும் அவர்கள் அழைக்கப்பட்டுள்ளார்கள். நபியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதன் பின்னரும் அவர்கள் மக்க ளோடு நற்பண்போடு நடந்துகொண்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கைக்கொண்ட நற்பண்புகள் இஸ்லாத்தின் பரம எதிரிகள் கூட இஸ்லாத்தில் இணைந்து அதன் காவலர்களாக மாற வழிவகுத்தன. இஸ்லாம் அரேபியாவிற்கு வெளியே உலகின் பல பிரதேசங்களிலும் பரவுவதற்கு, இஸ்லாம் பயிற்றுவித்த நற்பண்புகளும் காரணமாய் அமைந்தமைக்கு வரலாற்றில் பல சான்றுகளைக் கண்டுகொள்ளலாம்.அல்குர்ஆன், நற்பண்புகளுக்கு அதிக முக்கியத்துவம் வழங்குகின்றது. ஸூரா லுக்மானிலும், ஸூரா ஃபுர்கானிலும் ஒரு முஸ்லிமிடம் காணப்பட வேண்டிய முக்கியமான நற்பண்புகள் சுட்டிக்

காட்டப்பட்டுள்ளன. ஒரு முஸ்லிம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது பற்றிய போதனைகளை ஸூரா லுக்மான் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

அல்லாஹ்வுக்கு எந்த ஒன்றையும் இணை வைக்க வேண்டாம். தொழுகையை நிலைநிறுத்துங்கள். நன்மையை ஏவித் தீமையைத் தடுங்கள். உங்களுக்கு ஏற்படும் அனைத்துத் துன்பங்களின் போதும் பொறுமையைக் கடைப்பிடியுங்கள். மனிதர்களை விட்டும் உங்கள் முகத்தைத் திருப்ப வேண்டாம். பூமியில் பெருமையோடு நடக்க வேண்டாம். நடையில் நடு நிலையான தன்மையைக் கடைபிடியுங்கள். சப்தத்தைத் தாழ்த்திக் கொள்ளுங்கள். உரத்துக் கத்தும் கழுதையின் சப்தமே சப்தங்களில் வெறுக்கத் தக்கதாகும். *(12:19)*

இதே போன்று ஸூரா ஃபுர்கானில் இறையடியார்களின் பண்புகளைக் கூறுவதனூடாக இஸ்லாம் விரும்பும் நற்பண்புகள் சுட்டிக்காட்டப்படுகின்றன.

'அல்லாஹ்வின் நல்லடியார்கள் பூமியில் பணிவாக நடப்பார்கள். அறிவீனர்களோடு தர்க்கிக்காமல் கண்ணியமாக விலகிவிடுவார்கள். இரவில் கூடுதலாக இறைவனை வணங்குவார்கள். நரக வேதனையில் இருந்து பாதுகாப்புத் தேடுவார்கள். வீண்விரயமோ, உலோபித்தனமோ இல்லாமல் நடு நிலையில் செலவு செய்வார்கள். அல்லாஹ்வுக்கு இணையாக வேறு எதனையும் அழைக்க மாட்டார்கள். நியாயமின்றி எவரையும் கொலை செய்ய மாட்டார்கள். விபச்சாரம் செய்ய மாட்டார்கள். பொய்யாக எவருக்கும் சாட்சி கூற மாட்டார்கள். வீணான காரியங்களைக் காண நேரிட்டால் கண்ணியமான முறையில் விலகிச் சென்று விடுவார்கள். அல்குர்ஆன் வசனங்களைக் கேட்கும் போது அவர்கள் குருடர்கள், செவிடர்களைப் போல நடந்து கொள்ளமாட்டார்கள். மகிழ்ச்சியான குடும்பத்தை வேண்டிப் பிரார்த்திப்பார்கள்.' *(63:73)*

எனவே நாமும் அல் குர்ஆன், ஹதீஸ் வழி நின்று நற்பண்புகளை அணிகலன்களாகக் கொள்ள முயற்சிப்போமாக!

### பயிற்சி

1. நற்குணம் என்றால் என்ன என்பதை சுருக்கமாக விளக்குக.
2. இன்று மாணவர் மத்தியில் நற்பண்பின் அவசியம் குறித்து கலந்துரையாட வேண்டி இருப்பதன் அவசியத்தை எடுத்துக்காட்டுக.
3. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ரிஸாலத்தைப் பெறுமுன் எத்தகைய நற்பண்புகளைச் சுட்டும் பெயர்களால் அழைக்கப்பட்டார்கள் என்பதைக் குறிப்பிடுக.
4. ஸூறா லுக்மானில் குறிப்பிடப்பட்டுள்ள ஐந்து நற்பண்புகளைப் பட்டியலிடுக.
5. ஸூறா புர்கானில் குறிப்பிடப்பட்டுள்ள ஐந்து நற்பண்புகளைப் பட்டியலிடுக.



# 12
# நற்பண்புகள் பற்றிய இஸ்லாமியக் கண்ணோட்டம் - II



## இஸ்லாம் கூறும் சில நற்பண்புகள்

### அன்பு

அன்பு காட்டுதல் என்பது அல்லாஹ்வின் அழகிய பண்புகளுள் ஒன்றாகும். இப்பண்போடு தொடர்பான பல்வேறு பெயர்கள் (அர்ரஹ்மான்-அளவற்ற அருளாளன், அர்ரஹீம் - நிகரற்ற அன்புடையவன், அல்வதூத்- மிகவும் இரக்கமுடையவன்) அல்லாஹ்வுக்கு உண்டு. அன்புமிக்க அவன் தனது அடியார்கள் மீது அன்பு செலுத்துவோரை அதிகம் விரும்புகிறான்.

ஒரு முஸ்லிம் அன்பு செலுத்தும் பண்பைப் பெற்றிருக்கின்றானென்றால் அவன் அல்லாஹ்வுக்குரிய அப்பண்பை அணிகலனாகப் பெற்றிருக்கிறான் என்று அர்த்தமாகும்.

அல்லாஹ் தன் அடியார்கள் மீது வைத்துள்ள அன்பு எத்தகையது என்பதை பின்வரும் ஹதீஸ் விளக்கிக் காட்டுகிறது.

(ஹவாஸின் குலத்தைச் சேர்ந்த) கைதிகள் சிலர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தார்கள். அவர்களிடையே இருந்த ஒரு பெண்ணின் மார்பில் பால் சுரந்து கொண்டிருந்தது. அவள் பாலூட்டுவதற்காக(த் தன் குழந்தையைத் தேடிக் கொண்டிருந்தாள்). குழந்தை கிடைக் கவில்லை. எனவே, கைதிகளில் எந்தக் குழந்தையைக் கண்டாலும், அதை (வாரி) எடுத்துப் பாலூட்டினாள். தன் குழந்தை கிடைத்தவுடன் அதை எடுத்துத் தன் வயிற்றோடு அணைத்துப் பாலூட்டலானாள். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'இந்தப் பெண் தன் குழந்தையை தீயில் எறிவாளா? சொல்லுங்கள்!' என்று எங்களிடம் கேட்டார்கள். நாங்கள், 'இல்லை, எந்நிலையிலும் அவளால் எறிய முடியாது' என்று சொன்னோம். அப்போது இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், இந்தக் குழந்தையின் மீது இவளுக்குள்ள அன்பைவிட அல்லாஹ் தன் அடியார்களின் மீது மிகவும் அன்பு வைத்துள்ளான் என்று கூறினார்கள். (புகாரி)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அன்பு, கருணை, இரக்கம், தயாளம் முதலான அழகிய அருங்குணங்களைக் கொண்டிருந்தார்கள். இதனாலேயே அல்குர்ஆன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்வருமாறு சிலாகித்துப் பேசுகிறது.

'நபியே நாம் உம்மை அகிலத்தாருக்கெல்லாம் அருட்கொடையாகவேயன்றி அனுப்பவில்லை' (22: 107)

அம்பினால் அடைந்து கொள்ள முடியாததை அன்பின் மூலம் அடைந்துகொள்ள முடியும் என்று பொதுவாகக் குறிப்பிடப்படுவதுண்டு.

அன்பு இல்லாதவனிடம் பூரண ஈமான் இருக்காது என்பதும் ஈமானை இழந்தவன் சுவர்க்கத்தை அடைய முடியாது என்பதும் இஸ்லாத்தின் போதனையாகும். இக்கருத்தைப் பின்வரும் ஹதீஸ் விளக்குகிறது.

'என் ஆத்மா எவன் கைவசம் இருக்கிறதோ அந்த இறைவன் மீது சத்தியமாக, நீங்கள் ஈமான் கொள்ளும் வரை சுவர்க்கம் நுழைய மாட்டீர்கள். பரஸ்பரம் அன்பு கொள்ளும் வரை ஈமான் கொள்ளவும் மாட்டீர்கள்' (முஸ்லிம்)

ஒருவர் பிறிதொருவர் மீதோ, ஏனைய ஜீவராசிகள் மீதோ அன்பு காட்டுவதால் எதுவும் குறைவடைந்து விடப்போவதில்லை. பகரமாக அல்லாஹ்வின் அன்பும் பிறரின் அன்பு, மரியாதை முதலானவையும் அவருக்குக் கிடைத்துவிடுகின்றன. இது சமூக மட்டத்தில் பரஸ்பரம் மகிழ்ச்சி, ஒற்றுமை, நல்லிணக்கம், சுபிட்சம் என்பன நிலவுவதற்குக் காரணமாக அமைந்துவிடுகின்றது.

அன்பு வைத்தலை இரு பிரிவுகளாகப் பிரித்து நோக்கலாம்.

1) அல்லாஹ்வின் மீது அன்பு வைத்தல்

2) படைப்பினங்கள் மீது அன்பு வைத்தல்

மனிதன் படைப்பினங்கள் மீது கொள்ளும் அன்பைவிட ஆழமான அன்பை அல்லாஹ் மீது வைத்திருக்க வேண்டுமென்று இஸ்லாம் எதிர்பார்க்கின்றது. இந்தவகையில் அன்பின் எல்லையை அல்குர்ஆன் பின்வருமாறு வரையறை செய்கிறது.

'நபியே நீர் கூறுவீராக! உங்களது முன்னோர்களும், உங்களுடைய ஆண்மக்களும், உங்களுடைய சகோதரர்களும் உங்களது மனைவியரும், உங்களது குடும்பத்தினரும், நீங்கள் சம்பாதித்துள்ள செல்வங்களும் நஷ்டம் வந்துவிடுமோ என்று நீங்கள் அஞ்சுகின்ற வியாபாரமும் உங்களுக்குத் திருப்தியை அளிக்கும் உங்களது இல்லங்களும் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் அவனது பாதையில் போர் செய்வதையும் விட உங்களுக்கு மிகவும் விருப்பமானவையாக இருந்தால் இறைவனின் தண்டனை பற்றிய கட்டளை வரும் வரை எதிர்பாருங்கள்' (09: 24)

அல்லாஹ் மீதான அன்பு வைத்தலுக்கு உதாரணம், அவனது மார்க்கத்தின் மீது அன்பு கொள்வதும் அவனது கட்டளைகளுக்கு மதிப்பளித்து வாழ்வதுமாகும். ஒருவன் மனிதர்களில் எவர் மீதாவது அன்பு வைப்பதாகவோ அல்லது வெறுப்பதாகவோ இருந்தால் அதனையும் அல்லாஹ்வுக்கென அமைத்துக்கொள்வது இஸ்லாமிய நெறிமுறையாகும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் 'மூன்று விடயங்கள் எவரிடம் இருக்குமோ அவற்றின் மூலம் அவர் ஈமானின் சுவையைக் கண்டு கொள்வார். அவை- ஏனைய அனைத்தையும் விட அல்லாஹ்வும் அவனது தூதரும் அவருக்கு விருப்புக்குரிய வர்களாக இருத்தல், ஒரு மனிதன் மீது அல்லாஹ்வுக்காக மாத்திரமே நேசம் வைத்தல், இறை நிராகரிப்பில் இருந்து அல்லாஹ் பாதுகாத்த பின்னர் நெருப்பில் எறியப்படுவதை வெறுப்பது போல் மீண்டும் இறை நிராகரிப்பில் நுழைவதை வெறுத்தல்.' (புகாரி, முஸ்லிம்)

அல்லாஹ் மீது அன்பு கொள்வது என்பதன் மற்றோர் கருத்து அல்லாஹ்வின் தூதுவர் மீதும் அன்பு கொண்டு, அவர்களது கட்டளைகளுக்கு முழுமையாகப் பணிந்து நடப்பதாகும். இதனை அல்குர்ஆன் பின்வருமாறு குறிப்பிடுகின்றது. '(நபியே! மக்களிடம்) நீர் கூறுவீராக. நீங்கள் உண்மையில் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள் அல்லாஹ் உங்களை நேசிப்பான்.' (03: 31)

ஒருவனது இபாதத் உயிரோட்டம் மிக்கதாய் அமைவதற்கு அல்லாஹ்வின் மீது அன்பு கொள்வது பிரதானமாகின்றது. இந்த நிலையை அன்பு கலந்த பயம் (மஹப்பத்) என இஸ்லாமிய அறிஞர்கள் விளக்குகின்றனர். இதன் காரணமாக இறை விசுவாசிகள் இபாதத்துகளை மனவிருப்போடு நிறைவேற்றுவார்கள். பின்வரும் அல்குர்ஆன் வசனம் இதனை உறுதி செய்கின்றது.

'அவர்கள் அல்லாஹ் மீதுள்ள அன்பின் காரணமாக ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் கைதிகளுக்கும் உணவளிக்கின்றனர். மேலும் அவர்களிடம், நாங்கள் அல்லாஹ்வுக்காகவே உங்களுக்கு உணவளிக்கின்றோம். நாங்கள் உங்களிடமிருந்து எந்தவொரு பிரதிபலனையும் நன்றியையும் எதிர்பார்க்கவில்லை எனவும் கூறுகின்றனர்.' (76 :8,9)

இவ்வாறு அல்லாஹ்வின் மீது ஒருவன் அன்பு வைத்து அவனுக்காகவே வாழ்ந்து வருகின்றபோது, அவன் அல்லாஹ்வின் அன்பைப் பெற்ற இறை நேசனாக மாறிவிடுகிறான். இதனைப் பின்வரும் ஹதீஸ் விளக்குகிறது. 'ஓர் அடியானை அல்லாஹ் விரும்பினால், ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அழைத்து நான் இந்த மனிதனை விரும்புகிறேன். எனவே நீயும் அவன் மீது அன்பு கொள் என்று கூறுவான். அப்போது ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவன் மீது அன்பு கொள்வார். பின்னர் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் வானத்தில் உள்ளவர்கள் மத்தியில் அல்லாஹ் இந்த மனிதனை விரும்புகிறான் எனவே நீங்களும் அவனை விரும்புங்கள் என்று அழைப்பு விடுப்பார். வானத்தில் உள்ளவர்கள் அவனை விரும்புவார்கள். பின்னர் அந்த அடியானுக்கு பூமியில் உள்ளவர்கள் மத்தியில் ஒப்புதல் கிடைக்க வழி செய்யப்படும்.' (புகாரி, முஸ்லிம்)

அன்பு வைத்தலில் அடுத்த கட்டம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அன்பு செலுத்துவதாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கையை முன்மாதிரியாகக் கொள்வது, அவரது விருப்பு வெறுப்புக்கு முன்னுரிமை கொடுத்து வாழ்வது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அன்பு செலுத்தும் விடயங்களில் உள்ளடங்குகின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அன்புகாட்டும் ஒரு முஸ்லிம் அவர்களது குடும்பத்தவர்கள் மீதும் அன்பு காட்டுவது அவசியமாகும். நபித்தோழர்கள் மீது அன்பு காட்டுதல் என்பது ஸஹாபாக்களின் சிறப்புக்களை ஏற்று அவர்களது குறைகளையும் அவர்களிடையே இடம்பெற்ற சர்ச்சைகளையும் பற்றிய வாதப் பிரதிவாதங்களில் ஈடுபடாமல் மௌனம் சாதிப்பதுமாகும். அத்துடன் உம்மஹாதுல் முஃமினீன்களான நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனைவிமார்கள் அனைவரும் கௌரவத்துக்குரியவர்கள் என்றும் பரிசுத்தமானவர்கள் என்றும் ஏற்றுக்கொள்ளவும் வேண்டும்.

அன்பு வைத்தலின் அடுத்த நிலை தன் மீதும் தன் பெற்றோர், உறவினர்கள் அயலவர்கள், முஸ்லிமல்லாதார் மீதும் அன்பு காட்டுவதாகும்.

ஒருவன் தன் மீது காட்டும் அன்பு என்பது தன் மீதான உரிமைகளையும் கடமைகளையும் பேணி நடப்பதாகும். இஸ்லாத்தின் பார்வையில் ஒருவன் தன்னைத்தானே அழித்துக் கொள்வது பெரும் குற்றமுமாகும்.

அடுத்ததாக அன்பு செலுத்தவும், நன்றி பாராட்டவும், கீழ்ப்படியவும் தகுதியானவர்கள் பெற்றோர்களாவர். பெற்றோருக்கு பிள்ளைகள் எவ்வாறு தமது அன்பை வெளிப்படுத்த வேண்டும் என்பதை பின்வரும் அல்குர்ஆன் வசனமும் ஹதீஸ் நிகழ்வும் விளக்குகின்றன.

*தமது தாய் தந்தையர்களுக்கு நன்றி செலுத்துவது பற்றி நாம் மனிதனுக்கு நல்லுபதேசம் செய்தோம். அவனது தாய் துன்பத்துக்கு மேல் துன்பத்தை அனுபவித்து (கர்ப்பத்தில்) அவனைச் சுமந்தாள். (அவன் பிறந்த) பிறகும் இரண்டு வருடங்களுக்குப் பின்னரே அவனுக்கு பால் மறக்கடிக்கச் செய்தாள். (ஆகவே மனிதனே!) நீ எனக்கும், உன்னுடைய தாய் தந்தைக்கும் நன்றி செலுத்தி வா. (முடிவில் நீ) என்னிடமே வந்து சேர வேண்டியிருக்கிறது (31:14)*

*ஒருவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! நாம் நல்ல முறையில் நடந்து கொள்ள அனைவரிலும் தகுதியானவர் யார்? எனக் கேட்டார். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உமது தாய்! எனப் பதிலளித்தார்கள். அதன் பிறகு யார்? என மீண்டும் கேட்ட போது உமது தாய்! என்றார்கள். அடுத்தது யார்? என மீண்டும் கேட்ட போது உமது தாய்! என்றே பதிலளித்தார்கள். அதன் பிறகு யார்? என நான்காவது முறையாகக் கேட்ட போது உமது தந்தை!' என்றார்கள். (புகாரி)*

பெற்றோர் மீது அன்பு செலுத்துவதோடு மட்டும் நின்றுவிடாது, அவர்களுக்கு இறை வனின் அன்பும் அருளும் கிடைக்க வேண்டுமெனப் பிரார்த்திப்பதும் பிள்ளைகள் மீது கடமையாகும். இதனைப் பின்வரும் அருள்மறை வசனம் நன்கு தெளிவுபடுத்துகின்றது.

*'இன்னும், இரக்கம்கொண்டு பணிவு எனும் இறக்கையை அவ்விருவருக்காகவும் தாழ்த்துவீராக மேலும், என் இறைவனே! நான் சிறு பிள்ளையாக இருந்தபோது என்னை (ப் பரிவோடு) அவ்விருவரும் வளர்த்ததுபோல், நீயும் அவர்களிருவருக்கும் கிருபை செய்வாயாக! என்று கூறிப் பிரார்த்திப்பீராக' (17 : 24)*

இதே போன்று பெற்றோரும் தம் பிள்ளைகள் மீது அதிக அன்பு காட்டுவது அவசியமாகும். பிள்ளைகளுடன் அன்பாகப் பழகி அவர்களது உள்ளங்களில் அன்பை வளர்த்திட வேண்டும், கடுகடுப்பு, ஏச்சுப்பேச்சு, கண்டனம் முதலானவற்றைப் பெற்றோர் தவிர்க்க வேண்டும். இவை பிள்ளைகளை வம்பர்களாகவும், போக்கிரிகளாகவும் ஆக்க வல்லவை. கண்டனத்தின் மத்தியில் வளரும் பிள்ளை கண்டனத்தையே கற்றுக் கொள்ளும் என்ற கூற்றைப் பெற்றோர் கவனத்தில் கொள்வது சிறந்ததாகும்.

மேலும் ஒருவர் முஸ்லிம் என்ற வகையில் உற்றார் உறவினர், நண்பர்கள், அயலார், அநாதைகள், ஆதரவற்றோர், வேலையாட்கள், தன் கட்டுப்பாட்டின் கீழ் வாழ்வோர், முஸ்லிமல்லாதோர் முதலான சகல மனிதர்கள் மீதும் அன்பு காட்டுதல் வேண்டும்.

அன்பு காட்டுதல் என்ற விடயம் மனிதனல்லாத ஏனைய ஜீவராசிகள் மீது அன்பு காட்டுவதையும் உள்ளடக்குவது கவனிக்கத்தக்கதாகும்.

'பூமியில் ஊர்ந்து திரியும் பிராணிகளும் தம் இரு இறக்கைகளால் பறக்கும் பறவைகளும் உங்களைப்போன்ற இனமேயன்றி வேறில்லை' (06 : 38) என்ற அல்குர்ஆன் வசனம் மனிதனல்லாத ஏனைய ஜீவராசிகளும் மனிதனைப்போன்ற படைப்பினங்கள் என்ற வகையில் அவற்றின் மீது அன்பும் பரிவும் பாசமும் காட்டப்படல் வேண்டும் என்பதை உணர்த்துகிறது. மட்டுமல்லாது அவற்றின் மீது கூடுதல் கவனம் செலுத்துவதும் அவசியமாகும். பின்வரும் ஹதீஸ்கள் இதனை தெளிவுபடுத்துகின்றன.

'உங்கள் மிருகங்களின் முதுகை உங்களது சாய்வு நாற்காலிகளாக ஆக்கிக்கொள்ளாதீர்கள்' (அஹ்மத், ஹாக்கிம்)

'படைப்புகள் அனைத்தும் அல்லாஹ்வின் பராமரிப்பில் உள்ளனவே, மண்ணில் உள்ளவற்றுக்கு அன்பு காட்டுங்கள். விண்ணில் உள்ளவன் உங்கள் மீது இரக்கம் காட்டுவான்' (அபூதாவூத்)

நாய், பன்றி என்பன நஜீஸான பிராணிகளாக இருப்பினும் அவற்றை வதை செய்வதற்கு இஸ்லாத்தில் அனுமதியில்லை. தாகித்த நாய்க்கு நீர் புகட்டியதற்காக பாவியான ஒரு பெண் சுவனம் சென்றதாகவும், பூனை ஒன்றை உணவு வழங்காது கட்டிவைத்ததற்காக நல் அமல்கள் செய்துவந்த ஒரு பெண் நரகம் சென்றதாகவும் (புஹாரி) ஹதீஸ்கள் குறிப்பிடுகின்றன. இவை எல்லாம் உயிர்ப்பிராணிகள் என்ற வகையில் அவற்றின் மீது அன்பு காட்டுவது அவசியம் என்பதையும் அதற்காக அல்லாஹ்விடம் எமக்கு நற்கூலி கிடைக்கும் என்பதையும் உணர்த்தி நிற்கின்றன.



இவை அனைத்துக்கும் அப்பால், நாம் வாழும் சுற்றாடலைப் பேணிப் பாதுகாப்பதும், இஸ்லாம் கற்றுத் தரும் அன்பு காட்டுதல் என்ற வட்டத்துக்குள் அடங்குகின்றது. சுற்றாடலைச் சுத்தமாகவும், அழகாகவும் வைத்திருக்குமாறும் இயற்கைச் சூழலைப் பேணிப் பாதுகாக்குமாறும் அதனை வளப்படுத்துமாறும் போதிக்கும் இஸ்லாம், அதனைத் தானும் பயன் பெற்று, ஏனையோரும் பயன்பெற வழிசெய்யுமாறும் பணிக்கிறது. சூழலை வளப்படுத்தல் என்பது இஸ்லாம் வலியுறுத்தும் மிக முக்கியமான பணிகளுள் ஒன்றாகும்.

எனவே நாம் அன்பின் பரப்பெல்லைகளைச் சரியாக விளங்கி அதன்படி வாழ்க்கையை அமைத்து, அனைவருக்கும் முன்மாதிரியாகத் திகழ்வோமாக! இறையன்பைப் பெற்று வாழ்வோமாக!

## தியாகம்

ஒன்றைப் பெறுவதற்காக ஒன்றை இழப்பது தியாகம் எனப்படுகிறது. இஸ்லாம் போற்றும் பண்புகளுள் தியாகம் அதி உன்னத இடத்தை வகிக்கின்றது. மிகக் குறுகிய ஒரு காலப் பிரிவுக்குள் உலகின் பல பாகங்களிலும் இஸ்லாம் வியாபித்ததற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களதும் அவர்களது தோழர்களதும் அளப்பரிய தியாகங்களே காரணங்களாக அமைந்தன. இதனாலேயே இஸ்லாம் மார்க்கம் தியாகத்தில் மலர்ந்த மார்க்கம் என்றும் அழைக்கப்படுகின்றது.

அல்லாஹ்வுக்காக என்ற இஃலாஸான எண்ணத்தோடு உடலால் அல்லது பொருளால் பிறருக்கு உதவுவதும், அதனால் வருகின்ற சிரமங்களைத் தாங்கிக்கொள்வதும் தியாகம் ஆகும். ஒரு மனிதனுக்கு ஏதாவதொன்றில் தேவை இருக்கும்போது தனது தேவையைப் பொருட்படுத்தாது அடுத்த மனிதனின் தேவையைப் பூர்த்தி செய்வதையும், அடுத்தவனுக்கு உதவ வேண்டும் எனும் நிர்ப்பந்தம் எதுவும் இன்றி தனது சொந்த நலனையும் பாராமல் உதவி ஒத்தாசை புரிவதையும் தியாகம் எனக் குறிப்பிடலாம்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மக்காப் பருவத்தின்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் தோழர்களுக்கும் குறைஷியர் கொடுமைக்கு மேல் கொடுமை செய்தபோது, அவர்கள் தமது சொந்த நலன்களையும் சுகங்களையும் தியாகம் செய்ததால் பல இன்னல்களுக்கும் சித்திரவதைகளுக்கும் ஆளானார்கள். சிலர் தமது உயிர்களையே தியாகம் செய்தனர். இவ்வாறான அளப்பரிய தியாகங்கள் செய்த அம்மக்களை அல்லாஹ் 'ஸாதிகூன்' 'பாஇஸூன்' எனப் புகழ்ந்து கூறியுள்ளான்.

*தமது வீடுகளை விட்டும், தமது பொருட் களை விட்டும் (அக்கிரமமாக) வெளிப்படுத்தப் பட்டு (மக்காவிலிருந்து) ஹிஜ்ரத் செய்து வந்த ஏழைகளுக்கும் (அதில் பங்குண்டு). அவர்கள் அல்லாஹ்வுடைய அருளையும் அவனது பொருத்தத்தையும் அடையக் கருதி (தங்கள் உயிர்களையும் பொருளையும் தியாகம் செய்து) அலாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் உதவி செய்து கொண்டிருக்கின்றனர். இவர்கள்தாம் 'ஸாதிகூன்' எனும் உண் மையான விசுவாசிகளாவர். (59: 8)* அவ்வாறே ஸூரா தவ்பாவின் 20ஆவது வசனம் இவர்கள்தான் பாஇஸூன் எனும் வெற்றியாளர்கள் எனக் கூறுகின்றது.

இஸ்லாத்தின் ஆரம்பப் பருவத்தில் எதிரிகளின் அச்சுறுத்தல்களுக்கு முஸ்லிம்கள் இலக்கானபோது வசதி படைத்த நபித் தோழர்கள் தமது சொத்துக்களையும் செல்வங் களையும் அல்லாஹ்வின் மார்க்கத்தைப் பாதுகாப்பதற்காகச் செய்த அளப்பரிய தியாகங்கள் வரலாற்றில் பதிவாகியுள்ளன.

தபூக் போருக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அழைப்பு விடுத்தபோது அபூபக்ர் (ரழி) அவர்கள், யுத்தச் செலவுக்காகத் தமது செல்வம் அனைத்தையும் கொண்டுவந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முன்னிலையில் குவித்தார்கள். இதன்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் தோழர் அபூபக்ரிடம், உமது குடும்பத்துக்காக எதனை வைத்துவிட்டு வந்தீர்? என வினவியதற்கு, அல்லாஹ்வையும் அவனது தூதரையும் எனப் பதிலளித்தார்கள்.

ஒரு முறை அரேபியாவில் கடும் பஞ்சமும் வரட்சியும் ஏற்பட்டது. இவ்வேளை ரோம சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக இருந்த ஹிரக்கீலியஸ் முஸ்லிம்களுக்கு எதிராக ஒரு பெரும் படையைத் திரட்டி யுத்தமொன்றுக்கு ஆயத்தமானான். ஆனால் நாட்டின் இக்கட்டான சூழ்நிலை காரணமாக ஹிரக்கீலியஸின் சவாலை எதிர் கொள்வதில் முஸ்லிம்கள் பெரும் சிரமங்களை எதிர்கொள்ள வேண்டி இருந்தது. இந்நிலையில் ஐந்தாயிரம் திர்ஹம்கள் பெறுமதியான பொருட்களோடு மதீனா வந்திருந்த உஸ்மான் ரழியல்லாஹுஅன்ஹு அவர்களின் வியாபாரக் குழுவிடமிருந்து பொருட்களை வாங்க ஏராளமான வியாபாரிகள் வந்திருந்தனர். ஆனால் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பொருட்களை விற்க மறுத்ததுடன் அனைத்துப் பொருட்களையும் ஹிரக்கீலியஸின் படையை எதிர்கொள்வதற்காகத் தியாகம் செய்துவிட்டார்கள்.

தியாகம் வெளிப் பார்வைக்குப் பேரிழப்பாகத் தோன்றினாலும் அதற்கான பிரதிபலன் நிச்சயம் கிடைத்தே தீரும். தியாகம் செய்வது அல்லாஹ்வின் ஏவல் என்ற வகையில் அது இபாதத் ஒன்றாகவும் கணிக்கப்படுகின்றது. தியாகத்துக்கான பிரதிபலன் சுவர்க்கமாகும். இக்கருத்தை பின்வரும் அல்குர்ஆன் வசனம் உறுதிப்படுத்துகிறது.

'அல்லாஹ் முஃமின்களது உயிர்களையும் பொருட்களையும் நிச்சயமாக அவர்களுக்கு சுவர்க்கத்தைத் தருவதாகக் கூறி, உண்மையாகவே விலைக்கு வாங்கிக்கொண்டான்.' **(9: 111)**

இஸ்லாத்தின் பார்வையில் தியாகமென்பது அல்லாஹ்வின் ஏவல் என்பதற்கு அப்பால் அது அவனைத் திருப்திப் படச் செய்யும் அமலாகவும் அமைகின்றது. இதனைப் பின்வரும் ஹதீஸும், அதனோடு சேர்த்துக் கூறப்பட்ட அல்குர்ஆன் வசனமும் எடுத்துக் காட்டுகின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு மனிதர் வந்து தனது வறுமை நிலை பற்றி முறையிட்டார். இது கேட்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவருக்கு ஏதாவது கொடுக்கும்படி கூறி அவரைத் தன் வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். ஆனால் அவருக்குக் கொடுப்பதற்கு வீட்டில் எதுவும் இருக்கவில்லை. அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கிருந்த தன்னுடைய தோழர்களிடம், இன்றிரவு இவருக்கு உணவளிப்பதற்கு உங்களில் எவராவது இருக்கிறீர்களா எனக் கேட்டுவிட்டு, அல்லாஹ் அவருக்கு அருள் புரிவான் என்றார்கள்.

அதைக் கேட்ட அன்ஸாரித் தோழர்களில் ஒருவர், அல்லாஹ்வின் தூதரே! நான் இருக்கிறேன் என்றார். பின்னர் அத்தோழர் அந்த மனிதனை அழைத்துக்கொண்டு தனது வீட்டுக்குச் சென்றார். வீட்டில் தனது மனைவியிடம், அல்லாஹ்வின் தூதருடைய விருந்தாளி ஒருவர் வந்திருக்கிறார். எனவே வீட்டில் எதனையும் மிச்சப்படுத்த வேண்டாம் என்றார். அதற்கு அவரது மனைவி. குழந்தைகளுக்கான உணவைத் தவிர வேறு எதுவும் என்னிடம் கிடையாது என்றார். அப்படியானால் குழந்தைகளை உறங்க வைத்துவிடு என்றார் கணவர். (குழந்தைகள் உறங்க வைக்கப்பட்டதன் பின்னர் விருந்தாளிக்கு உணவு பரிமாறப்படுகிறது.)

இச்சந்தர்ப்பத்தில் மனைவியைப் பார்த்து, சாப்பிடுவது போன்று நாங்கள் பாசாங்கு செய்வதற்காக விளக்கை அணைத்து விடு; இன்றிரவு நாம் எமது வயிறுகளையும் அணைத்து விடுவோம் என்றார். அவரது மனைவியும் அவ்வாறே செய்தார். (இதன் காரணமாக அவ்வுணவு முழுவதையும் அந்த விருந்தாளி திருப்தியோடு சாப்பிட்டு முடித்தார்.) அடுத்த நாள் அந்த அன்ஸாரித் தோழர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சந்தித்த சந்தர்ப்பத்தில், ‘கண்ணியமும் மகத்துவமும் நிறைந்த அல்லாஹ் அத்தம்பதியினரின் நடவடிக்கைகளைக் கண்டு வியப்படைந்தான்’ என்று கூறிய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், இச்சம்பவம் தொடர்பாகத் தனக்கு இறங்கிய கீழ் வரும் அல்குர்ஆன் வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.

*தமக்கு (கடும்) தேவை இருந்த போதிலும் தம்மை விட அவர்களையே தேர்ந்தெடுத்துக்கொள்கின்றனர். (59: 9) (புகாரி, முஸ்லிம்)*

இது போன்ற தியாகத்துக்கு முன்மாதிரியாக அமைகின்ற பல வரலாற்றுச் சம்பவங்களை, முன்னைய நபிமார்கள் மற்றும் அவர்களது சமூகங்களில் காணமுடிகின்றது. எனவே நாமும் நமது முன்னோர்களைப் போன்று தியாகங்கள் செய்து அல்லாஹ்வின் திருப்தியைப் பெற்றுக்கொள்வோம்.

### ஈகை

அன்பின் வெளிப்பாடுகளில் ஈகையும் ஒன்று. ஈகை என்பது அல்லாஹ் தனக்கு வழங்கிய செல்வத்தில் ஒரு பகுதியைப் பிறருக்கும் கொடுப்பதாகும். இது இஸ்லாம் விரும்புகின்ற நற்பண்புகளில் ஒன்றாகும். அல்லாஹ் மாபெரும் கொடையாளி. தனது அடியார்களுக்கு அவன் கொடையாக வழங்கியவற்றை அவ்வடியார்கள் மற்ற அடியார்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என அவன் விரும்புகின்றான். இது பற்றி அல்குர்ஆன் பல இடங்களில் வலியுறுத்திக் கூறியுள்ளது.



*‘யாரெல்லாம் தமது பொருட்களை (தர்மத்திற்காக) இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், பரகசியமாகவும் செலவு செய்கின்றார்களோ அவர்களுக்கு அவர்களுடைய கூலி அவர்களின் இறைவனிடத்தில் உண்டு. தவிர அவர்களுக்கு மறுமையில் யாதொரு பயமும் இல்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்’ (2:274)*

தாம் பெற்ற செல்வத்தைத் தானும், தனது குடும்பத்தவரும் அனுபவிப்பதிலும் தமது தேவைக்காகப் பயன்படுத்துவதிலும் எவ்விதத் தவறுமில்லை. எனினும் அதனை அவர்களுக்கு வழங்கிய அல்லாஹ் அதனை மற்றவருக்கும் கொடுக்கும்படி கூறும் போது அவனுடைய கட்டளையை நிறைவேற்ற வேண்டியது மனிதனின் கடமையாகும். அல்லாஹ் விரும்பினால் அச்செல்வத்தைத் திருப்பி எடுத்துப் பிறருக்குக் கொடுத்து விடவும் சக்தியுள்ளவனாவான்.

இதனால்தான் நாம் அல்லாஹ்வை **அல் முஃனீ - செல்வந்தனாக ஆக்குபவன், அல் முஃதீ - கொடுப்பவன்** என்ற பெயர்களால் அழைக்கின்றோம். இயல்பாகவே மனிதனுக்கு சுயநலம் உண்டு. பல்வேறுபட்ட சுய நலன்கள் அவனது கரங்களைக் கவ்விப் பிடித்துக் கொண்டி ருக்கின்றன. அவனுடைய உள்ளத்தில் உலோபித்தனத்தை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன. ஆனால் இஸ்லாம் இத்தகைய மனோ நிலையைக் கீழ்த்தரமாகக் கருதுகின்றது. இது மனிதர்கள் மத்தியில் வெறுப்பும், குரோதமும் வளர்வதற்கும், போட்டி, பொறாமை ஏற்படுவதற்கும் காரணமாவதால் கடுமையாக கண்டிக்கப்பட்டும் உள்ளது. எனவே மிகவும் தாராளத்தன்மையுடன் நடந்துகொள்ளல் வேண்டும். ஈகை, கொடை, தர்மம், தாராளத் தன்மை என்பன இஸ்லாம் போற்றுகின்ற சிறந்த பண்புகளாகும்.

ஒருவன் உலோபித்தனம் செய்து கஞ்சனாக நடக்கின்றான் என்றால், தனக்குக் கிடைக்கவிருக்கும் நற்கூலி, நற்பெயர் என்பவற்றை அல்லாஹ்விடமும், மனிதர்களிடமும் கெடுத்துக் கொள்கின்றான் என்பதே பொருளாகும். மற்றொருவர் அல்லாஹ் அவருக்கு அருளிய செல்வங்களைத் தாராளத்தன்மையுடன் பிறருக்கும் கொடுத்து வாழ்கின்றார் என்றால் அல்லாஹ்விடம் நற்கூலியையும், மனிதர்களிடத்தில் நன்மதிப்பையும் பெற்றுக் கொள்கின்றார் என்பதே பொருளாகும்.

ஆகவே ஒரு மனிதன் தானும் வாழ்ந்து, பிறருக்கும் கொடுத்து பிறரையும் வாழ வைக்கும் போதே வாழ்வின் உண்மையான பயனைப் பெறுகின்றான். அப்போதுதான் அவனுடைய இம்மை வாழ்வு மகிழ்ச்சியானதாகவும், மறுமை வாழ்வு ஈடேற்றம் மிக் கதாகவும் மாறுகின்றன. இதனைப் பின்வரும் அல்குர்ஆன் வசனம் உணர்த்துகின்றது.

'ஆதலால் உங்களால் இயன்ற வரையில் அல்லாஹ்வுக்குப் பயந்து அவனுக்கு செவி சாய்த்து வழிபட்டு நடந்து தானமும் செய்யுங்கள். இது உங்களுக்குத் தான் நல்லது. எவர்கள் உலோபித்தனத்திலிருந்து தம்மை இரட்சித்துக் கொண்டார்களோ அத்தகையோர் நிச்சயமாக சித்தியடைந்தோராவர்' *(64:16)*

ஒருவர் தானம் செய்யும் போது அவருடைய பணம் பிறருக்குச் செல்கின்றது. இது வெளிப்பார்வைக்கு ஓர் இழப்பாகத் தோன்றலாம். உண்மையில் இது ஓர் இழப்பல்ல. அவருக்கு நன்மையை ஈட்டிக் கொடுப்பதாகவும், நல்லதாகவும் அமைகின்றது. மேற்படி வசனத்தைத் தொடர்ந்து வருகின்ற வசனத்தில் அழகிய கடன் என்று இதனை அல்லாஹ் வர்ணிக்கின்றான். நாம் ஒருவருக்கு ஒரு கடனைக் கொடுத்தால் அது எமக்குத் திரும்பவும் கிடைத்துவிடுகின்றது. அவ்வாறுதான் நாம் தர்மம் செய்யும்போது அல்லாஹ்வுக்குக் கடன் கொடுக்கின்றோம். இக்கடனை அவன் பன்மடங்கு அதிகரித்து வேறு பல பிரதிபலன்களோடு திருப்பித் தருவான். வேறொரு வகையில் சொல்வதானால் நாம் பிறருக்குக் கொடுக்கும் தர்மம் என்பது நாம் பாதுகாப்பாகச் சேமித்து வைக்கும் வைப்பு என்று குறிப்பிடலாம்.

அல்லாஹ் இதனை இவ்வாறு வர்ணிக்கின்றான். 'உங்களிடமுள்ள (பொருட்கள்) யாவும் செலவழிந்து விடும். அல்லாஹ்விடத்தில் உள்ளவையோ (என்றென்றும்) நிலைபெற்றிருக்கும்' (16:96)

'நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிகச் சிறந்ததொரு கொடையாளராக விளங்கினார்கள். வீசும் காற்றை விடவும் வேகமாகக் கொடை கொடுப்பவராகத் திகழ்ந்தார்கள்' (புகாரி) என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

தனக்கு அன்பளிப்பாக ஏதும் கிடைத்தால் அதனை எவ்வளவு விரைவாக மற்றவர்களுக்குக் கொடுக்க முடியுமோ, அவ்வளவு விரைவாகக் கொடுத்து விடுவார்கள். அவர்களின் தோழர்களும் அவ்விதமே நடந்து கொண்டார்கள். அல்லாஹ்வுக்காக தர்மம் செய்யும் பொழுது நிச்சயமாக அல்லாஹ்விடம் அதற்கான பிரதிபலன் தமக்குக் கிடைக்கும் என்று உறுதியாக நம்பினார்கள்.

ஒருவர் ஈகையில் ஈடுபடும்போது நிச்சயமாக பின்வரும் பேறுகளை அடைந்து கொள்வார்.

- இவ்வுலகில் அல்லாஹ்வின் அன்பும், மனிதர்களின் அபிமானமும் கிடைக்கும்.
- மறுமையில் மகத்தான கூலி கிடைக்கும்.
- செல்வத்தில் அபிவிருத்தி உண்டாகும்.
- ஆபத்துகள் அகன்றுவிடும்
- மனதுக்கு மகிழ்ச்சியும், நிம்மதியும் கிடைக்கும்.

எனவே நாமும் உலோபித் தனத்தை நீக்கி இயன்ற வரை பிறருக்கு ஈந்து வாழப் பழகுவோமாக.

### நாணயம்

இஸ்லாம் வளர்க்க விரும்பும் நற்பண்புகளில் நாணயம் எனும் பண்பும் ஒன்றாகும். நாணயம் என்பது உண்மை, உயர்வு, நேர்மை, முதலான கருத்துக்களைக் கொண்ட, விரிந்த விளக்கங்களையுடைய வார்த்தை ஒன்றாகும். நாணயமும் நம்பிக்கையும் ஒரு நாணயக் குற்றியின் இரு பக்கங்களைப் போன்று ஒரு முஃமினுக்கு மிகவும் இன்றியமை யாதவையாகும்.

சிறு வயதில் இருந்தே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நாணயம் மிக்கவர்களாகவும் உண்மையாளராகவும் இருந்ததால்தான், அவர்கள் அஸ்ஸாதிக், அல்-அமீன் என்றெல்லாம் மக்காவாசிகளால் புகழப்பட்டார்கள். இப்பண்புகள் காரணமாகவே அம்மக்கள் தமது பெறுமதி மிக்க செல்வங்களை அவர்களிடத்தில் அமானிதமாக வைத்தும் இருந்தார்கள்.

ஒருவர் பின்வருமாறு கூறுகின்றார் : ஒருநாள் ஒரு பொருளை விற்பதற்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஒப்பந்தம் செய்திருந்தேன். குறித்த ஒரு பொருளைக் குறித்த ஒரு இடத்தில் வைத்துத் தருவதாக வாக்களித்திருந்தேன். பின்னர் நான் அதனை மறந்துவிட்டேன். மூன்று நாட்களுக்குப் பின்னர்தான் அது நினைவிற்கு வந்தது. உடனே நான் அவ்விடம் நோக்கி விரைந்தேன். அங்கே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். என்னைப் பார்த்ததும்

வாலிபரே என்னை சங்கடத்துக்கு உள்ளாக்கிவிட்டீர். நான் உமக்காக இங்கே மூன்று நாட்களாக நிற்கிறேன் என்று சொன்னார்கள். (அபூதாவூத்)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஓர் உணவுத் தானியக் குவியலைக் கடந்து சென்றபோது தனது கரத்தை அதனுள் நுழைத்தார்கள். தனது விரல்களில் ஈரத்தைக் கண்டபோது 'உணவுத் தானியத்தின் உரிமையாளரே! இது என்ன?' எனக்கேட்டார்கள். அதற்கவர், 'அல்லாஹ்வின் தூதரே! மழைதான் காரணம்' என்றார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'ஈரமானதை மக்கள் பார்க்கும் வகையில் மேல் பகுதியில் வைத்திருக்க வேண்டாமா? மோசடி செய்பவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்' என்று கூறினார்கள். (முஸ்லிம்)

'ஒரு முஃமினிடம் எல்லாத் தீமைகளும் இருக்கலாம். ஆனால் அவனிடம் பொய்யும் நாணயமின்மையும் இருக்க மாட்டாது.' (அஹ்மத்)

'அடுத்தவர்களை நம்பி ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொருட்கள் காணாமல் போக ஆரம்பிக்கும் நாட்கள் வந்துவிட்டால் மறுமைநாள் வந்துவிட்டது என்பதை அறிந்து கொள்ளுங்கள்' (புஹாரி)

'மன மகிழ்வோடு தன் எஜமானனின் ஆணையை நிறைவேற்றும் நம்பிக்கைப் பொறுப்பாளர் தர்மம் செய்யக்கூடியவர்களுள் ஒருவராவார்' (புஹாரி - கிதாபுல் இஜாரா)

மேலே காட்டப்பட்டுள்ள ஹதீஸ்கள் யாவும் நாணயமாய் நடப்பதன் அவசியத்தை எமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

இன்று பொதுவாக வியாபாரம், கல்வி, பொருளாதாரம், அரசியல் போன்ற எல்லாத் துறைகளிலும் நம்பிக்கைத் துரோகமும் மோசடியும் நாணயமின்மையும் மிக மோசமான அளவுக்கு இடம் பெற்று வருவதைக் காணலாம். வியாபாரத் துறையில் நாணயம் என்பது ஒரு கனவாகவே மாறியுள்ளது.

பின்வரும் அல்குர்ஆன் வசனங்கள் வியாபாரத்தில் நாணயமாக நடந்துகொள்ள வேண்டியதன் அவசியத்தையும் அதனைப் பேணத் தவறுவதால் மறுமையில் ஏற்பட இருக்கும் பயங்கர விளைவுகள் பற்றியும் குறிப்பிடுகின்றன.

'நீங்கள் அளந்தால் பூரணமாக அளவுங்கள்; (நிறுத்தால்) சரியான எடையைக் கொண்டு நிறுங்கள்' (17:35)

'அளவை நிறுவையில் மோசடி செய்பவருக்குக் கேடுதான். அவர்கள் மனிதர்களிடம் அளந்து வாங்கினால் நிறைய அளந்து கொள்கின்றனர். மற்றவர்களுக்கு அவர்கள் அளந்து கொடுக்கும் போதும் நிறுத்துக் கொடுக்கும் போதும் குறைத்து விடுகின்றனர். மகத்தான ஒரு நாளில் நிச்சயமாக அவர்கள் எழுப்பப்படுவார்கள் என்பதை அவர்கள் நம்பவில்லையா? அந்த நாளில் மனிதர்கள் அகிலத்தின் இறைவன் முன் (விசாரணைக்காக) நிற்பர்' (83: 1 - 6)

வியாபாரத்தில் நாணயமாக நடப்பவனின் மறுமை அந்தஸ்து பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

'நாணயமும் வாய்மையும் உள்ள வியாபாரி மறுமையில் நபிமார்கள், ஸித்திகீன்கள் (உண்மையாளர்கள்) ஷுஹதாக்களுடன் (இறை பாதையில் மரணித்தவர்கள்) இருப்பர்.' (இப்னுமாஜா)

ஹுதைபிய்யா உடன்படிக்கையின் போது அதை எழுதி முடிக்கு முன்பே எதிரிகளிடம் இருந்து தப்பித்து வந்த ஒரு தோழரை, கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக வேதனையோடு திருப்பி அனுப்பிய சம்பவம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நாணயத்துக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

களவாடியவள் உயர் குலத்துப் பெண் என்பதால் அவளது கரத்தைத் துண்டித்து

விடக்கூடாது என்று சிலர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சிபார்சு செய்தபோது, களவாடியவள் எனது மகள் பாத்திமாவாக இருந்தாலும் கரத்தைத் துண்டித்தே இருப்பேன் என்று உறுதிபடக் கூறி, நேர்மை காத்தார்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்.

நபித் தோழர் - ஆளுநர் அம்ர் பின் ஆஸ் (ரழி) அவர்கள், சிலையின் மூக்கை வெட்டிய கொலையாளிக்காகத் தன் மூக்கை வெட்டத் துணிந்த அந்த நாணயம் பலரை இஸ்லாத்தில் நுழைய வைத்தது. மாணவப் பருவத்திலேயே அன்னையின் சொல் தட்டாது கொள்ளைக் காரனிடம் உண்மையைக் கூறி அவனை நல்லவனாக மாற்றிய முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானீ (ரஹ்) அவர்களின் சம்பவம் உண்மைக்குக் கிடைத்த பெரு வெற்றியாகும்.

வாழ்க்கையின் சகல அம்சங்களிலும் நாணயம் பேண வேண்டும். மோசடி, நம்பிக்கைத் துரோகம், அநியாயமாகப் பொருளீட்டல் தவிர்க்கப்பட வேண்டும். எவரேனும் மோசம் செய்தால் அவர் அந்த மோசம் செய்த பொருளையும் தம்முடன் மறுமையில் கொண்டுவர வேண்டிய நிலையிருக்கும் என்று அல்குர்ஆன் எச்சரித்துள்ளதும் கவனிக்கத்தக்கதாகும்.

எனவே ஏமாற்றுதல், தந்திரம் செய்தல், பொய் உரைத்தல், கலப்படம் செய்தல், பொய்ச் சத்தியம் செய்தல் போன்ற தீய நடத்தைகளில் இருந்து தாமும் விலகி மற்றவர்களையும் விலக்கி நாணயத்துடனும் நம்பிக்கையுடனும் நடப்பதற்கு முயல வேண்டும்.

## புலன்களைப் பேணல்

இஸ்லாம் மனிதனில் வளர்க்க விரும்பும் நற்பண்புகளில் புலனடக்கமும் ஒன்று. புலன்களைப் பேணுவதனூடாக ஏற்படும் நல்ல மாற்றங்கள் மனிதனில் நற்பண்புகள் வெளிப்படக் காரணமாகின்றன. புலன்கள் சரியான முறையில் பேணப்படாதபோது தீய பண்புகள் ஒருவனில் உருவாகுவது தவிர்க்க முடியாததாகும்.

மனிதன் ஆசைகளால் நிறைந்தவன். பலவீனமானவன். வேகமாக உணர்ச்சிகளுக்கு அடிமையாகக் கூடியவன். இந்நிலையில் புலன்களைக் கட்டுப்படுத்தி தன் வாழ்வை நெறிப்படுத்திக் கொள்ள வேண்டியது அவனது தலையாய பொறுப்பாகும்.

எனவே, நல்ல பண்புகளையும் விழுமியங்களையும் கொண்ட நல்ல சமூகத்தைக் கட்டியெழுப்ப ஆரம்பமாகவும் அடிப்படையாகவும் நல்ல பண்புகளை வாழ்வில் எடுத்து நடக்கத் திடசங்கற்பம் கொள்வோம்.

### பயிற்சி

1. இஸ்லாத்தின் பார்வையில் நற்பண்பு என்பது யாது என்பதை விளக்குக.
2. இஸ்லாம் வலியுறுத்தும் நற்பண்புகளுள் பின்வருவன பற்றிச் சிறு குறிப்பெழுதுக.
   ★ அன்பு ★ ஈகை ★ தியாகம்
3. நாணயம் எனும் நற்பண்பை இஸ்லாமிய வரலாற்றுச் சம்பவம் ஒன்றோடு தொடர்புபடுத்தி விளக்குக.
4. ஒரு முஸ்லிம் தனது வாழ்வில் கடைப்பிடித்தொழுக வேண்டிய வேறுசில நற்பண்புகள் சிலவற்றைப் பட்டியலிடுக.
5. புலன்களைப் பேணல் எனும் நற்பண்பினூடாக நீர் விளங்கிக்கொள்வது யாது?
6. நற்பண்பு தொடர்பான அல்குர்ஆன் வசனமொன்றையும் ஹதீஸ் ஒன்றையும் குறிப்பிடுக.
7. அன்பு காட்டுதல் என்ற நற்பண்பின் இரு வகைக்கும் இரண்டு உதாரணங்கள் தருக.

13

# ஆன்மீக மேம்பாட்டுக்கான வழிகள்

ஆன்மீகம் என்ற பகுதி, இஸ்லாத்தில் மிக முக்கியமான இடத்தை வகிக்கின்றது. மனிதன் அழகான ஓர் உடலமைப்பைப் பெற்றிருப்பது போலவே, அழகான ஓர் ஆன்மாவை யும் பெற்றிருக்கின்றான். ஒருவன் தனது உடலை அழகுபடுத்திக் கொள்வதற்காகக் கொடுக்கும் அதே முக்கியத்துவத்தை அவனது ஆன்மாவை நெறிப்படுத்திக் கொள்வதற்காகவும் கொடுக்க வேண்டுமென இஸ்லாம் விரும்புகின்றது. அத்துடன் மனித ஆன்மா பற்றிய அழகான போதனைகளை அறிமுகப்படுத்தி, ஆன்மீக மேம்பாட்டுக்கான வழிகாட்டல் களையும் வழங்கியுள்ளது. ஆன்மீக வாழ்க்கையை உலக வாழ்க்கையிலிருந்து பிரிந்த ஒரு துறையாக இஸ்லாம் கருதுவதில்லை

மனிதன் அடிப்படையில் உடல், அறிவு, ஆன்மா என்ற மூன்று முக்கிய கூறுகளால் ஆக்கப்பட்டுள்ளான். இவற்றுள் உடலைத் தவிர்த்து ஆன்மாவையோ; ஆன்மாவைத் தவிர்த்து உடலையோ இஸ்லாம் முக்கியத்துவப்படுத்தி நோக்குவதில்லை. ‘அல்லாஹ் அழகானவன்; அவன் அழகையே விரும்புகிறான்’ (முஸ்லிம்) என்ற ஹதீஸ், உடலையும் உள்ளத்தையும் சம நிலையில் வைத்திருக்க வேண்டியதன் அவசியத்தை உணர்த்தி நிற்கிறது. உடல் அழகாகவும் ஆன்மா அசிங்கமாகவும் அல்லது ஆன்மா அழகாகவும் உடல் அசிங்கமாவும் இருக்கும் நிலையை இஸ்லாம் ஆதரிப்பதில்லை.



இன்று உலகில் உடலுக்கும் ஆன்மாவுக்கும் இடையில் பேணப்படவேண்டிய சம நிலை, முன்னெப்போதுமில்லாத அளவுக்கு சரிந்து போயிருக்கின்றது. ஆன்மீகத் தேவையைப் புறந்தள்ளிவிட்டு, உடல் தேவையை மாத்திரம் மையப்படுத்தியதாகவே மனிதனின் தேவைகள் வரையறை செய்யப்பட்டிருக்கின்றன. இதனால் இன்றைய மனிதன் வெறுமனே ஒரு பொருளாதாரப் பிராணியாக மாறிவருகிறான். சமூக உணர்வு, நீதி, நேர்மை, நியாயம், நம்பிக்கை, உண்மை முதலான மானிடப் பெறுமானங்கள் முற்றாகவே அருகிவிட்ட பயங்கரமான சூழ்நிலை ஒன்றை நோக்கி நவீன மிலேனிய சமுதாயம் சென்றுகொண்டிருக்கிறது. இந்நிலையை இஸ்லாமிய அறிஞர்கள் ஆன்மீக வறுமை நிலை என்று பிரஸ்தாபித்துள்ளார்கள்.

இத்தகைய ஆன்மீக வறுமை நிலையிலிருந்து மனிதனைப் பாதுகாக்க வேண்டு மானால் அவன் உள்ளத்தில் ஆன்மீகப் பண்புகளை வளர்ப்பது அவசியமாகும். உலகின் அனைத்து மதங்களும் இதன்பால் கவனம் செலுத்தி வருகின்றன.

இஸ்லாத்தைப் பொறுத்தவரை ஒரு முஸ்லிம் தனது ஆன்மீக மேம்பாட்டுக்காக அல்குர்ஆன் மற்றும் ஸுன்னாவின் வழிமுறைகளையே பின்பற்ற வேண்டும். இம்மை - மறுமை, உடல் - ஆன்மா என்ற வேறுபாடின்றி இரண்டையும் இணைத்ததாய் தன் வாழ்வை அமைத்துக்கொள்வதன் மூலமே ஈருலகப் பயன்பாட்டை அவனால் அடைய முடியும் என்பது இஸ்லாத்தின் போதனையாகும். இந்த வழிகாட்டலுக்கு முரணான வழிமுறைகள் மூலம் ஆன்ம பரிபக்குவத்தைத் தேட முயற்சிப்பதானது, ஆன்மீகத் துறையில் பாதிப்புக்களையே ஏற்படுத்தும்.

ஆன்மீகத் துறையை மேம்பாடடையச் செய்வதற்கு இஸ்லாம் காட்டும் வழி முறைகள் வருமாறு:

### *1. இஃலாஸ்*

இஃலாஸ் எனும் சொல் மனத்தூய்மை, கலப்பற்ற எண்ணம் போன்ற பொருள்களைக் கொண்டிருக்கின்றது

ஒரு முஸ்லிம் செய்யும் செயல்கள் அல்லாஹ்விடத்தில் அங்கீகரிக்கப்படுவதற்கு அடிப்படை நிபந்தனையாக இஃலாஸ் காணப்படுகிறது. ஓர் அடியான் எச்செயலைச் செய்தாலும் அது அல்லாஹ்வின் திருப்தியை மாத்திரமே நோக்காகக் கொண்டதாக இருப்பதே இஃலாஸ் ஆகும். 'தன்னுடைய இரட்சகனை மறுமையில் சந்திப்பதை நோக்காகக் கொண்டவர் நற்செயல்களைச் செய்யட்டும், அதன்போது யாரையும் இணைவைக்காது இருக்கட்டும்' *(19:110)* என அல்லாஹுதஆலா அல்குர்ஆனிலே குறிப்பிடுகிறான்.

ஒரு செயல் செய்யப்படுகையில், அச்செயலில் அல்லாஹ்வோடு இணைத்து மற்றொருவர் நோக்கப்படும்போது அது இணைவைப்பதாக அமைந்துவிடுகின்றது; குற்றச்செயலாக மாறிவிடுகிறது. உதாரணமாக ஒரு செயலைச் செய்கையில், முகஸ்து தியை எதிர்பார்ப்பாகக் கொண்டால் அது இணைவைப்பாக மாறிவிடுகிறது. எனவேதான் 'மிக சொற்பளவேனும் முகஸ்துதி இருப்பது இணைவைப்பு' (ஷிர்க்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். பணம், செல்வாக்கு, பதவி,

புகழ், உலக இலாபங்கள் போன்றவற்றில் நம்பிக்கை வைத்து அவற்றை நோக்காகக்கொண்டு செயற்படும்போது அத்தகைய செயல்கள் தூய்மையற்றுப் போய்விடுவதுடன் இஸ்லாத்தின் பார்வையில் குற்றமாகவும் அமைந்துவிடுகின்றது. தூய்மையற்ற செயல்களுக்கு அல்லாஹ்விடத்தில் எப்பெறுமானமும் இல்லை என்பதும் கவனிக்கத்தக்கதாகும்.

*'செயல்கள் யாவும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.' (புகாரி,முஸ்லிம்)*

இந்த ஹதீஸ் மனிதனின் ஒவ்வொரு செயலுக்கும் தூய எண்ணம் அவசியம் என்பதை எடுத்துக் காட்டுகிறது. ஒருவனது எண்ணத்தின் அடிப்படையிலேயே அவனது அமல்களுக்கு மறுமையில் அல்லாஹ் கூலி வழங்குகிறான்.

*'நிச்சயமாக அல்லாஹ் உங்கள் தோற்றங்களையோ, உங்கள் பொருட்களையோ பார்ப்பதில்லை. மாறாக, உங்கள் உள்ளங்களையும், உங்கள் செயல்களையுமே பார்க்கிறான் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.' (முஸ்லிம்)*

*'(மறுமையில்) தீர்ப்புக் கூறப்படும் அந்நாளில் ஓர் உயிர்த்தியாகி அல்லாஹ்விடத்தில் அழைத்து வரப்படுவார். அவரிடம் அல்லாஹ் அம்மனிதருக்கு தான் செய்த அருட்கொடைகளை எடுத்துக் காட்டுவான். அவரும் அதை உணர்ந்து கொள்வார். அவரிடம் எனக்காக என்ன செய்தாய்? என அல்லாஹ் கேட்பான். உனக்காகப் போர் செய்தேன். அதனாலேயே கொல்லப்பட்டேன் எனக் கூறுவார். அப்பொழுது அல்லாஹ் : நீ பொய் சொல்கிறாய், நீ வீரன் என்று புகழப்பட வேண்டும் என்பதற்காகப் போர் செய்தாய். அவ்வாறு கூறப்பட்டுவிட்டது என்று கூறுவான். பிறகு (மலக்குகளை அழைத்து) அம்மனிதரை நரகில் முகம் குப்புறத் தள்ளும்படி கட்டளையிடுவான் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.' (முஸ்லிம்)*

இந்த ஹதீஸின் மூலம் தூய்மையான உள்ளம் எவ்வளவு முக்கியமானது என்பதை விளங்கிக் கொள்ளலாம். படைத்த இறைவனுக்கு ஒரு மனிதன் செய்யக்கூடிய அதிகபட்ச தியாகமாக என்ன செய்ய முடியுமோ, அந்தத் தியாகத்தை, அதாவது உயிரை அல்லாஹ்வின் பாதையில் இழந்துள்ளார். இதை யாரும் மறுக்க முடியாது. அவ்வளவு எளிதாக யாரும் செய்ய முடியாத தியாகத்தைச் செய்தபோது எண்ணம் சரியில்லாத காரணத்தினால் அவர் நரகத்திற்கு செல்வதை இந்த நபிமொழி நமக்கு உணர்த்துகிறது.

இன்று பெரும்பாலான மனிதர்கள் இறைவனுக்கு செய்ய வேண்டிய நல்ல அமல்களைப் பெயருக்காகவும், புகழுக்காகவும், பணத்திற்காகவும் செய்யக்கூடிய பரிதாபகரமான சூழ்நிலைகளைப் பார்க்கிறோம். அவர்கள் இது குறித்து எந்தவிதமான கவலையும் இல்லாமல் மிக எளிதாகச் செயல்படுகிறார்கள். இவர்களைப் பற்றித்தான் படைத்த அல்லாஹ் அல்குர்ஆனில் பின்வருமாறு கூறுகிறான்.

*'எவரேனும் இவ்வுலக வாழ்க்கையையும், அதன் அலங்காரத்தையும் (மட்டுமே) நாடினால் அவர்களுடைய செயல்களுக்குரிய கூலி இவ்வுலகத்திலேயே நிறைவேறும். அவற்றில் அவர்கள் குறைவு செய்யப்படமாட்டார்கள். இத்தகையோருக்கு மறுமையில் நரக நெருப்பைத் தவிர வேறெதுவுமில்லை. (இவ்வுலகில்) இவர்கள் செய்த யாவும் அழிந்து விட்டன. அவர்கள் செய்து கொண்டிருப்பவையும் வீணானவையே.' (11:15,16)*

எனவே, நம்முடைய செயல்களை தூய எண்ணத்துடன் செய்ய வேண்டும். மற்றவர்கள் பார்ப்பதற்காக, புகழ்வதற்காக என்று செயல்பட்டால் மறுமையில் நாம் மிகப் பெரிய நஷ்டத்தைச் சந்திக்க வேண்டும்.

### *2. தவ்பா*



உள்ளத்திலிருந்து பாவக்கறைகளைப் போக்க சிறந்த வழிமுறை தவ்பாவாகும். அதாவது பாவங்கள் செய்வதை விட்டு விட்டு இறைவனை முழுமையாக சார்ந்து விடுவதாகும். தவ்பா என்றால் மீளுதல், திரும்புதல் என்பது கருத்தாகும்.

பரிபாஷையில் ஒரு மனிதன் இரகசியமாகவும் பரகசியமாகவும் இறைவன் வெறுக்கக் கூடியவற் றிலிருந்து அவன் விரும்பக்கூடிய விடயங்களின் பால் திரும்பிவிடுதல் என்பதாகும்.

தவ்பா என்பது ஒரு மனிதன் தான் ஏற்கனவே பின்பற்றி வரும் ஒரு வாழ்க்கை முறையிலிருந்து புதியதொரு முறையை நோக்கி மீள்வதையும் குறித்து நிற்கிறது. இந்த மாற்றம் வெறுமனே வாயால் மொழியும் வெற்று வார்த்தையாக இருக்க முடியாது. இந்த மாற்றம் அவனது அறிவு, உணர்வு மற்றும் செயற்பாடு என்பவற்றில் ஏற்பட வேண்டும்.

இந்த மாற்றத்தினூடாக அவனது இலக்கிலும், செயற்பாடுகளிலும், நிலைப்பாடு களிலும் பூரண மாற்றத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஏற்படும் மாற்றம் தான் உண்மையான தவ்பாவாகும்.

மனிதன் நன்மைக்கும் தீமைக்கும் இடையில் சோதனைமிக்க வாழ்வொன்றை மேற்கொள்ள வேண்டியுள்ளான். இந்நிலையில் நன்மையோ தீமையோ அவனால் இடம்பெற முடியும். இடம் பெறுகின்ற தவறுகளுக்கு பரிகாரமாகவே தவ்பா அமைந்திருக்கின்றது.

'ஒருவர் மற்றவரைக் கொன்றுவிட்ட நிலையில் இரண்டுபேருமே சுவனம் செல் வதைப் பார்த்து அல்லாஹ் சிரிக்கின்றான். ஒருவன் அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு அதில் கொல்லப்பட்டவர். அடுத்தவர் அவரைக் கொன்றவர் (தவ்பா செய்து அல்லாஹ்வின் பக்கம் மீளுகிறார்). அல்லாஹ் அவரது தவ்பாவை ஏற்றுக்கொள்கிறான். அவர் அல்லாஹ் வுக்கு வழிப்படுகிறார். பின்னர் அல்லாஹ்வின் பாதையில் அவரும் ஷஹீதாகிவிடுகிறார். (இவர் தவ்பா செய்து திருந்தி ஷஹீதாகிவிடுவதால் அவருக்கு சுவர்க்கம் கிடைக்கிறது)' (புஹாரி, முஸ்லிம்). எனும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கூற்று இதனையே குறிப்பிடுகின்றது.

இவ்வாறு மனிதர்கள் தவறிழைப்பதற்கு அவர்களது அறியாமை, கட்டுக்கடங்காத மனோ இச்சை மற்றும் சூழற்காரணிகளின் தாக்கம் என்பன காரணங்களாக அமைகின்றன.

பாவங்கள் செய்யும் மனிதன் அவனது பாவங்களை விட்டுவிட்டு தனது இரட்சகனிடம் மீள்வதால் அவன் இவ்வுலகிலும் மறுஉலகிலும் பல்வேறுபட்ட நலன்களைப் பெற்றுக்கொள்கின்றான். ஒரு மனிதன் தவ்பா செய்து மீள்வதால் தனது இரட்சகனுக்கு கட்டுப்படல் எனும் உயர்ந்த பண்பைக் கொண்டவனாகிறான். தவ்பா செய்வது அவனது ஈருலக வெற்றிக்குமான வழியாக அமைகின்றது.

தவ்பாவின் மூலம் இறைநெருக்கம் கிடைக்கின்றது. நரகத்திலிருந்து பாதுகாக்கப்பட்டு சுவனத்தில் நுழைவிக்கப்படுகிறான். அவனது தீமைகள் நன்மைகளாக மாற்றப்படுகின்றன. இவ்வுலகில் சுபீட்சமான வாழ்வு கிடைக்கின்றது.

எனவே ஒரு மனிதன் தான் செய்யும் பாவங்களிலிருந்து விடுபட்டு நன்மைகளைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றால் இறைவனும் அவனது தூதர் முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் காட்டிய முறையில் தவ்பா செய்ய வேண்டும். இந்த வகையில் தவ்பாவிற்கான நான்கு நிபந்தனைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

1. இறைவனுக்கு என்ற தூய எண்ணத்தோடு தவ்பா செய்தல்.
2. தான் செய்த பாவங்களை விட்டுவிட்டு அவற்றை விட்டும் முற்றுமுழுதாக நீங்குதல்.
3. தான் செய்த பாவங்களை எண்ணி வருந்தி அதற்காகக் கைசேதப்படல்.
4. செய்த பாவம் சக மனிதனோடு தொடர்புபட்டிருந்தால் அவனிடம் மன்னிப்பு வேண்டிய நிலையில் இறைவனிடம் நெருங்குதல்.

இத்தகைய நிபந்தனைகள் பூர்த்தியாகும் போதே அது பரிபூரண தவ்பாவாக அமைகிறது. ஒரு மனிதன் இறைவனுக்காக தனது உள்ளத்தை தூய்மைப்படுத்திக்கொண்டு தான் செய்த பாவங்களை நினைத்து வருந்தி, அந்த பாவங்களை விட்டும் தன்னை முழுமையாக நீக்கிக்கொண்டு நல்ல விடயங்களின்பால் விரைந்து செயற்பட வேண்டும்.

தனது மனோ இச்சைக்குப் புறம்பாக தனது செயற்பாடுகளை அமைத்துக்கொண்டு இறைவனை முழுமையாக சார்ந்து பிரார்த்தித்தால் அது அவனிடத்தில் அங்கீகரிக்கப்பட்ட பிரார்த்தனையாக அமையும்.

இவ்வாறு ஒரு மனிதன் தவ்பா செய்து இறைவனிடம் மீண்டு விட்டால் அவனுடைய நிலை முன்னிருந்ததையும் விட சீர்பெற்றுவிடும். சிறு பாவமொன்றை நினைத்தால் கூட அவனுள்ளத்தில் இறையச்சம் ஏற்படும்.

தனது இறைவன் முன் பணிவுள்ளவனாய் இருப்பான். பெருமை அவனை விட்டும் நீங்கிவிடும். அவ்வாறே அவனது உறுப்புக்கள் இறைவன் தடுத்தவற்றைச் செய்வதை விட்டு மிகவும் எச்சரிக்கையாக இருக்கும். எமக்கு மரணம் எப்போது ஏற்படும் என்பதை இறைவனே அறிவான். எமது வாழ்க்கையின் ஒவ்வொரு பொழுதிலும் நாம் இறைவனை சந்திக்கத் தயாராக இருக்க வேண்டும். தவ்பா கேட்பதைப் பிற்போடக் கூடாது. தவ்பாவை பிற்போடுவதும் அதனை விட்டும் பொடுபோக்காக இருப்பதும் ஷைத்தானின் ஊசலாட்டமாகும்.

தவ்பாவுக்கென்று ஒரு கால எல்லை கிடையாது. ஆண்டுதோறும் எம்மைக் கடந்து செல்லும் ரமழான் மாதம் மட்டும்தான் தவ்பாவுக்கான சந்தர்ப்பம் அல்ல. எந்நேரத்திலும் தவ்பாச் செய்ய முடியும். ரமழானையும் நழுவ விடாமல் பயன்படுத்திக்கொள்வோம்.

பாவங்களையும் மனோஇச்சையையும் விட்டுவிட்டு இறைவனிடம் மீண்டு விடுவோம். பகலில் பாவம் செய்வோரை மன்னிப்பதற்கு இரவிலும், இரவில் பாவம் செய்வோரை மன்னிப்பதற்கு பகலிலும் இறைவன் காத்துக்கொண்டிருக்கிறான். இறைவனின் ரஹ்மத்தையும் பாவ மன்னிப்பையும் நோக்கி விரைந்திடுவோம்.

### 3. வரஉ

இதன் கருத்து 'பேணுதல்' என்பதாகும். இஸ்லாம் கூறும் உயர் பண்பான பேணுதலுக்கு அடிப்படையாக 'சந்தேகமூட்டக் கூடியதை விட்டுவிடு; சந்தேகம் உண்டாக்காததைப் பின்பற்று' (அஹ்மத், திர்மிதீ, நஸாஈ) என்ற ஹதீஸ் அமைந்துள்ளது. மார்க்கத்தில் சந்தேகத்துக்கு இடமானவற்றைத் தவிர்க்க வேண்டியதன் அவசியத்தை இது உணர்த்துகிறது. இக்கருத்தைப் பிறிதொரு ஹதீஸ் பின்வருமாறு வலியுறுத்துகிறது.

ஒரு முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு மனிதனைப் பார்த்து 'உமக்குச் சந்தேகமானதை விட்டுவிடு; சந்தேகம் ஏற்படாததைப் பின்பற்று' எனக் கூறினார்கள். அதற்கு அந்த மனிதர், 'அதனை எவ்வாறு அறிந்துகொள்வது?' எனக் கேட்டார். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: 'ஒரு விடயத்தை நீர் செய்ய நாடினால் உமது நெஞ்சின் மீது கை வைத்துப் பாரும்! நிச்சயமாக உமது உள்ளம் ஹராத்துக்கு முன்னால் குழப்பமடையும். ஹலாலுக்கு முன்னால் திருப்தி காணும். மேலும் பேணுதலான முஸ்லிம் எப்போதும் பெரும் பாவங்களுக்கு அஞ்சி சிறு பாவங்களையும் விட்டு விடுபவனாக இருப்பான்' என்று விடையளித்தார்கள். (தபரானீ)

இந்த ஹதீஸ் பேணுதலுக்கான வரைவிலக்கணமாகவும் கருதப்படுகிறது.

'குற்றம் நிகழ்ந்து விடுமோ எனும் பயத்தினால், குற்றம் இல்லாத ஒன்றையும் விட்டுவிடுகின்ற தன்மை (பேணுதல்) உருவாகாத வரை ஓர் அடியான் முத்தகீயாக (பயபக்தியாளர்) முடியாது' (திர்மிதீ)

பேணுதல் என்ற இப்பண்பு ஒருவனின் எண்ணத்திலும் சொல்லிலும் செயலிலும் வரவேண்டும். உள்ளத்தை அற்பமான சிந்தனைகளில் இருந்து விடுத்து, அல்லாஹ்வின் சிந்தனைகளால் நிரப்புவதே எண்ணத்தால் பேணுதலாக நடத்தல் என்பதாகும். சொல்லால் பேணுதலாக நடத்தல் என்பது; எல்லாவகையான வீண் பேச்சுக்களில் இருந்தும் நாவைத் தடுத்துக் கொள்வதாகும். செயலில் பேணுதல் என்பது, நடை, உடை, பாவனை முதலான அனைத்து அம்சங்களையும் ஹலாலாக அமைத்துக் கொள்வதாகும்.

'அபூ ஹுரைராவே! நீர் பேணுதல் உடையவராக இருப்பீராக; அப்போது நீர்தான் பெரும் வணக்கவாளியாக ஆவீர்' (திர்மிதீ) என்ற ஹதீஸ், பேணுதல் என்ற இப்பண்பானது ஒருவரது அனைத்து நடவடிக்கைகளையும் சீராக்கிவிடும் என்பதை எடுத்துக்காட்டுகிறது. மேலும் இப்பண்பானது முஸ்லிமை முத்தகீ (பயபக்தியாளர்) ஆகவும் மாற்றிவிடுகின்றது. இப்பண்பின் முக்கியத்துவத்தை உணர்ந்த ஸஹாபாக்கள் பேணுதலை எவ்வளவு தூரம் கடைப்பிடித்தார்களெனில், ஒரு ஹராம் நடந்துவிடுமோ என்று அஞ்சி எழுபது ஹலால்களைத் தவிர்ப்போராக இருந்ததை ஸஹாபாக்கள் வாழ்வில் காண முடிகின்றது. நாமும் பேணுதலைக் கைக்கொண்டு ஈருலகிலும் வெற்றி பெறுவோம்.

## *4.ஸுஹ்த்*

ஆன்மீக மேம்பாட்டுக்கென இஸ்லாம் காட்டும் வழிமுறைகளுள் 'ஸுஹ்த்' எனப்படும் பற்றற்ற வாழ்க்கை முறையும் ஒன்றாகும். பற்றற்ற வாழ்வு என்பது, மறுமை வாழ்வோடு ஒப்பிடும்போது இவ்வுலக வாழ்க்கையைப் அற்பமானதாகக் கருதுவதாகும்.

'தாருல் ஃபனா' எனும் அழியக்கூடிய இவ்வுலக வாழ்க்கையின் மாயையில் மதிமயங்கி; 'தாருல் பகா' எனும் முடிவில்லா மறுமை வாழ்க்கையை மறக்காமல் இருப்பதற்காக ஒவ்வொருவருக்கும் உலகப் பற்றின்மை அவசியமாகும். இக்கருத்தை 'மரணத்தையும் வாழ்வையும் ஏற்படுத்தியதெல்லாம் உங்களில் சிறந்தவர் யார் என்பதைப் பரீட்சிப்பதற்காகவே' (67: 2) என்ற அல்குர்ஆன் வசனம் நன்கு விளக்கிக் காட்டுகின்றது.

இவ்வுலகின் ஆடம்பரமும் உல்லாசமும் இறைவன் மீதான சிந்தனையை மறக்க வைத்து இவ்வுலகிலேயே இழிவையும் அழிவையும் ஏற்படுத்துவதால் அது பற்றி அல்லாஹ் எமக்கு எச்சரித்துள்ளான்.

'(மனிதர்களே!) நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக இவ்வுலக வாழ்க்கையெல்லாம் வீண் விளையாட்டும் வேடிக்கையும் அலங்காரமும்தான். அன்றி (அது) உங்களுக்கிடையில் பொறாமையை ஏற்படுத்துவதாகவும் பொருள்களிலும் சந்ததிகளிலும் போட்டியை ஏற்படுத்துவதாகவும் இருக்கிறது' (57 : 20)

'விசுவாசிகளே! அல்லாஹ் உங்களுக்கு ஹலாலாக்கித் தந்துள்ளவற்றை ஹராமாக்கிக் கொள்ளாதீர்கள். நீங்கள் வரம்பு மீற வேண்டாம். நிச்சயமாக வரம்பு மீறுவோரை அல்லாஹ் நேசிக்கமாட்டான்' ((5: 87)

உலகில் இறைவனுக்குக் கட்டுப்பட்டு வாழ்வதற்காகப் படைக்கப்பட்ட மனிதன், உலகத்தை அனுபவிப்பதையே தனது முழு நோக்காகக் கொள்ளக்கூடாது. உலகச் செல்வங்களைத் தேடவேண்டுமென்ற ஆசை, மறுமைக்குரியவற்றைத் தேடுவதைவிட்டும் ஒருவனை திசை திருப்பிவிடக்கூடாது. புகழ், பட்டம், பதவி முதலானவற்றைப் பெறவேண்டுமென்ற ஆவல் இறைவனைப் புகழ்வதை விட்டும்; சுவர்க்கத்தின் பதவிகளை ஈட்டிக்கொள்வதை விட்டும் அவனைத் திசை திருப்பிவிடக் கூடாது. இவ்வுலக சந்தர்ப்பமொன்றை இழந்து விடுகின்றபோது ஏற்படும் கவலை மறுமைக்கான சந்தர்ப்பமொன்றை இழந்துவிடும்போது ஏற்படும் கவலையை மிகைத்து விடக்கூடாது. தான் கஷ்டப்பட்டுழைத்த செல்வங்களில் இருந்து அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்வதற்கு எவ்வித தயக்கமும் காட்டக் கூடாது.

'உங்களை உலக வாழ்க்கை மதிமயக்கிவிடக் கூடாது' (31: 33)

ஒரு முறை ஒரு நபித் தோழர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! நான் எந்த விடயத்தைச் செய்தால் அல்லாஹ்வும் மனிதர்களும் விரும்புவார்களோ அந்த விடயத்தை எனக்குச் சொல்லித் தாருங்கள்' என்றார். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'உலகில் பற்றற்றவனாக இரு. அல்லாஹ் உன்னை நேசிப்பான்; மனிதர்களிடம் உள்ளவற்றை விட்டும் தேவையற்றவனாக இரு, மனிதர்கள் உன்னை நேசிப்பார்கள்' (ஸுனன் இப்னு

மாஜாஹ்) என்றும் கூறினார்கள். மேற்போன்ற கூற்றுக்கள் பற்றற்ற வாழ்வு பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாட்டை விளக்கி நிற்கின்றன.

உலகில் பற்றற்ற நிலையில் வாழ்வதென்பது, உலகை முற்றாகத் துறந்து அதன் இன்பங்களை அப்படியே ஒதுக்கி விடுவது என்பதல்ல. மேலும் உலக வாழ்க்கையை வேண்டுமென்றே கஷ்டங்கள் மிக்கதாகவும் கரடுமுரடானதாகவும் ஆக்கிக் கொள்வதுமல்ல. இவ்வாறு நடந்து கொள்வதை இஸ்லாம், 'ரஹ்பானிய்யா' எனும் துறவற நிலைக்கு இட்டுச் சென்று விடும் எனக் கூறி எச்சரிப்பதுடன் அதனைக் கண்டித்தும் உள்ளது.

**பயிற்சி**

1. ஆன்மீக மேம்பாடு என்பதன் மூலம் நீர் விளங்கிக்கொள்வது யாது?
2. பேணுதலைக் குறிக்கும் அரபு வார்த்தை யாது? அது பற்றிச் சுருக்கமாக எழுதுக.
3. ஸுஹ்த் என்றால் என்ன? அது ரஹ்பானியத்திலிருந்து எவ்வாறு வேறுபடும்?
4. தவ்பா ஏற்றுக்கொள்ளப்படுவதற்கான நிபந்தனைகள் யாவை?
5. இஃலாஸ் என்பதை வெளிப்படுத்தும் வகையிலான ஒரு சம்பவத்தைத் தேடி எழுதிக் காட்டுக.

# 14



# வஹியின் முக்கியத்துவம்



ஹாரிஸ்: அஸ்ஸலாமு அலைக்கும் பெரியவரே. உங்களுடன் சிறிது நேரம் உரையாடுவதற்கு அனுமதி தருவீர்களா?

பெரியவர்: வஅலைக்குமுஸ்ஸலாம் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு. ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? தாராளமாகக் கதைக்கலாமே.

ஹாரிஸ்: வஹியைப் பற்றிக் கேட்டு அறிந்து வருமாறு எங்கள் ஆசிரியர் கூறியுள்ளார். அது பற்றி அறிந்து கொள்ளத்தான் வந்துள்ளோம்.

பெரியவர்: நல்லது. அமர்ந்து கொள்ளுங்கள்! உங்கள் சந்தேகங்களைக் கேளுங்கள்.

ஹாபிழ்: அறிவை புலனறிவு, பகுத்தறிவு என இரண்டாக வகுத்துக் கூறுவார்கள். இவ்விரண்டில் வஹியை எதில் உள்ளடக்கலாம்?

பெரியவர்: புலனறிவுக்கும், பகுத்தறிவுக்கும் அப்பால் முதன்மையான அறிவொன்றாக வஹி அமைந்துள்ளது. முதலிரண்டும் மனிதனில் பொதிந்துள்ளதோடு அவை மனிதன் வளர வளரக் கூர்மையடைகின்றன. ஆனால் வஹி அப்படிப்பட்டதல்ல. உண்மையில் அது முதலிரு அறிவையும் நெறிப்படுத்தி, மனிதனை சத்தியத்தின்பால் வழிநடத்துகின்றது.

ஹிஷாம்: அதைச் சற்று விளக்கமாகக் கூறுவீர்களா?

பெரியவர்: எல்லா உயிரினங்களுக்கும் புலன்களை அடிப்படையாகக் கொண்ட, அவற்றின் தேவைக்கு ஏற்ப மட்டுப்படுத்தப்பட்ட அறிவு வழங்கப்பட்டுள்ளது. மனிதன் இப்புலனறிவுடன் சிந்தனையை அடிப்படையாகக் கொண்டு பகுத்தறிவையும் பெற்றுள்ளான். பகுத்தறிவைப் பெற்ற மனிதன் நேரிய வழியைத் தேர்ந்தெடுப்பதற்கு உதவியாகவே வஹியுடைய அறிவு வழங்கப்படுகிறது. இது ஒவ்வொரு மனிதனுக்கும் தனித்தனியாக வழங்கப்படுவதில்லை. மாறாக மனிதர்களில் இருந்து தேர்ந்தெடுக்கப்படும் நபிமார்களுக்கு வழங்கப்பட்டு, அவர்கள் அதை எத்தி வைப்பதன் மூலம் ஏனைய மனிதர்களைச் சென்றடைகின்றது.

ஹிஷாம்: வஹி என்ற சொல்லின் கருத்தைத் தெளிவு படுத்துவீர்களா?

பெரியவர்: மொழி ரீதியாக வஹி என்ற சொல், சமிக்ஞை, உதிப்பு, மனதில் எழுதல், தூது சொல்லல், இரகசியமாகப் பேசுதல் என்று பொருள் தரும்.

அல்குர்ஆனும் வஹி என்ற சொல்லைப் பல கருத்துக்களில் பயன்படுத்தியுள்ளது. 'மற்றவர்கள் அறியாத முறையில், தொடர்பு கொள்பவர் மாத்திரம் புரியும்படி ஒரு செய்தியை மிக வேகமாகவும், மிக இரகசியமாகவும் பரிவர்த்தனை செய்வது என்றும், பிறர் அறியாத விதத்தில் மிக இரகசியமாகவும் மிக வேகமாகவும் அல்லாஹ்விடமிருந்து அவனது தூதர்களுக்கு அருளப்படும் அல்லாஹ்வின் பேச்சு' எனவும் குறிப்பிடப்படுகின்றது.

ஹிஷாம்: வஹியை வஹி மத்லுவ்வு என்றும் வஹி கைரு மத்லுவ்வு என்றும் இரண்டாகப் பிரித்துக் கூறுவார்களே. அது பற்றியும் சிறிது கூறுவீர்களா?

பெரியவர்: **வஹி மத்லுவ்வு** என்பது அல்லாஹ் ஜிப்ரீல் அலைஹிஸஸ்ஸலாம் மூலமாக ரஸூல்மார்களுக்கு ஓதிக் காண்பித்த வஹியாகும். ரஸூல்மார்கள் அதனை அப்படியே மக்களுக்கு ஓதிக்காட்டுவர். மக்கள் அதனைத் தமது தேவைக்கேற்ப ஒலி வடிவிலோ அல்லது வரிவடிவிலோ பாதுகாத்துக் கொள்வார்கள். இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு அல்குர்ஆனாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்பட்ட இது, மனனத்திலும் எழுத்திலும் இன்றுவரை அப்படியே பாதுகாக்கப்பட்டு வருகிறது. இது ஏனைய வேதங்களுக்கில்லாத ஒரு சிறப்பம்சமாகும்.

ஹாமித்: வஹி கைரு மத்லுவ்வு என்றால் என்ன?

பெரியவர்: **வஹி கைரு மத்லுவ்வு** என்பதன் கருத்து ஓதிக் காண்பிக்கப்படாத வஹி என்பதாகும். இவை பல்வேறு நிலைகளில் இறை தூதர்களுக்குக் கிடைக்கப் பெற்றன.

ஹாமித்: அவற்றுக்கான உதாரணங்கள் சிலவற்றைச் சுட்டிக் காட்டுவீர்களா?

பெரியவர்: இப்றாஹீம் அலைஹிஸஸ்ஸலாம் அவர்கள் தனது மகன் இஸ்மாயீல் அலைஹிஸஸ்ஸலாம் அவர்களை குர்பான் செய்வதாக கனவு கண்டார்கள். (37:102) அல்லவா? அவ்வாறான உண்மைக் கனவுகள் இதில் அடங்கும். அது போன்றே மூஸா அலைஹிஸஸ்ஸலாம் அவர்கள் தூர்ஸினா மலைப் பக்கமாகச் சென்றபோது ஓர் அசரீரி கேட்டதல்லவா? அல்லாஹ் அவர்களுடன் (அசரீரியாக) உரையாடினான். (7:143) (20:11-13) இதுவும் அதிலடங்கும். ஸகரிய்யா அலைஹிஸஸ்ஸலாம் அவர்கள் சமிக்ஞைகள் மூலம் அல்லாஹ்வைத் தொழவும், புகழவும் அவருடைய சமூகத்துக்கு கற்றுக் கொடுத்தார்கள். (19:11) என்று அல்குர்ஆன் கூறுகின்றது. இதுவும் அதிலடங்கும். இது போலவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஹதீஸ்களும் வஹி கைரு மத்லுவ்வு என்றே கொள்ளப்படுகின்றன.

ஹுதைபா: வஹியின் முக்கியத்துவத்தை சற்று விளக்குவீர்களா?

பெரியவர்: இதுவரை கூறப்பட்டவை மனிதன் நேர்வழி பெறுவதற்கு வஹி அறிவு தேவை என்பதை உங்களுக்கு உணர்த்தியிருக்கும். அவை தவிர வேறு காரணங்களையும் முன்வைக்கலாம். அல்லாஹ் மனிதனைச் சோதிப்பதற்காக மனோ இச்சை என்ற தூண்டுதலை அவனில் வைத்துள்ளான். மனோ இச்சை மனிதனது பகுத்தறிவை அடக்கி நன்மை தீமை பற்றி சிந்திக்க விடாமல் உலக இன்பங்களின் பால் அவனை இழுத்துச் செல்ல முயற்சிக்கும். இச்சந்தர்ப்பத்தில் வஹியறிவு மனிதனுக்கு நன்மை - தீமை, சரி - பிழை பற்றிய தெளிவை முன்வைக்கின்றது. அதை விசுவாசித்து நடக்கும் மனிதன், படிப்படியாக மனோ இச்சையை வெற்றி கொள்கின்றான்.

மேலும் பிரபஞ்சத்தில் பல படைப்புகள் காணப்படுகின்றன. அவற்றுள் அதிகமானவை மனிதனின் புலன்களால் அறிய முடியாதவை. ஏனெனில் மனிதனது புலனறிவு வரையறுக்கப்பட்டது. சில விலங்குகள் மனிதனைவிட அதிக புலனறிவைப் பெற்றுள்ளன என்ற விஞ்ஞானிகளின் கூற்று இதற்குச் சிறந்த ஆதாரமாகும். மனிதனது புலன்களால் அறிய முடியாத பல உண்மைகளை வஹி விளக்குகிறது. எனினும் பலர் புலனறிவில் மாத்திரம் நம்பிக்கை வைத்து வஹியறிவு கூறும் உண்மைகளை நிராகரிக்கின்றனர். இது மிகவும் அபத்தமானதாகும். இத்தகைய மனிதர்கள், தமது புலன்களால் புரியமுடியவில்லை என்பதற்காக பூமி தட்டையானது என்று நம்பியதுடன் அது உருண்டையானது எனக் கூறிய விஞ்ஞானிகளைக் கொலை செய்யவும் முயன்றுள்ளனர்.

பூமியில் அல்லாஹ்வின் பிரதிநிதி என்ற வகையில் மனிதன் அல்லாஹ்வுக்கும் அவனது படைப்பினங்களுக்கும் இடையிலான தொடர்பை அறிவதற்கு வஹியே வழிகாட்டியாக அமைகின்றது.

ஹிஷாம்: பெரியவரே! மனிதனது புலனறிவால் மாத்திரம் அறிய முடியாத சில விடயங்களைக் கூற முடியுமா?

பெரியவர்: மனிதனது உள்ளத்தில் தோன்றுகின்ற சில அடிப்படையான வினாக்களுக்குக் கூட புலனறிவாலோ அல்லது பகுத்தறிவாலோ மாத்திரம் சரியான பதிலைக் கூற முடியாது. அவ்வாறு பதில் கூற முயன்ற மனிதன்தான் சிலைகளைக் கடவுள் என்றான். கடவுளே இல்லை என்றான். மனிதன் குரங்கில் இருந்து தோன்றியவன் என்றான்.

ஹுதைபா: மனிதனது உள்ளத்தில் தோன்றுகின்ற அடிப்படையான வினாக்கள் எவை என்று கூற முடியுமா?

பெரியவர்: நான் யார்?

எங்கிருந்து வந்தேன்?

எங்கே செல்கிறேன்?

எனது பிறப்பின் நோக்கம் என்ன?

இவையே அவ்வினாக்களாகும். அவற்றுக்கு வஹியின் உதவியின்றி புலனறிவு, பகுத்தறிவு ஆகிய இரண்டினால் மாத்திரம் ஒருபோதும் திட்டவட்டமான பதிலைக்கூற முடியாது. பதில் சரியாகக் கிடைக்காவிட்டால் மனிதன் தவறான வழியிலேயே சென்று கொண்டிருப்பான். இறைவனை மறுக்கும் நாத்திகர்களும், மறுமையை மறுக்கும் சடவாதிகளும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாவர்.

ஹாரிஸ்: பெரியாரே இவ்வளவு நேரமும் எங்களுடனிருந்து எமது சந்தேகங்களுக்குத் தெளிவான விளக்கங்களைத் தந்த உங்களுக்கு அல்லாஹ் அருள் புரிவானாக என்று பிரார்த்திப்பதோடு எங்களது உளப்பூர்வமான நன்றியையும் தெரிவித்துக் கொள்கின்றோம். ஜஸாக்கல்லாஹு ஹைரன் கஸீரா.

பெரியவர்: மாணவர்களே தேடிப்படிக்க முன்வந்த உங்களுக்கும் அல்லாஹ் நல்லறிவை விருத்தி செய்வானாக.

### பயிற்சி

1. வஹியின் பிரதான பிரிவுகள் யாவை? உதாரணங்களுடன் விளக்குக.
2. வஹி அருளப்படும் வழிமுறைகள் யாவை?
3. வஹி அருளப்படுவதன் நோக்கங்களை எடுத்துக்காட்டுக.
4. புலனறிவு, பகுத்தறிவு ஆகிய இரண்டையும் விட வஹி அறிவு உயர்வானது என்பதை எவ்வாறு விளக்கிக் காட்டுவீர்?

# 15

# அல்குர்ஆன் அருளப்படலும் தொகுக்கப்படலும்

*ஆசிரியர் :-*

*இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களுள் முதன்மையான அல்குர்ஆன் பற்றிய ஒரு கருத்தரங்கு இடம்பெறப் போகிறது. இதில் சிலர் பங்காளர்களாகவும், சிலர் பார்வையாளர்களாகவும் இருக்கின்றார்கள். அரங்கை மாணவி ராபிதா ஆரம்பித்து வைப்பார்.*

*ராபிதா :-*

*அல்குர்ஆன் அருளப்படலும் தொகுக்கப்படலும் என்ற தலைப்பில் அல்குர்ஆன் முதலாவதாக அருளப்பட்ட முறை பற்றி உங்களுடன் கருத்துப் பரிமாற முன்வந்துள்ளேன்.*

*அல்லாஹ்வினால் அருளப்பட்ட வேதங்கள் நான்கு என்பதை நாங்கள் அறிவோம். அதில், அல்குர்ஆன் இறுதியாக முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருளப்பட்ட வேதமாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நாற்பதாவது வயதில் (கி.பி 610 ஆம் ஆண்டளவில்) மக்காவிலுள்ள ஹிறாக்குகையில் அவர் தனித்திருந்த வேளையில் 'லைலத்துல்கத்ர்' என்ற இரவில் முதல் வஹி கிடைத்தது.*



வஹி கொண்டுவரும் மலக்கான ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், அன்னாரிடம் வந்து 'இக்ரஉ (ஓதுவீராக)' என்றார்கள். அவர், 'எனக்கு ஓதத் தெரியாது' எனக் கூறினார்கள். அப்போது ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை இறுக்கமாகக் கட்டித் தழுவினார்கள். பின்னர் விடுவித்து 'இக்ரஉ' என்று மீண்டும் கூறினார்கள். அப்போதும் 'எனக் ஓதத் தெரியாது' என்றே பதிலளித்தார்கள். ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் மீண்டும் இறுகத் தழுவி, 'இக்ரஉ' என்றார்கள். இவ்வாறு மூன்று முறை இடம்பெற்ற பின் 'எதை ஓதுவது?' எனக் கேட்டார்கள். அப்போது ஸூரா அலக்கின் முதல் ஐந்து ஆயத்துக்களையும் ஓதிக் காட்டினார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதனை ஓதிக் காட்டினார்கள்.

இது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு புதிய அனுபவமாக இருந்தது. அதனால் அதிர்ச்சியும் பயமும் ஏற்பட்டன. வீட்டை நோக்கி விரைந்தார்கள். 'என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள்' என்று கூறினார்கள். மனைவி கதீஜா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் அவரைப் போர்த்தினார்கள்; தேற்றினார்கள்; பின்னர் நடந்ததைக் கேட்டு தைரியமூட்டினார்கள். முன்னைய வேதங்களைக் கற்றறிந்த தமது உறவினரான வரகா பின் நவ்பலிடம் அழைத்துச் சென்றார்கள். அவர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதராக அனுப்பப் பட்டிருப்பதாகவும், அவரிடம் வந்தவர் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் என்ற மலக்கு என்றும் தெளிவுபடுத்தினார்கள்.

ஹம்தா:-

சகோதரி ராபிதா முதல் வஹி கிடைத்த நிகழ்வைச் சுட்டிக்காட்டினார். அதைத் தொடர்ந்து சந்தர்ப்ப சூழ்நிலைக்கும், தேவைக்கும் ஏற்ப அல்குர்ஆன் ஆயத்துகள் அருளப்பட்டன. ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்குர்ஆன் ஆயத்துக்களை அறிவிக்கும்போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதனை மனனம் செய்து கொண்டார்கள். அத்துடன் எழுத்தறிவுள்ள தன் தோழர்களிடம் அவற்றை எழுதி வைக்குமாறு பணித்தார்கள். அவ்வாறு வஹியை எழுதியோர் 'குத்தாபுல் வஹி' என அழைக்கப்படனர். அன்று மக்காவில் எழுத, வாசிக்கத் தெரிந்தவர்கள் குறைவாகவே இருந்தார்கள். அது போன்றே எழுதுவதற்கான சாதனங்களும் மிக அரிதாகவே காணப்பட்டன. எனவே அவர்கள் தோல், தடித்த எலும்பு, வெண்மையான கற்கள் போன்றவற்றில் எழுதிக் கொண்டார்கள்.

அஸ்கா:-

அல்குர்ஆன் வசனங்கள், சந்தர்ப்பத்துக்கேற்ப அருளப்பட்டுக் கொண்டிருந்ததால் ஓரிரு வசனங்களாகவோ, பல வசனங்களாகவோ, ஸூறாவாகவோ இறங்கிக் கொண்டிருந்தன. அப்போது புதிதாக இறக்கப்பட்ட 'ஆயத்' அல்லது 'ஸூறா' முன்னர் அருளப்பட்ட எந்த ஆயத் அல்லது ஸூறாவிற்கு முன்பு அல்லது பின்பு அமைய வேண்டும் என்ற குறிப்பை ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அறிவிப்பார்கள். அதனையும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குத்தாபுல் வஹிகளிடம் குறித்துக் கொள்ளுமாறு சொல்வார்கள்.

அல்குர்ஆன் படிப்படியாக இறங்கிய ஒழுங்கை 'தர்தீப் நுஸூல்' எனவும், அல்குர்ஆனை ஓதுவதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காட்டிய ஒழுங்கு 'தர்தீப் திலாவத்' எனவும் அழைக்கப்படுகின்றது. அல்குர்ஆன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத் வரை இறங்கிக்கொண்டிருந்தது.

முஷ்பா :-

சகோதரிகள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் அல்குர்ஆன் அருளப்பட்ட முறையினைச் சுட்டிக்காட்டினர். பெரும்பாலும் அரபிகளிடம் மனன சக்தி அதிகமாக காணப்பட்டது. அது அச்சமூகத்தின் ஒரு சிறப்பம்சமாகும். எனவே, ஸஹாபாக்கள் அல்குர்ஆனை இலகுவாக மனனமிட்டுக் கொண்டார்கள். அதே வேளை குத்தாபுல் வஹி எனப்பட்டோரும், வேறு சிலரும் மனனத்தோடு எழுதியும் வந்தார்கள். எனினும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் அல்குர்ஆன் நூலுருப்படுத்தப்படவில்லை.

ஆயினும், ஒவ்வொரு றமழானிலும் அதுவரை இறங்கப்பட்ட வசனங்களை ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஓதிக் காண்பிக்க நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது மனனத்தை சரிபார்த்துக்கொள்வார்கள். இவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்துக்கு முந்திய ரமழானில் இருமுறை சரிபார்த்துக் கொண்டார்கள். அவ்வேளை ஸைத் இப்னு ஸாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் உடனிருந்து அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஹஸ்பா :-

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்குர்ஆனைத் தொகுப்பதற்கான முன் ஆயத்தங்களை எவ்வாறு செய்து வைத்தார்கள் என்பதை சகோதரி முஷ்பா எடுத்துக் கூறினார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத்தாகி, அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கலீபாவாகப் பதவியேற்றபோது முதநப்பிகளும் (போலி நபிமார்கள்) முர்தத்களும் (இஸ்லாத்திலிருந்து வெளியேறியவர்களும்) குழப்பம் செய்ய ஆரம்பித்தனர். இதனால் அவர்களுக்கெதிராக யமாமா எனுமிடத்தில் ஒரு போராட்டம் நடந்தது. அப்போரில் அல்குர்ஆனை மனனமிட்டிருந்த அதிகமான ஹாபிழ்கள் ஷஹீதாக்கப்பட்டனர். இதனால் அல்குர்ஆன் அழிந்துவிடுமோ என்ற அச்சம் உமர்



ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஏற்பட்டது. அவர் கலீபாவை அணுகி அல்குர்ஆனைத் தொகுத்து எழுதி வைக்க வேண்டுமென்று ஆலோசனை கூறினார். கலீபாவோ அது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் செய்யாத வேலை எனக்கூறி முதலில் தயக்கம் காட்டினார். எனினும் நிலைமையை உணர்த்தியபோது அதற்கு உடன்பட்டார். அப்பொறுப்பு ஸைத் இப்னு ஸாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையில் ஒரு குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆரம்பத்தில் தயக்கம் காட்டிய ஸைத் இப்னு ஸாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பின்னர் பொறுப்புடன் செயலாற்றி அப்பணியை நிறைவேற்றினார்.

அவர் மஸ்ஜிதுன் நபவியின் வாயிலில் இருவரை நிறுத்தி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் எழுதப்பட்ட தம்மிடமுள்ள அல்குர்ஆன் ஏடுகளைக் கொண்டுவந்து சாட்சிகளுடன் ஒப்படைக்குமாறு அறிவித்தல் கொடுத்தார். அவ்வாறு கொண்டு வரப்பட்டவை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. அக்குழுவினர் அவற்றைச் சரி பார்த்தார்கள். பின்னர் அவற்றை எழுதி கலீபாவிடம் ஒப்படைத்தனர். கலீபா அதற்கு 'முஸ்ஹப்' எனப் பெயரிட்டார். அந்த முஸ்ஹப் முதலில் கலீபா அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடமும் அவரது வபாத்துக்குப் பின்னர் கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடமும் ஒப்படைக்கப்பட்டது. உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், அதனைத் தனது மகளும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனைவியுமான ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் ஒப்படைத்தார்கள்.

வஸீமா:-

அல்குர்ஆன் தொகுப்பின் அடுத்த கட்டம், கலீபா உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் இடம்பெறுகின்றது. அவர்களின் காலத்தில் ஆர்மீனியா, ஆஸர்பைஜான் பிரதேசங்களில் முஸ்லிம்கள் யுத்தத்தில் ஈடுபட்டனர். படையணியில் ஈராக்கியரும், ஷாம் தேசத்தவரும் இருந்தனர். அவர்கள் அல்குர்ஆனை ஓதும்போது வெவ்வேறான முறைகளில் ஓதினர். மட்டுமன்றி தாம் ஓதும் முறையே சரியானது என வாதித்தனர். இதனை ஹுதைபா அல் யமானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவதானித்தார்கள். போர் முடிந்து மதீனா சென்றதும் அல்குர்ஆனின் பெயரால் முஸ்லிம்கள் பிளவுபடக் கூடாது என்ற கருத்தை முன்வைத்து போர்க்களத்தில் நிகழ்ந்ததைக் கலீபாவிடம் எடுத்துக் கூறினார்கள். ஷாமியரும் ஈராக்கியரும் ஒரே குர்ஆனை வேறுபட்ட முறையில் ஓதக் காரணம் யாது என்ற கேள்வி உங்கள் மனதில் எழலாம். அன்றைய காலத்தில் ஒவ்வொரு கோத்திரத்தவரும் வெவ்வேறான அரபு மொழி வழக்கைக் கொண்டிருந்தனர். இதனால் மொழி வழக்கில் உச்சரிப்பு வேறுபட்டிருந்தது. கருத்து முரண்பட்டிருக்கவில்லை. ஆதலால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தத்தம் மொழி வழக்கில் அல்குர்ஆனை ஓதுவதற்கு அனுமதித்திருந்தார்கள்.

நிப்லா:-

ஹுதைபா அல்யமானி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் முறைப்பாட்டைச் செவிதாழ்த்திய கலீபா, உடனடியாக செயல்பட ஆரம்பித்தார். ஸைத் இப்னு ஸாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையில் குறைஷியரை உள்ளடக்கிய ஒரு

குழுவை அமைத்தார். அவர்களிடம் குறைஷியருடைய வழக்கு மொழியில் அல்குர்ஆனைப் பிரதி பண்ணுமாறு கேட்டுக் கொண்டார். அவர்கள் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கால முஸ்ஹபையும், குறைஷிகளின் மொழி வழக்கையும் கருத்தில் கொண்டு எட்டுப் பிரதிகளைத் தயாரித்தார்கள். அவை ஒவ்வொரு மாகாணத்துக்கும் அனுப்பி வைக்கப்பட்டன. அந்தப் பிரதிகளோடு குறைஷியரின் வழக்கு மொழியில் ஓதக்கூடிய காரிகளையும் அனுப்பி வைத்தார். இனிமேல் அந்தக் காரிகள் போன்றே ஓத வேண்டும் என்றும், அனுப்பி வைக்கப்பட்டுள்ள பிரதியைப் பார்த்தே எழுதிக்கொள்ள வேண்டுமென்றும் (முன்னர் வைத்திருந்த) ஏனைய பிரதிகள் அனைத்தையும் எரித்துவிட வேண்டும் என்றும் கட்டளை பிறப்பித்தார். இதனால் எல்லோரும் அல்குர்ஆனை ஒரே முறையில் ஓதும் நிலை ஏற்பட்டது. எனவேதான் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் 'ஜாமிஉல் குர்ஆன்' (அல்குர்ஆனை ஒன்றுசேர்த்தவர்) என அழைக்கப்படுகின்றார். அவரது கால குர்ஆன் பிரதி முஸ்ஹப் உஸ்மானி எனப்படுகின்றது.

ஆசிரியர்:-

இதுவரை கேட்டதிலிருந்து அல்குர்ஆன் அருளப்பட்டு தொகுக்கப்பட்ட முறையினை விளங்கிக் கொண்டிருப்பீர்கள். இது பற்றி அல்லாஹ் கூறியிருப்பதும் அவதானிக்கத்தக்கது.

'நிச்சயமாக நாமே இக்குர்ஆனை இறக்கினோம். நாமே அதைப் பாதுகாப்போம்' (15:9)

இது தொடர்பாக வேறு விளக்கங்கள் தேவைப்படின் கேட்டுக் கொள்ளலாம். பங்கேற்றவர்கள் அனைவருக்கும் நன்றி. ஜஸாகுமுல்லாஹு ஹைரா.

**பயிற்சி**

1. பின்வரும் அரபுச் சொற்களின் தமிழ் பிரயோகத்தை சுட்டிக்காட்டுக.

| | |
|---|---|
| 1. ஸூரா | 2. ஆயத் |
| 3. முஸ்ஹப் உஸ்மானி | 4. குத்தாபுல் வஹி |
| 5. இக்ரஉ | 6. தர்தீப் நுஸூல் |
| 7. முர்தத் | 8. முதநப்பி |
| 9. தர்தீப் திலாவத் | 10. காரி |

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முதல் வஹி இறங்கிய நிகழ்ச்சியை எழுதிக்காட்டுக.
3. அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் அல்குர்ஆன் தொகுக்கப்பட்டமைக்கான காரணத்தை விளக்குக.
4. உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜாமிஉல்குர்ஆன் எனும் பெயரால் அழைக்கப்பட்டமைக்கான காரணத்தை விளக்குக
5. அல்குர்ஆனைத் தொகுப்பதில் ஸைத் இப்னு ஸாபித் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் பங்கை விரிவாக எடுத்துக்காட்டுக.

# 16



# ஸுன்னாவின் முக்கியத்துவம்



இஸ்லாத்தில் அல்குர்ஆனை அடுத்து இரண்டாவது மூலாதாரமாக ஸுன்னா காணப்படுகின்றது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்வையும், வாக்கையும் ஸுன்னா என வரைவிலக்கணப்படுத்தலாம். ஸுன்னாவை ஹதீஸ் என்றும் அழைப்பதுண்டு.

ஸுன்னா இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரமாகும் என்பதை அல்குர்ஆனும் ஸுன்னாவும் வலியுறுத்துகின்றன.

### அல்குர்ஆன் குறிப்பிடும் ஆதாரங்கள்

قُلْ إِن كُنتُمْ تُحِبُّونَ ٱللَّهَ فَٱتَّبِعُونِى يُحْبِبْكُمُ ٱللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ ۗ وَٱللَّهُ
غَفُورٌ رَّحِيمٌ ﴿٣١﴾

'(நபியே மனிதர்களை நோக்கி) கூறுங்கள்: நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்துவிடுவான். அல்லாஹ் மிக மன்னிப்பவனும் நிகரற்ற அன்புடையவனாகவும் இருக்கின்றான்' *(3:31)*

مَّن يُطِعِ ٱلرَّسُولَ فَقَدْ أَطَاعَ ٱللَّهَ ۖ

'எவர் (அல்லாஹ்வுடைய) தூதருக்கு (முற்றிலும்) கட்டுப்பட்டு நடக்கிறாரோ அவர் நிச்சயமாக அல்லாஹ்வுக்கே வழிப்பட்டார்' *(4:80)*

وَمَآ ءَاتَىٰكُمُ ٱلرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَىٰكُمْ عَنْهُ فَٱنتَهُوا۟ ۚ

'நம்முடைய தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் மனமுவந்து எடுத்துக் கொள்ளுங்கள். அவர் எதை விட்டும் உங்களைத் தடுத்தாரோ அதைவிட்டு நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்.' *(59:07)*

## ஸுன்னா குறிப்பிடும் ஆதாரங்கள்

'நிச்சயமாக எனது இறைவன் எனக்குக் கற்றுத் தந்துள்ளவற்றிலிருந்து நீங்கள் அறியாததை உங்களுக்குக் கற்றுத்தருமாறு அவன் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறான்' (முஸ்லிம்)

'நான் உங்களிடம் இரண்டை விட்டுச் செல்கிறேன். அவற்றை நீங்கள் பின்பற்றி ஒழுகும் வரை வழிதவற மாட்டீர்கள். ஒன்று அல்குர்ஆன். மற்றது எனது ஸுன்னா' (முவத்தா)

'எனக்கு வழிபட்டவன் சுவர்க்கம் புகுவான். மாறு செய்தவன் நிராகரித்து விட்டான்' (பைஹகி) போன்ற ஹதீஸ்கள் ஸுன்னாவை ஏற்க வேண்டுமென வலியுறுத்துகின்றன.




எனவேதான், அல்குர்ஆனை வஹி மத்லுவ்வு எனவும், ஸுன்னாவை வஹி கைரு மத்லுவ்வு எனவும் வழங்கி வருகின்றோம்.

அல்குர்ஆன் பல இடங்களில் கிதாப் (வேதம்) என்ற சொல்லுடன் ஹிக்மா (ஞானம்) என்ற சொல்லையும் இணைத்துக் கூறுகின்றது. 'அத்தூதர் அவர்களுக்கு அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதிக்காண்பித்து அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் (ஹிக்மா) கற்றுக்கொடுக்கிறார்.' (62:2)

மேலே வந்துள்ள ஞானம் என்ற சொல் ஸுன்னாவையே குறிப்பதாக இமாம் ஷாபிஈ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றார்கள். 'எனக்கு அல்குர்ஆனும் அதனோடு இணைந்து அதனை ஒத்த இன்னொன்றும் அருளப்பட்டது' என்ற ஹதீஸை அதற்கு ஆதாரமாகக் குறிப்பிடுகின்றார்கள்.

அல்குர்ஆனும், ஸுன்னாவும் ஒன்றிலொன்று தங்கி நிற்கும் முழுமையான அங்கமாகும். அல்குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் இடையிலான தொடர்பு ஒரு புத்தகத் துக்கும் அதனை இருளில் வாசிக்கத் துணை புரியும் வெளிச்சத்துக்குமிடையேயுள்ள தொடர்பு போன்றது. எனவே, ஸுன்னாவைப் புறக்கணித்து அல்குர்ஆனை விளங்கவோ, செயற்படுத்தவோ, சட்டம் வகுக்கவோ முடியாது.

இதற்கான சில உதாரணங்களை நோக்குவோம். அல்குர்ஆன் தொழும்படி ஏவுகின்றது. எவ்வாறு தொழ வேண்டும் என்பதை ஸுன்னா மூலமே அறிய முடிகிறது. தொழ வேண்டிய நேரம், தொழும் முறை, தொழுகைக்கான விதிமுறைகள் அனைத்தையும் ஸுன்னா விளக்குகின்றது.

ஒருமுறை இம்ரான் பின் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் ஒருவர் வந்தார். எங்களுக்கு அல்குர்ஆனைத் தவிர வேறு எதுவும் கூற வேண்டாம் என்றார். அவரைத் தமக்கு அருகே அழைத்த இம்றான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அல்குர்ஆனில் லுஹருக்கு நான்கு ரகஅத் என்பது கூறப்பட்டுள்ளதா, கஃபாவை ஏழுமுறை தவாப் செய்ய வேண்டும். ஸபா - மர்வாவுக்கிடையில் ஏழு முறை ஸஈ செய்ய வேண்டும்

எனக் கூறப்பட்டுள்ளதா என வினவி ஸுன்னாவின் முக்கியத்துவத்தைச் சுட்டிக்காட்டினார்கள்.

மற்றொருவர் அப்துல்லா இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கஸ்ர் - ஜம்உ தொழுகை அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ளதா எனக் கேட்டார். அவ்வேளை, சகோதரா, எங்களுக்கு அல்லாஹ், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தூதராக அனுப்பினான். அவர்கள் போன்றே நாமும் செய்கிறோம் (முவத்தா) என்றார்கள்.

இவ்வாறே சட்ட விதிகள் தொடர்பான விளக்கத்துக்கும் ஸுன்னா தேவைப்படுகிறது. உதாரணமாக திருட்டுக் குற்றம் நிரூபிக்கப்பட்டால் கை துண்டிக்கப்பட வேண்டுமென அல்குர்ஆன் கூறுகிறது. ஆனால் ஸுன்னாவோ சிறுவர் மற்றும் மன நோயாளர்களுக்கு விதிவிலக்களிக்கிறது. அத்துடன் திருடப்பட்ட பொருள் கவசத்தின் பெறுமதியைவிட அதிகமானதாக இருக்க வேண்டும். மணிக்கட்டு வரையான கையே துண்டிக்கப்பட வேண்டும். உணவுப் பொருட்கள் திருடப்பட்டதற்காக இத்தண்டனை வழங்கப்பட முடியாது என்பன போன்ற விளக்கங்கள் ஸுன்னா மூலமே பெறப்படுகின்றன.

தவிர, ஜனாஸாத் தொழுகை, ஸகாத்துல் பித்ர், இஹ்ராம் ஒழுங்கு போன்ற செயற்பாடுகள் ஸுன்னா மூலமே விளக்கப்பட்டுள்ளன என்பதும் நோக்கத்தக்கதாகும்.

ஸுன்னாவைப் பாதுகாப்பதற்காக ஸஹாபாக்களும், தாபிஈன்களும், தொடர்ந்து வந்தவர்களும் எடுத்த முயற்சிகள் ஸுன்னாவின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டுகின்றன. ஸஹாபாக்கள் ஹதீஸ்களைப் பிழையில்லாமல் மனனமிட்டார்கள். எழுத்தறிவுள்ளோர் எழுதிப் பாதுகாத்தார்கள். தமக்குத் தெரிந்த ஹதீஸ்களைச் சாட்சிகளுடன் ஒப்படைத்தார்கள்; அறிவித்தார்கள்; ஹதீஸ்களை நடைமுறைப்படுத்தினார்கள். பிற்காலத்தில் வந்த அறிஞர்கள் ஹதீஸ்களை அறிய பலதரப்பட்ட முயற்சிகளை மேற்கொண்டார்கள். ஹதீஸ்களைத் தெரிந்து வைத்திருந்தவர்களை நேரடியாகத் தேடிச் சென்றார்கள். போலியான ஹதீஸ்களிலிருந்து உண்மையான ஹதீஸ்களைக் கண்டறிய கடுமையான ஆய்வுகளை மேற்கொண்டார்கள். ஹதீஸ் நூல்களைத் தொகுத்தார்கள். பிரச்சினைகள் தோன்றியபோது ஹதீஸ்களின் துணையுடன் தீர்வுகளைக் கண்டறிந்தார்கள்.

மேற்கூறப்பட்டவற்றிலிருந்து ஸுன்னாவின் முக்கியத்துவத்தைப் புரிந்துகொண்ட நாம் அதனை விளங்கி வாழ்வில் நடைமுறைப்படுத்தி வருவோம்.

**பயிற்சி**

1. ஸுன்னா இஸ்லாத்தின் மூலாதாரங்களில் ஒன்றாக அமைவதற்கான காரணங்களை எடுத்துக்காட்டுக.
2. ஸுன்னாவைப் பாதுகாப்பதற்காக அறிஞர்கள் எடுத்து வந்துள்ள முயற்சிகளை எடுத்துக்காட்டுக.
3. ஸுன்னா இன்றி அல்குர்ஆனைச் சரியாக விளங்க முடியாது என்ற கருத்தை ஆதாரங்களுடன் உறுதிப்படுத்துக.

17



# துணை மூலாதாரங்கள்



ஒரு முஸ்லிம் இறை சட்டத்துக்கு அமைவாகவே வாழவேண்டும். அவ்வாறு வாழ்வதற்கு இன்றியமையாத பிரதான சட்டமூலாதாரங்களாக அல்குர்ஆனும் ஸுன்னாவும் அமைந்துள்ளன. அவ்விரு மூலாதாரங்களும் மாற்றமுறாதவை மற்றும் மறுமை நாள் வரை தோன்றவுள்ள அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வு காண்பதற்கான அடிப்படைகளை முன்வைத்துள்ளன. இவ்வடிப்படைகளின் துணையுடன் உருவாக்கப்பட்ட மூலாதாரங்களே துணை மூலாதாரங்கள் ஆகும். இம்மூலாதாரங்களுள் இஜ்மாஉ, கியாஸ் என்பன முக்கிய இடம்பெறுகின்றன.

## இஜ்மாஉ

'இஜ்மாஉ' என்ற அரபுப் பதம் ஒன்றுசேர்த்தல், உறுதி கொள்ளல், ஏகோபித்த முடிவுக்கு வருதல் போன்ற கருத்துக்களில் பயன்படுத்தப்படுகிறது. இஸ்லாமிய வழக்கில் இஜ்மாஉவை சுருக்கமாக ஏகோபித்த முடிவு எனக் குறிப்பிடலாம்.

இஜ்மாஉவை ஒரு சட்டமூலாதாரமாக கொள்ளலாம் என்பதற்கு அல்குர்ஆனும் ஸுன்னாவும் ஆதாரங்களை முன்வைத்துள்ளன.

1. 'எவரொருவர் நேர்வழி இன்னது என்று தனக்குத் தெளிவான பின்னரும் (அல்லாஹ்வின்) இத்தூதரை விட்டும் பிரிந்து, முஃமின்கள் செல்லாத வழியில் செல்கின்றாரோ, அவரை நாம் அவர் செல்லும் வழியிலேயே செல்லவிட்டு, நரகத்திலும் நுழையச் செய்வோம். அது சென்றடையும் இடங்களில் மிகக் கெட்டதாகும்.' (4:115)

2. 'அல்லாஹ் எனது சமூகத்தை வழிகேட்டில் ஒன்றுசேர்க்க மாட்டான்' (திர்மிதி)

**இஜ்மாஉ என்பது 'நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது மரணத்தின் பின்னர் தோன்றுகின்ற ஏதேனுமொரு பிரச்சினைக்கான தீர்வு அல்குர்ஆனிலோ ஸுன்னாவிலோ காணப்படாதவிடத்து குறித்த அக்காலத்தில் வாழும் முஜ்தஹிதுகள் அப்பிரச்சினைக்கான தீர்வில் ஒருமித்த கருத்து கொள்வதையே' குறிக்கும்.**

இவ்வாதாரங்களின்படி

★ முஸ்லிம் சமூகம் வழிகேட்டில் ஒன்றுபடமாட்டாது.

★ ஏகோபித்த முடிவே முஃமின்களின் பாதையாகும்.

★ ஏகோபித்த முடிவைப் பின்பற்றாதிருப்பது அல்லாஹ்வின் தூதரை விட்டும் பிரிந்து செல்வது போன்றாகும்.

★ அல்லாஹ்வின் தூதரையும் முஃமின்களையும் விட்டுத் தனி வழியில் செல்பவன் நரகத்தையே அடைவான்.

இவற்றிலிருந்து இஜ்மாஉ ஒரு முக்கியமான சட்ட மூலாதாரம் என்பது தெளிவாகின்றது.

இஜ்மாஉவை ஏற்றுப் பின்பற்றும் போது அதனால் பல பயன்கள் கிட்டுகின்றன.

1. சமூகத்தில் ஒற்றுமை பேணப்படல்.
2. சமூகத்தில் கட்டுப்பாடு குலையாதிருத்தல்.
3. பரஸ்பர உதவியின் அடிப்படையிலான வாழ்வுக்கு வழியமைத்தல்.

முஜ்தஹித்கள் இஜ்மாஉவைப் பல்வேறு வகைகளாகப் பிரித்து விளக்குகின்றனர். அவற்றுள் முக்கியமான சிலவற்றை மாத்திரம் சுருக்கமாக நோக்குவோம்.

1. இஜ்மாஉஸ் ஸரீஹ்:- 'தெளிவான இஜ்மாஉ' என இதனை அழைக்கலாம். குறிப்பிட்ட காலத்தில் வாழும் அனைத்து முஜ்தஹிதுகளும் ஏகோபித்த முடிவில் உள்ளனர் என்பது அவர்களது வார்த்தைகளின் மூலம் தெளிவாகத் தெரிய வந்திருப்பின் அதனையே இவ்வாறு அழைப்பர். இது **இஜ்மாஉல் கவ்லி** என்றும் அழைக்கப்படுகின்றது.

2. இஜ்மாஉல் அக்ஸரிய்யா:- பெரும்பான்மையின் முடிவைக் குறிக்க இப்பதம் பயன்படுத்தப்படுகின்றது. குறித்த ஒரு பிரச்சினையின்போது முஜ்தஹித்களில் கணிசமானோர் ஒரு தீர்வில் ஒன்றுபடுவதையே இது குறிக்கும்.

3. இஜ்மாஉஸ் ஸுகூதி:- மௌனம் சார்ந்த இஜ்மாஉ என இதனை அழைக்கலாம். குறிப்பிட்ட காலத்தில் வாழும் முஜ்தஹிதுகளில் ஒருவரோ, சிலரோ குறிப்பிட்ட பிரச்சினைக்கான முடிவு சம்பந்தமாகத் தமது இணக்கத்தையோ, முரண்பாட்டையோ தெரிவிக்காது மௌனம் சாதித்திருப்பின் அம்முடிவை இவ்வாறு அழைப்பர். இம்முடிவை ஆதாரமாக கொள்ளலாகாது என இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். மாலிகி மத்ஹபைச் சேர்ந்த பெரும்பாலான அறிஞர்கள் இம்முடிவை இஜ்மாஉவாகக் கருதுகின்றனர்.

## கியாஸ்

துணை மூலாதாரங்களில் மிக அதிகமாகக் கையாளப்படுகின்ற, பயன்படுகின்ற ஒன்றாக கியாஸ் அமைந்துள்ளது. இப்பதம் அரபு மொழியில் 'ஒப்பு நோக்குதல்', 'அனுமானித்தல்' போன்ற பொருள்களில் கையாளப்படுகிறது.

இஸ்லாமிய வழக்கில் கியாஸ் என்பது '**அல்குர்ஆனிலோ ஸுன்னாவிலோ தீர்வு சொல்லப்படாத ஒரு புதிய பிரச்சினை தோன்றினால் அதனைக் குர்ஆன் ஸுன்னாவில் தீர்வு சொல்லப்பட்ட பிரச்ச்னையோடு ஒப்புநோக்கி அதன் தீர்வை புதிய பிரச்சினைக்கும் பயன்படுத்துவதைக்**' குறிக்கும்.

அதாவது அல்குர்ஆனில் அல்லது ஸுன்னாவில் தீர்வு சொல்லப்பட்டுள்ள ஒரு பிரச்சினையோடு, தீர்வு சொல்லப்படாத ஒரு பிரச்சினையை ஒப்புநோக்கி அப்பிரச்சினைக்கு வழங்கப்பட்ட அதே தீர்வை இப்பிரச்சினைக்கும் வழங்குதலைக் குறிக்க பயன்படுகிறது. இவ்வாறு தீர்வு சொல்ல வேண்டுமாயின் இரு பிரச்சினைகளுக்குமிடையில் பொதுத்தன்மை காணப்படுதல் அவசியமாகும்.

**கியாஸ் அங்கீகரிக்கப்பட பின்வரும் நான்கு அடிப்படை அம்சங்களும் இன்றியமையாதவை. அவை 'அர்கானுல் கியாஸ்' என அழைக்கப்படுகின்றன.**

**1.அல் அஸ்ல்:-** ஏற்கனவே தீர்வு சொல்லப்பட்டுள்ள பிரச்சினையே இவ்வாறு அழைக்கப்படுகிறது. உதாரணம்:- 'கொலை செய்தவன் வாரிசாக முடியாது' (திர்மிதீ) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள். எனவே வாரிசு சொத்தைப் பெற அருகதையுள்ள ஒருவர், சொத்தின் உரிமையாளனைக் கொலை செய்திருந்தால் அவருக்கு வாரிசுச் சொத்தில் பங்கு கிடையாது.

**2.அல்பரஉ:-** அல்குர்ஆனிலோ, ஸுன்னாவிலோ, இஜ்மாஉவிலோ தீர்வு முன்வைக்கப்படாத, தீர்வு காணப்பட வேண்டிய பிரச்சினையே அல்பரஉ ஆகும். உதாரணமாக வஸிய்யத் செய்யப்பட்டவர் வஸிய்யத் செய்தவரைக் கொலை செய்தால் அவருக்கு சொத்து வழங்கப்படலாமா? என்பது தீர்வு காணப்பட வேண்டிய ஒரு பிரச்சினையாகும்.

**3. இல்லத்:-** இரு பிரச்சினைகளுக்கும் இடையில் அவதானிக்கப்படும் பொதுப்பண்பு அல்லது பொதுக்காரணிதான் இல்லத் ஆகும். இவ்விரு பிரச்சினைகளினாலும் அவதானிக்கப்படும் பொதுத்தன்மை சொத்தைப் பெற அவசரப்படலாகும்.

**4. ஹுக்ம்:-** அல்குர்ஆனில் அல்லது ஸுன்னாவில் முன்வைக்கப்பட்டுள்ள தீர்வே இப்பெயர்கொண்டு அழைக்கப்படுகிறது. சொத்தைப் பெறுவதற்காகக் கொலையில் ஈடுபட்ட வாரிசுக்கு சொத்து வழங்கப்படமாட்டாது என்பதே இங்குள்ள ஹுக்ம் ஆகும்.

அவசரமாக சொத்தை பெறும் நோக்கில் வஸிய்யத் செய்தவரை கொலை செய்தமைக்காக கொலையாளிக்கு சொத்து வழங்கப்பட மாட்டாது என்ற தீர்வே வழங்கப்படும்.இது கியாஸின் அடிப்படையில் பெறப்பட்ட தீர்வாகும்.

**கியாஸை ஒரு சட்டமூலாதாரமாக கொள்ளலாம் என்பதற்கு ஏராளமான ஆதாரங்களை முன்வைக்கலாம். இங்கு மூன்று ஆதாரங்களை மாத்திரம் நோக்குவோம்.**

1. 'ஹஜ் கடமையான நிலையில் மரணித்த எனது தந்தையாருக்காக நான் ஹஜ் செய்யலாமா?'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு பெண் வினவினாள். அதற்கு அவர்கள் 'உனது தந்தையார் கடன் செலுத்த வேண்டியிருந்து அவருக்குப் பதிலாக நீ அதனைச் செலுத்தினால் அது அவருக்குப் பயனளிக்குமா? என வினவினார்கள். அப்பெண் 'ஆம்' என்றாள். 'அவ்வாறாயின், அல்லாஹ்வுக்குச் செலுத்த வேண்டியுள்ள கடன் செலுத்தப்படுவதற்கு மிகவும் பொருத்தமானது' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

2. ஸஹாபாக்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் கியாஸின் அடிப்படையில் முடிவுகளுக்கு வந்துள்ளனர். உதாரணமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்த வேளையில் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தொழுகையை இமாமாக நின்று நடத்தினார்கள். அவரது அந்த இமாமத் தலைமையை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத்தான பின் சமூகத்துக்கான தலைமைத்துவத்தோடு ஒப்புநோக்கிய ஸஹாபாக்கள் அவரைக் கலீபாவாகத் தெரிவு செய்தனர்.

3. பகுத்தறிவு கியாஸை வேண்டி நிற்கிறது. ஏனெனில் அல்குர்ஆன் மதுபானத்தை ஹராமாக்கியுள்ளது. ஆனால் அதைப் போல் அல்லது அதைவிட மோசமான வேறு போதைப் பொருள்கள் பற்றி எதுவுமே கூறவில்லை. கியாஸை ஏற்காவிடில் மதுபானம் மட்டுமே ஹராமாகும்; ஏனைய போதைப் பொருள்கள் ஹராம் அல்ல என்ற பகுத்தறிவுக்கு முரணான தீர்ப்பே வழங்கப்படும்.

மனித சமூகம் நாளுக்குநாள் பல்வேறு துறைகளில் முன்னேறிச் செல்கின்றது. இம்முன்னேற்றங்கள் பல புதிய பிரச்சினைகளை உருவாக்கியுள்ளன. அவற்றுக்கான தீர்வுகளைப் பெறுவதற்கான அடிப்படைகளை அல்குர்ஆனும் ஸுன்னாவும் முன்வைத் துள்ளன. எனவே அவற்றின் ஒளியில் இப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவேண்டியுள்ளது. அதற்கு உதவுகின்ற முக்கியமான ஒரு மூலாதாரமாகவே கியாஸ் அமைந்துள்ளது. அவ்வாறே, இஸ்லாம் எக்காலத்துக்கும் ஏற்றது என்பதனை நிறுவுவதற்கும் கியாஸ் பெருந்துணை புரிகின்றது.

இஜ்மாஉ, கியாஸ் தவிர்ந்த இன்னும் ஏழு துணை மூலாதாரங்கள் காணப்படுகின்றன. அவை பின்வருமாறு:-

| | | | |
|---|---|---|---|
| 1. | இஸ்திஹ்ஸான் | 2. | இஸ்திஸ்ஹாப் |
| 3. | இஸ்திஸ்லாஹ் (மஸ்லஹா முர்ஸலா) | 4. | உர்ப் |
| 5. | அஷ்ஷராஇஉஸ் ஸாபிகா | 6. | கவ்லுஸ் ஸஹாபி |
| 7. | சத்துத் ஸராஇஃ | | |

பொதுவாக, துணை மூலாதாரங்கள் அனைத்தும் சட்டத்துறையில் எழுகின்ற பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு உதவுவதுடன் இஸ்லாம் எல்லாக் கால சூழ்நிலைகளுக்கும் நெகிழ்ந்து கொடுக்கக் கூடியது என்பதையும் உறுதிப்படுத்துவதாகவுமுள்ளன.

### பயிற்சி

1. இஜ்மாஉ என்றால் என்ன?
2. இஜ்மாஉவின் வகைகளைக் குறிப்பிடுக.
3. இஜ்மாஉவின் இரு பயன்களைத் தருக.
4. கியாஸ் ஏன் அவசியப்படுகிறது என்பதை விளக்குக.
5. அர்கானுல் கியாஸை விளக்குக.
6. துணை மூலாதாரங்கள் அனைத்தையும் பட்டியல் படுத்துக.

18

# இஸ்லாத்திற்கு முற்பட்ட அரேபியா




இஸ்லாம் அரபு நாட்டில் அறிமுகமானது. அது மேற்காசியாவில் உள்ளதுடன், வடக்கே சிரிய பாலைவனத்தையும் தெற்கே அறபுக் கடலையும் மேற்கே செங்கடலையும், கிழக்கே பாரசீக வளைகுடாவையும் எல்லைகளாகக் கொண்டு அமைந்துள்ளது.

அங்கு இஸ்லாம் அறிமுகமான காலத்தை, ஜாஹிலிய்யாக் காலம் என்பர். அதன் கருத்து, அறிவும் பண்பும் நிலவாத காலம் என்பதாகும். அதன் மற்றொரு கருத்து, இறைவழிகாட்டலுக்கு முரணான வாழ்வுமுறை நிலவிய காலம் என்பதாகும். இந்த நிலை அறபு நாட்டில் மட்டுமன்றி ஏனைய நாடுகளிலும் காணப்பட்டது.

## சமூகம்

அரேபியாவில் கோத்திர அமைப்பிலான ஒரு சமூகமே காணப்பட்டது. குடும்பங்கள் பல ஒன்றிணைந்து ஷுஊப் (கிளைகள்) ஆகின. கிளைகள் ஒன்றிணைந்து கபீலா (கோத்திரங்கள்) ஆகின. கோத்திரங்கள் ஷைகு எனப்படும் தலைவரின் கீழ் செயற்பட்டன. இது தவிர அங்கு ஆட்சி முறையொன்று காணப்படவில்லை. அறபு நாட்டின் பௌதிக நிலை, இவ்வாறான ஒரு சமூக அமைப்புக்கு இட்டுச் சென்றது எனலாம்.

அறபு நாட்டில், அரிதான வளமும் நிறைவான தேவையும் காணப்பட்டன. மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்ட அவர்கள், புல்லுக்காகவும், நீருக்காகவும் போட்டியிட வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. அதற்காகத் தம்மை வலுப்படுத்திக்கொள்ளும் நோக்கிலேயே அவர்கள் கோத்திர அமைப்பை உருவாக்கிக் கொண்டனர். கஃபாவைப் பரிபாலித்து வந்த குறைஷியர் உயர்ந்த கோத்திரமாகக் கணிக்கப்பட்டனர். அவர்கள் வியாபாரத்தில் ஈடுபட்டனர். காலப்போக்கில், கோத்திர அமைப்பு பலம் பெற்று, ஒரு வெறியாக மாறியது. ஒவ்வொருவரும் கோத்திரமொன்றின் அங்கத்தவராக இருந்தனர். தத்தம் கோத்திர நலனுக்காகத் தம்மை அர்ப்பணித்தனர். இது 'அஸபிய்யா' கோத்திர உணர்வு எனப்பட்டது. எல்லா நிலைகளிலும் நிபந்தனையின்றி கோத்திரத்திற்கு விசுவாசமாக நடந்து கொள்வது நியதியாக அமைந்தது. அதனை மீறுவோர் ஒதுக்கப்பட்டனர்.

அந்த சமூகத்தில் மிகச்சிறிய தவறுக்காகவும் நீண்ட காலப் போராட்டங்கள் இடம்பெற்றன. ஒரு கோத்திரத்தைச் சேர்ந்த ஒட்டகமொன்று மற்றொரு கோத்திரத்துக் குரிய தோட்டத்தில் மேய, அதனைத் தாக்கி அதன் காலை உடைத்ததற்காகவும் நீண்ட காலமாகப் போர் நிகழ்ந்தது. அவ்வாறே அவ்ஸ், கஸ்ரஜ் கோத்திரத்தாருக்கிடையேயும் நீண்ட காலப் போர் இடம் பெற்றது. போராட்டத்தில் ஈடுபடுவதற்காக ஆண்மக்கள் தேவைப்பட்டார்கள். போரைத் தூண்டுவதற்காகவும், தொடர்வதற்காகவும், ஊக்குவிப்பதற்காகவும் கவிஞர்கள் தேவைப்பட்டனர். இதனால் ஆண் குழந்தை களுக்காகவும், கவிஞர்களுக்காகவும் கோத்திரம் விழா எடுத்துக் கொண்டாடியது. ஆண்கள் சிறுவயது முதலே போர்ப் பயிற்சி பெறுவது மரபாக இருந்து வந்தது.

### சமயம்

அன்றைய அறபு நாட்டில், மக்களை நெறிப்படுத்தக்கூடிய சமயம் எதுவும் காணப்படவில்லை. சில சடங்குகளே சமயத்தின் பெயரால் இடம்பெற்று வந்தன. மக்காவில், ஒரே இறைவனை வணங்குவதற்கு இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களால் கட் டப்பட்ட கஃபா இருந்தது. எனினும் அதன் தூய்மை களங்கப்பட்டிருந்தது. அங்கு சிலைகள் பூசிக்கப்பட்டன. ஆண்களும் பெண்களும் நிர்வாணமாக தவாப் செய்தனர். அவர்கள் முஷ்ரிக்களாகவே வாழ்ந்தனர். அவர்களின் இறை நம்பிக்கை போலியானதாக இருந்தது. அல்லாஹ்வை இரட்சகன் (ரப்பு) என நம்பினர். ஆனால் இறைவன் (இலாஹ்) என நம்பவில்லை.

'வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு ஆகாரம் கொடுப்பவன் யார்? (உங்களுடைய) கேள்விக்கும், பார்வைக்கும் உரிமையாளன் யார்? இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? (உலகில்) சகல காரியங்களையும் திட்டமிட்டு நிகழ்த்துபவன் யார் என்று (நபியே நீர்) கேட்பீராக. அதற்கவர்கள் அல்லாஹ் என்று கூறுவார்கள். அவ்வாறாயின் அவனுக்கு நீங்கள் பயப்பட வேண்டாமா என்று கேட்பீராக' (10:31) என்ற அல்குர்ஆன் வசனம் இதனை சுட்டிக் காட்டுகின்றது.

ஆப்ரஹா கஃபாவை இடிக்க வந்த போது, கஃபாவின் இறைவன் அதனைப் பார்த்துக் கொள்வான் என்ற குறைஷியரின் உறுதிப்பாடும் இதனையே எடுத்துக் காட் டுகின்றது. இவர்கள் இறைவனை அடைவதற்கான தரகர்களாகவே தமது குட்டித்

தெய்வங்களைக் கருதினர். இதனை 'அவர்கள் அந்த தெய்வங்கள் எங்களை அல்லாஹ்வுக்கு மிக்க சமீபமாக்கி வைக்கும் என்பதற்காகவேயன்றி இவைகளை நாம் வணங்கவில்லை' (என்று கூறுகின்றனர்) (39:3) என்று அல்குர்ஆன் சுட்டிக் காட்டுகின்றது.

ஆண்டு தோறும் புனித மாதங்களில் கஃபாவுக்கு யாத்திரீகர்கள் வருவர். இதனால் அது விழாக்கோலம் பூண்டது. அக் காலத்தில் சந்தைகள் கூடின. அங்கு மல்யுத்தப் போட்டிகளும், கவிதைப் போட்டிகளும் இடம் பெற்றன. போட்டியில் வெற்றி பெறும் கவிதைகள் கஃபாவில் தொங்கவிடப்பட்டன. கவிஞர்கள் கௌரவிக்கப்பட்டனர். இதனால் அறபு மொழி இலக்கிய வளம் பெற்றது. அவை மக்களால் பிற்காலத்தில் எழுத்து உருவில் தொகுக்கப்பட்டன. 'ஸப்உ முஅல்லகாத்' எனும் தொகுப்பு அவற்றில் முக்கியமானது.

## குடும்பம்

ஆண் பெண்களுக்கிடையே சமநிலை காணப்படாததால் அங்கு ஒழுங்கான குடும்ப அமைப்பு காணப்படவில்லை. திருமண ஒழுங்குமுறை கூட சிக்கலாகவே இருந்தது. மேல்மட்ட கோத்திரங்களில் 'நிகாஹ் ஸஹீஹ்' எனப்பட்ட நேரிய வழியிலான மணமுறை காணப்பட்டது. அங்கு பெண்கள் கௌரவமாக நடத்தப்பட்டனர். ஆனால் ஏனைய கோத்திரங்களில் பல்வேறு முறையான மண உறவுகள் காணப்பட்டன.

ஆண்கள் பல மனைவியரை வைத்திருப்பது போல, பெண்களும் பல ஆண்களை வைத்திருந்தனர். தந்தையின் மனைவியை தந்தை இறந்த பின் மகன் மணமுடித்தான். முத்ஆ எனப்படும் தற்காலிக மணமுறையும் காணப்பட்டது. பிள்ளைகளின் தந்தையரை தாய்மார்களே உறுதிப்படுத்தினர். நாடோடிகளாக வாழ்ந்ததால் அவர்களிடம் நாகரிக வாழ்வு முறையைக் காணமுடியவில்லை.

அங்கு பல அநியாயங்கள் இடம்பெற்றன. கோத்திரங்களை மையமாக வைத்து மக்களிடையே ஏற்றத்தாழ்வு காணப்பட்டது. போர்க் கைதிகளாக பிடிபடுவோரும், பணங்கொடுத்து வாங்கப்பட்டோரும் அடிமைகளாக நடத்தப்பட்டனர். அவர்கள் எசமானர்களுக்கு உழைத்துக் கொடுக்க வேண்டிய நிலை இருந்தது. ஆனால் அவர்களுக்கு எந்த உரிமையும் வழங்கப்படவில்லை.

மேலும் ஆண் பெண்களுக்கிடையே ஏற்றத்தாழ்வு காணப்பட்டது. பெரும்பாலும் பெண்கள் உரிமை இழந்த நிலையில் காணப்பட்டனர். விறகு பொறுக்குதல், உணவு சமைத்தல், நீர் சுமந்து வருதல், பால் கறத்தல், நூல் சுற்றுதல், பிள்ளை பராமரித்தல் போன்ற பணிகளில் அவர்கள் ஈடுபடுத்தப்பட்டனர். சில கோத்திரங்களில் பெண் குழந்தைகளை உயிருடன் புதைக்கும் வழக்கமும் இருந்து வந்தது.

## நடத்தைகள்

கொலை, மது, வட்டி, விபசாரம், பழிக்குப் பழி, வழிப்பறிக் கொள்ளை போன்ற குற்றச் செயல்கள் அங்கு மலிந்து காணப்பட்டன. ஆனால் அவை குற்றச்செயல்களாகவன்றி கௌரவத்திற்குரிய செயல்களாகவே கருதப்பட்டு வந்தன. தான் இறந்த பின் சூதாடவோ மது அருந்தவோ தெரியாதவனை மணமுடிக்க வேண்டாம் என்று மனைவிக்கு உபதேசம்

செய்ததாக ஒரு செய்தி பதியப்பட்டுள்ளது. மிகக்குறைவான மக்களே இப்பாவங்களிலிருந்து விலகி நின்றனர். அதே வேளை, மொழிப்புலமை, சுதந்திர வேட்கை, வாக்கு மீறாமை, விருந்தோம்பல், வீரம், எளிமை போன்ற நல்ல பண்புகளும் அவர்களிடம் காணப்பட்டன. அவை பின்னர் இஸ்லாத்தின் வளர்ச்சிக்கு சாதகமாக அமைந்தன. இவ்வாறான சமூக நிலையிலேயே இஸ்லாம் அறிமுகப்படுத்தப்பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அச்சமூகத்தையே அல்லாஹ்வின் வழிகாட்டலுக்கமைய ஒரு முன்மாதிரிமிக்க சமூகமாக மாற்றி அமைத்தார்கள்.

**பயிற்சி**

1. பின்வரும் சொற்களின் கருத்தை விளக்குக.

   அ) ஜாஹிலிய்யா

   ஆ) கபீலா

   இ) அஸபிய்யா

   ஈ) ஷெய்கு

   உ) முத்ஆ

2. இஸ்லாத்துக்கு முற்பட்ட கால அரேபியாவில் நாடோடி வாழ்க்கை இடம் பெற்றதற்கான காரணங்களை எடுத்துக் காட்டுக.

3. அக்காலத்தில் ஆண் குழந்தை பிறந்தால் விழா கொண்டாடப்பட்டதற்கான காரணங்களைக் கண்டறிந்து எழுதுக.

4. அக்காலத்தில் கவிஞர்கள் கௌரவிக்கப்பட்டமைக்கான காரணங்களைத் தருக.

5. அன்றைய அறபிகளிடம் காணப்பட்ட நற்பண்புகளையும், மோசமான நடத்தைகளையும் அட்டவணைப்படுத்துக.

# 19

# நபி صلى الله عليه وسلم அவர்களின் தஃவாவும் சவால்களும்



மக்காவின் பழைய தோற்றம்

*நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களின் தலையாய பணி அல்லாஹ்வின்பால் மக்களை அழைப்பதாக இருந்தது. இது தஃவா என அழைக்கப்படுகின்றது. நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள், இப்பணியை எடுத்த எடுப்பில் ஆரம்பிக்கவில்லை. அவர் தனது 40 ஆவது வயதை அடைந்ததன் பின்னர், அல்லாஹ்வின் கட்டளைக்கமையவே இப்பணியை ஆரம்பித்தார்கள். இதனை நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் வாழ்வில் ஏற்பட்ட பெரும் மாற்றம் ஒன்றாகக் கண்டு கொள்ள முடியும்.*

*நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முதல் வஹி அதிர்ச்சியைக் கொடுத்தது. அது பற்றித் தெளிவு பெற்றாலும் அந்த நிலை முற்றாக நீங்கிவிடவில்லை. இவ்வேளையில்தான், வஹியின் அதிர்ச்சியில் 'போர்வை போர்த்திக் கொண்டிருக்கும் (நபியே!) நீங்கள் எழுந்து நின்று (மனிதர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள்' (74:1-2) என்று ஏனைய மனிதர்களுக்கு அவர்களின் தூதை எடுத்துக் கூறுமாறு (தஃவா செய்யுமாறு) அல்லாஹ் கட்டளை பிறப்பித்தான்.*

*இதனை ஏற்றுக்கொண்ட நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள், முதலில் தனது குடும்பத்தவர்களுக்கும், நண்பர்களுக்கும் அதனைச் சொன்னார்கள். அடுத்து தனது குடும்பத்தவர்களுக்கு விருந்துபசாரம் செய்து தனக்குக் கிடைத்த வஹி பற்றித் தெளிவு படுத்தினார்கள். மேலும் தனக்கு ஒத்துழைப்பு வழங்குமாறு வேண்டுகோள்*

விடுத்தார்கள். பின்னர் ஸபா குன்றில் ஏறி பொதுமக்களைக் கூவி அழைத்து தனது தூதை எத்தி வைத்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்வைத்த தூதுச் செய்தி, மக்காவில் வாழ்ந்த குறைஷிகளுக்கும் மற்றவர்களுக்கும் புதிதாகவும், கசப்பாகவும் தெரிந்தது. தமது வழிபாட்டு முறைக்கு நேர் எதிரானதாகவும், தமது செல்வாக்கை இழக்கச் செய்வதாகவும் குறைஷியர் அதனைக் கண்டனர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முதல் மூன்று ஆண்டுகளும் இரகசியமாகவே தஃவாச் செய்தார்கள். அவ்வேளை, குடும்பத்தில் ஒரு பகுதியாரும், நண்பர்களில் ஒரு பகுதியாரும், சமூகத்தில் நல்லவர்களாகக் கணிக்கப்பட்ட சிலரும், ஹனீப் (ஜாஹிலிய்யாக் காலத்தில் இணைவைப்பில் ஈடுபடாதவர்கள்) எனப்பட்டோரும் எசமான்களால் துன்புறுத்தப்பட்ட அடிமைகள் சிலரும் இஸ்லாத்தில் இணைந்து கொண்டார்கள். அவர்களுக்கு அர்கம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வீட்டில் கல்வியும் ஆன்மீகப் பயிற்சியும் (தர்பியா) வழங்கப்பட்டன. இவ் ஆரம்பப் பள்ளிக்கூடம் ‘தாருல் அர்கம்’ எனும் பெயரில் இன்றும் நினைவுபடுத்தப்படுகின்றது.

தொடர்ந்து, பகிரங்க பிரசாரத்தில் ஈடுபட்டபோது பல சவால்களை எதிர்கொண்டார்கள். அபூலஹப், அபூஜஹ்ல் முதலானோர் தலைமையில் எதிர்ப்புக் குழுவினர் களம் இறங்கினர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பொய்யன், சூனியக்காரன், பைத்தியக்காரன், கவிஞன், சந்ததியற்றவன் முதலான சுடு வார்த்தைகளால் வதைத்தனர். அவர் பக்கம் கவனம் திருப்ப வேண்டாம் எனவும் அவர் போதிக்கும் மார்க்கத்தை ஏற்க வேண்டாம் எனவும் பொதுமக்களை எச்சரிக்கை செய்தனர்.

இஸ்லாம் படிப்படியாக வளர்ந்தது. எதிரிகள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு உடலியல் ரீதியான இம்சைகளை வழங்க ஆரம்பித்தனர். அவர்கள் நடக்கும் பாதையில் முட்களைப் பரப்பினர். கழுத்தைத் திருகினர். ஒட்டகத்தின் அழுகிய குடலை ஸுஜூதில் இருக்கும்போது மாலையாக இட்டனர். முதலில் சிறு கற்களால் அடித்தார்கள். பின்னர் காயப்பட அடிக்கத் தொடங்கினார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மட்டுமன்றி, அவர்களை நபியாக ஏற்று வாழ்ந்த முஸ்லிம்களையும் ஆண் பெண் பேதமின்றி கொச்சைப்படுத்தினர். அடிமைகள் கொடூரமாக வஞ்சிக்கப்பட்டனர். சுதந்திர பிரசைகள் குடும்ப உறுப்பினர்களாலும், வேறு பலராலும் இம்சிக்கப்பட்டனர். அவ்வேளை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் போன்றே முஸ்லிம்களும் எதிர்த் தாக்குதல் நடத்தாது பொறுமையாக இருந்தனர்.

குறைஷிகளின் கொடுமைகளை சகிக்கவோ, எதிர்த்தாக்குதல் நடத்தவோ முடியாத நிலையில், நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் தோழர்களை ஹபஷாவுக்கு (எதியோப்பியா) அனுப்பி வைத்தார்கள். முதலில் நுபுவ்வத் 5 இல் சுமார் பதினைவரும் அடுத்து நுபுவ்வத் 7 இல் நூறு பேருமாக இரண்டு கட்டங்களில் அவர்கள் வெளியேறினார்கள். இதனைக் கண்டு சினம் கொண்ட குறைஷியர் ஹபஷா சென்று அவர்களை மக்காவுக்கு மீண்டும் கொண்டுவர முயற்சித்தனர். எனினும் அம்முயற்சி வெற்றியளிக்கவில்லை. நேர்மையான ஆட்சியாளரான நஜ்ஜாஷி முஸ்லிம்களுக்குப்

பாதுகாப்பு வழங்கினார். தொடர்ந்து வந்த நாட்களில் குறைஷியர் எதிர்ப்பு பெருகிய போதிலும், இஸ்லாத்தை ஏற்போரின் எண்ணிக்கையும் அதிகரித்தது. ஹம்ஸா, உமர் ரழியல்லாஹு அன்ஹுமா ஆகியோர் இஸ்லாத்தை ஏற்றதால் முஸ்லிம்கள் ஓரளவு தைரியம் பெற்றனர். எனினும் குறைஷியரின் கொடுமைகள் தணியவில்லை. கொலை அச்சுறுத்தல்களும் தொடர்ந்து கொண்டிருந்தன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பாதுகாப்பதில் அவரது பெரிய தந்தை அபூதாலிப் அதிக பங்கெடுத்துக் கொண்டார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிரசாரத்தைத் தடைசெய்யுமாறும் இன்றேல் அவர்களைத் தம்மிடம் ஒப்படைக்குமாறும் குறைஷியர் கேட்டுக் கொண்டனர். அவர் அவற்றைத் தட்டிக் கழித்தார். தொடர்ந்து மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளைத் தூண்டி அவற்றின் மூலம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் திசை திருப்பலாம் என நப்பாசை கொண்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நேரடியாக அணுகி பிரசாரத்தை நிறுத்துமாறு வேண்டுகோள் விடுத்தனர். இரு பகுதியினரதும் வழிபாட்டில் இணக்கம் காண நெருங்கினர். இவை எதற்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இசையவில்லை.

இதனால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பம் சார்ந்த, ஹாஷிமிகளையும் முத்தலிபுகளையும் சமூக பகிஷ்கரிப்புக்கு உள்ளாக்கினர். கஃபாவில் தடையுத்தரவுப் பத்திரத்தைத் தொங்கவிட்டனர். ஷிஃபு அபீதாலிப் எனும் பள்ளத்தாக்கில் அவர்கள் மூன்று ஆண்டுகளாக ஒதுக்கி வைக்கப்பட்டனர். குடிப்பதற்கு நீரோ, உண்பதற்கு உணவோ இன்றி அவர்கள் கஷ்டப்பட்டனர். சிறு குழந்தைகளின் அலறல் நீண்ட தூரத்துக்குக் கேட்டது. இதனைச் சகிக்க முடியாத சிலர் இரகசியமாக உதவிக் கொண்டிருந்தனர். அவ்வாறு உதவுவோர் கண்டுபிடிக்கப்பட்டால் தண்டிக்கப்பட்டனர். இதே நிலையில் இவர்களின் பரிதாப நிலையைக் கண்ட சில வாலிபர்கள், கஃபாவில் தொங்கவிடப்பட்ட பத்திரத்தைக் கிழித்து எறிந்தனர். இதனால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஏனையோரும் விடுதலை பெற்றனர்.

விடுதலையான குறுகிய காலத்தில் மற்றொரு அதிர்ச்சி எதிர்கொண்டது. அதுவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பக்கபலமாக நின்ற அபூதாலிப் அவர்களும் கதீஜா ரழியல்லாஹு அன்ஹா அவர்களும் மரணமடைந்தனர். இது குறைஷிகளுக்கு வாய்ப்பாக அமைந்தது. முன்னரிலும் கடுமையான சோதனைகளை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதிர்நோக்கினார்கள். எனவே மக்காவிலிருந்து வெளியேறி தாயிப் சென்றார்கள். அங்கு கோத்திரத் தலைவர்களிடம் தாம் அல்லாஹ்வின் தூதர் என அறிமுகப்படுத்தினார்கள். அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஏளனப்படுத்தினர். குண்டர்களை ஏவி கல்லால் எறிந்து தூற்றினர். அவ்வேளை கூட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த மக்களின் நன்மைக்காக பிரார்த்தித்தார்கள். வேறு வழியின்றி மக்காவுக்கு மீண்டபோது முத்இம் என்பாரின் அடைக்கலத்தில் வாழ வேண்டியேற்பட்டது.

இவ்வேளையில்தான் மதீனாவிலிருந்து (யஸ்ரிப்) மக்கா வந்த யாத்திரிகள் சிலரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அகபா எனுமிடத்தில் சந்தித்தார்கள். தான் அல்லாஹ்வின் தூதர் என அவர்களிடம் அறிமுகப்படுத்தினார்கள்.

ஏற்கனவே யூதர்கள் மூலமாகக் கடைசி நபி பற்றிய செய்தி அவர்களுக்குக் கிடைத்திருந்தமையால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னதை ஏற்றுக்கொண்டார்கள். யஸ்ரிப் மீண்ட அவர்கள், தமது மக்களிடம் இந்த நற்செய்தியை எடுத்துரைத்தார்கள். இதன்பின், அடுத்த யாத்திரைக் காலத்தில் பன்னிருவர் மக்கா வந்து இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உறுதிமொழியிலும் பங்கு கொண்டனர். இவர்களுடன் யஸ்ரிபில் இஸ்லாத்தைப் போதிப்பதற்காக முஸ்அப் இப்னு உமைர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அனுப்பி வைக்கப்பட்டார்கள். அடுத்த யாத்திரைக் காலத்தில் நுபுவ்வத் 12 இல் யஸ்ரிப் வாசிகள் 72 பேர் மக்கா வந்தனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை சந்தித்ததோடு முன்னைய உறுதிமொழியைப் புதுப்பித்துக் கொண்டனர். இது 'பைஅதுல் அகபா 2' (இரண்டாம் அகபா உடன்படிக்கை) என வழங்கப்படுகின்றது. இவ்வேளையிலேயே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு யஸ்ரிபுக்கு வருமாறு அழைப்பு விடுக்கப்பட்டது.

அவர்களின் அழைப்புக்கேற்ப, முதலில் முஸ்லிம்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்றார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அவர்களோடு ஹிஜ்ரத் சென்றுவிட்டால் தமக்கு ஆபத்து வருமென குறைஷியர் அஞ்சினர். எனவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கொலை செய்யத் தீர்மானித்தனர். அவரது வீட்டைச் சுற்றி நின்ற வேளையிலேயே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வீட்டை விட்டு பாதுகாப்பாக வெளியேறினார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுமாக பல சோதனைகளைக் கடந்து மதீனாவை அடைந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிரவேசத்தோடு யஸ்ரிப், 'மதீனதுன் நபி' (நபியின் நகரம்) எனப்பட்டது. இங்கு மக்கா காலகட்டத்தில் எதிர்நோக்காத புதிய சவால்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதிர்கொண்டார்கள். குறைஷியர் மதீனாவுக்குச் சென்ற நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையோ முஸ்லிம்களையோ நிம்மதியாக இருக்கவிடவில்லை. மதீனாவில் வாழ்ந்த யூதர்களை முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டிவிட்டார்கள். மதீனாவிலிருந்து யாத்திரை வந்தவர்களை எச்சரித்தார்கள். மதீனாவின் தெற்கெல்லையில் தாக்குதல் நடத்தினார்கள்.

கால்நடைகளைக் கவர்ந்தார்கள். தோட்டங்களுக்குத் தீ வைத்தார்கள். இறுதியாக முஸ்லிம்களுடன் போரிடுவதற்குப் படையெடுத்து வந்தார்கள்.

முஸ்லிம்கள் எந்தத் தயார் நிலையிலும் இல்லாத மரபு ரீதியான போர்ப் பயிற்சியை வைத்து குறைஷிகளுடன் போராடினர். எனினும் படைப்பலம் கூடியிருந்த குறைஷியர் தோல்வியுற்றனர். இங்கு முஸ்லிம்களுக்கு மலக்குகளின் உதவி கிடைத்தது. இதனால் முஸ்லிம்களுக்கு அல்லாஹ் மீதான விசுவாசம் அதிகரித்தது. இவ்வாறான மூன்று போராட்டங்களின் பின் (பத்ர், உஹத், கந்தக்) ஹிஜ்ரி 6 இல் இரு சாராரும் ஹுதைபியா என்ற இடத்தில் சமாதான உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டனர். எனினும் குறுகிய காலத்தில் குறைஷியர் அதனை முறித்தனர். தொடர்ந்து நடந்த நிகழ்வுகளின் பின்னர் மக்கா முஸ்லிம்களின் கட்டுப்பாட்டில் வந்தது. இஸ்லாமும் வேகமாகப் பரவத் தொடங்கியது.

ஹிஜ்ரி முதலாம் ஆண்டில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் யூதர்களுடன் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். எனினும் அவர்கள் குறைஷியருடன் சேர்ந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எதிராக சதி செய்ததுடன் உடன்படிக்கைக்கு மாறாகவும் நடந்துகொண்டார்கள். அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவிலிருந்து நாடு கடத்தினார்கள். மதீனா அமைதி அடைந்தது.

இதன் பின்னர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாத்தின் தூதை சுற்றுவட்டாரத்திலுள்ள சிற்றரசுகளுக்கும், பேரரசுகளுக்கும் கடிதம் மூலம் எத்தி வைத்தார்கள். விளைவாகப் போராட்டங்கள் பல ஏற்பட்டதுடன் அரபு நாட்டுக்கு வெளியே இஸ்லாம் பரவவும் ஆரம்பித்தது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவின் பின் கலீபாக்கள் காலத்தில் இஸ்லாமிய சாம்ராஜ்யம் விரிவடைந்தது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் மேல் சுமத்தப்பட்டிருந்த இறை பணியைச் சிறப்பாகவே முன்னெடுத்தார்கள். எந்த மக்களால் இம்சிக்கப்பட்டாரோ அதே மக்கள் தன் உயிரினும் மேலானதாகக் கருதுமளவுக்கு மக்களின் உள்ளங்களில் இடம்பிடித்துக்கொண்டார்கள். தான் எதிர்கொண்ட சவால்களைப் பொறுமை கொண்டும், பொருத்தமான முறையிலும் அணுகி இஸ்லாத்தைச் சர்வதேச சக்தியாக மாற்றியமைத்தார்கள்.

### பயிற்சி

1. சுருக்கமான விடை தருக

   அ) தஃவாவுக்கான முதற் கட்டளை எந்த ஸூறாவில் இடம்பெற்றுள்ளது?

   ஆ) குறைஷியர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தஃவாவை எதிர்த்ததற்கான இரண்டு காரணங்களைக் குறிப்பிடுக.

   இ) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை எதிர்த்தோர் அவர்களுக்கு எவ்வாறான பெயர்களை சூட்டினர்?

   ஈ) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை எதிர்த்த இருவரின் பெயர்களைக் குறிப்பிடுக.

   உ) முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பாக இருந்த ஒரு பிரமுகரின் பெயரைத் தருக.

   ஊ) மதீனாவின் பழைய பெயர் யாது?

   எ) பைஅதுல் அகபா என்றால் என்ன?

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிரசாரத்தைத் தடுக்க குறைஷியர் கையாண்ட வழிமுறைகளை எடுத்துக்காட்டுக.

3. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், ஹாஷிமிகளும் சமூக பகிஷ்கரிப்புக்கு உள்ளாக்கப்பட்ட முறையினை விளக்குக.

4. குறைஷியர் முஸ்லிம்களை ஹபஷாவிலிருந்து திருப்பி அழைக்க எடுத்த முயற்சியை சுருக்கமாகத் தருக.

5. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சவால்களை எவ்வாறு எதிர்கொண்டார்கள்?



# 20

# ஸீறாவின் முக்கியத்துவம்



ஸீறா என்பது முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு தனிச் சொல்லாகும். இச் சொல்லின் அடிப்படையில் ஸீறா தனியானதொரு கலையாக பயிலப்பட்டு, எழுதப்பட்டு வருகின்றது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைவருக்கும் பொதுவான ஒரு வழிகாட்டியாவார். இதனை '(நபியே) நாம் உம்மை (இவ்வுலகிலுள்ள) சகல மனிதர்களுக்கும் நன்மாராயம் கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பி வைத்திருக்கிறோம். எனினும் மனிதரில் பெரும்பாலானோர் (இதனை) அறிந்து கொள்ளவில்லை' (34:28) என அல்குர்ஆன் சுட்டிக்காட்டுகின்றது.

மேலும் அல்லாஹ் 'ரப்புல் ஆலமீனாக' - 'அகிலங்களின் இரட்சகனாக' (1:1) இருப்பது போல, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'ரஹ்மதன் லில் ஆலமீனாக' - 'அகிலங்களின் அருட் கொடையாக' (21:107) இருக்கின்றார்கள். அல்லாஹ் 'ரப்புந்நாஸாக' - 'மனிதர்களின் இரட்சகனாக' (114:1) இருப்பது போல, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'காப்பதுன் லின்நாஸாக' - 'மனித சமுதாயம் முழுவதற்குமான' (நபியாக) (34:28) இருக்கிறார்கள். இந்த வகையில் கடந்த பதினான்கு நூற்றாண்டுகளுக்கு மேலாக அவர்களது ஸீறா படிக்கப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வருகின்றது. இதற்குப் பல காரணங்களைக் குறிப்பிடலாம்.

1. அவர் உலகின் இறுதித் தூதுவராக இருந்தமையும் அவருக்குப் பின்னர் வேறு தூதுவர்கள் வராமையும். (எனவே, அவரது தூது பாதுகாக்கப்பட வேண்டும்)
2. அவரை ஏற்று தமது வாழ்வை நெறிப்படுத்திக் கொண்ட மக்கள் அவரது காலம் முதல் இன்று வரையும் இருந்து வருகின்றமை.
3. அவரது வரலாறு மிகச் சரியாக எழுதப்பட்டும் பாதுகாக்கப்பட்டும் வந்துள்ளமை. ஒவ்வொரு காலகட்டத்திலும் அவரது சரிதையைக் களங்கப் படுத்தாமல் பாதுகாப்பதற்கான முயற்சிகள் எடுக்கப்பட்டு வந்துள்ளமை.
4. அவரது வரலாறு பற்றிய நூல்கள், பொதுவாக எல்லா மொழிகளிலும் முஸ்லிம்களால் மட்டுமின்றி முஸ்லிம் அல்லாதவர்களாலும் பல்வேறு கோணங்களில் எழுதப்பட்டுள்ளமை.




நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களது ஸீறா களங்கமற்றது. அவர்கள் வாழும் போதே ஸஹாபாக்கள் அவர்களின் உருவமைப்பு, அசைவு, போதனை, செயற்பாடு, விருப்பு - வெறுப்பு போன்றவற்றை மிக நுணுக்கமாக அவதானித்தார்கள். பிற்கால சந்ததியினருக்கு அவற்றைச் சாட்சிகளோடு ஒப்பு வித்தார்கள். அவர்களின் வாழ்வு பற்றிய செய்திகளை அறிய முற்பட்டார்கள். வீடு வீடாகச் சென்று நேரடியாகக் கண்டவரிடம் விளக்கம் பெற்றார்கள். தொடர்ந்து அந்த செய்தியை சொன்னவர் பற்றி நன்கு பரிசீலனை செய்தார்கள்.

நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களின் தோழர்களும், தாபியீன்களும், அடுத்துவந்த தபஉத் தாபிஈன்களும் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம்அவர்களின் வரலாற்றைப் பாதுகாப்பதற்காக அசாதாரண முயற்சிகளை மேற்கொண்டார்கள். இதன் காரணமாக, நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களை அவர் வாழ்ந்த காலத்து மக்கள் அருகில் நின்று பார்ப்பது போல நாமும் பார்க்க கூடிய வகையில் அவை தொகுக்கப்பட்டுள்ளன. செவி வழியாகவும், மனனமிட்டும், கற்றும் வந்த ஸீறாவை முஹம்மத் பின் இஸ்ஹாக் (ஹி 151) என்பார் முதலில் எழுதினார். ‘ஸீறத் ரஸூலுல்லாஹ்’ என்ற பெயரில் அது வழங்கப்பட்டது. அந்த நூல் பிற்காலத்தில் கிடைக்கவில்லை.

எனினும் அவரைத் தொடர்ந்து அந்நூலை மேற்கோள்காட்டி முஹம்மத் அப்துல் மலிக் பின் ஹிஷாம் (ஹி:218) என்பவரால் எழுதப்பட்ட நூல் இன்றும் கிடைக்கின்றது. இவ்விரு நூல்களுமே ஸீறாவுக்கான முதல் நூல்களாகக் கொள்ளப்படுகின்றன.

நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள், (தமது) ஸீறாவைத் தவறாக அறிமுகப்படுத்தக் கூடாது என்பதற்காக தோழர்களை எச்சரிக்கை செய்தார்கள். ‘எவர் என் மீது பொய்யொன்றை வேண்டுமென்றே இட்டுக்கட்டுகிறாரோ அவர் தனது இருப்பிடத்தை நரகில் தேடிக் கொள்ளட்டும்’ (புகாரி) என்றார்கள். ‘மர்யமின் மகன் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை மிகைப்படுத்திப் புகழ்ந்தது போல என்னை மிகைப்படுத்தி புகழாதீர்கள். நான் ஒரு அடியான். என்னை அல்லாஹ்வின் அடியான் என்றும் அவனுடைய தூதர் என்றும் கூறுங்கள்’ (புகாரி) என்றார்கள். இதனால்தான் அவரது ஸீறா சரியாகவும் துல்லியமாகவும், மாசுபடாமலும் எழுதப்பட்டும், வாசிக்கப்பட்டும், போதிக்கப்பட்டும், நடைமுறைப்படுத்தப்பட்டும் வருகின்றது.

எனினும் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் எம்மைப் போன்ற சராசரி மனிதரென எவரும் கணிக்க முடியாது. அவர் மனிதராக இருப்பினும் மனிதரில் புனிதராக முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்டவராக பல்வேறு சிறப்பம்சங்கள் பொதிந்தவராக காணப்படுகின்றார்கள். முஸ்லிம்களைப் பொறுத்தவரை அவரை

நேசிப்பது ஈமானுடன் தொடர்புடைய விடயமாகும். *'நம்பிக்கையாளர்களுக்கு அவர்களுடைய உயிரைவிட (நமது தூதரான) நபிதான் மிக்க பிரதானமானவர்' (33:6)*

*'விசுவாசிகளே, உங்களிலிருந்து நிச்சயமாக (நம்முடைய) ஒரு தூதர் வந்திருக்கிறார். (உங்களுக்கு யாதொரு துன்பம் ஏற்பட்டு) நீங்கள் கஷ்டத்திற்குள்ளாகிவிட்டால் (அது) அவருக்கு மிக்க வருத்தமாகவே இருக்கும். (அவ்வளவு தூரம் உங்கள் மீது அன்புடையவர்). அன்றி உங்(கள் நன்மை)களைப் பெரிதும் விரும்புகிறவராகவும் விசுவாசி(களாகிய உங்)கள் மீது மிக்க அன்பும் கிருபையும் உடையவராகவும் இருக்கின்றார்' (9:128)*

*'எவர் அவரை விசுவாசித்து அவரைப் பலப்படுத்தி, அவருக்கு உதவி செய்து, அவர் மீது அருளப்பட்ட ஒளிமிக்க (வேதத்)தை பின்பற்றுகிறார்களோ, அவர்கள் தான் சித்தி பெற்றவர்கள்' (7:157)* முதலான ஆயத்துக்கள் எமக்கும் அவர்களுக்குமிடையிலான உறவைச் சுட்டிக்காட்டுகின்றன.

ஆதலால், 'அவர்களது வாழ்வுமுறையைக் கற்பது அவசியமாகும். அவ்வாறு கற்கும்போது படைவீரன் தளபதியையும், மாணவன் ஆசிரியனையும், பின்தொடர்வோர் தலைவரையும் நோக்குவது போல ஸீறாவைப் படிக்க வேண்டும். இருவரும் உணர்வுகளால் சங்கமிக்க வேண்டும். அதன் ஞானத்தை விளங்கி தூய்மையான அறிவுபூர்வமான நடுநிலையான வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும்' என ஷெய்க் முஹம்மத் அல் கஸ்ஸாலி அவர்கள் (1917 - 1996) குறிப்பிடுகின்றார்.

மனிதர்கள் யாவரும் ஒரே மாதிரியாக இருந்தாலும், அவர்களின் இயல்புகள், குண நலன்கள், நோக்குகள், செயற்பாடுகள் வேறுபட்டதாக இருக்கலாம். எனினும் அவர்கள் ஒவ்வொருவருக்குமான முன்மாதிரி ஸீறாவில் காணப்படுகின்றது.

*'நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடத்தில் அழகிய முன்மாதிரி இருக்கின்றது' (33:21)* என அல்குர்ஆன் இதனை குறித்துக் காட்டுகின்றது. அந்த முன்மாதிரி, குறிப்பிட்ட காலத்துக்கோ, இடத்துக்கோ, இனத்துக்கோ மட்டுப்படுத்தப்பட்டதல்ல. அனைவராலும் பின்பற்றத் தக்கதாகும்.

'வறுமையில் உழல்பவராகவோ, வசதி பெற்றவராகவோ, ஆட்சியாளராகவோ, ஆளப்படுபவராகவோ, கற்றுக் கொள்பவராகவோ, வெற்றி வீரராகவோ, வேதனையால் சூழப்பட்டவராகவோ, தொல்லைகளால் தொடர்பவராகவோ யாராக இருந்தாலும்,



எத்தகைய வாழ்க்கை முறையைக் கொண்டவராக இருந்தாலும் அவர்கள் அனைவருக்குமான முன்மாதிரி ஸீறாவில் காணப்படுகின்றது' என செய்யித் சுலைமான் நத்வி குறிப்பிடுகின்றார்.

இதனால்தான் ஸீறாவைத் திறந்த மனதுடன் படித்தவர்கள், அதனால் ஈர்க்கப்பட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அல்லாஹ்வின் தூதராக ஏற்றுக்கொண்டு விசுவாசியாக மாறிய பலரை வரலாறு பதிந்து வைத்துள்ளது.

மற்றொரு கண்ணோட்டத்தில் நோக்கினால் ஸீறாவானது, இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களின் ஊடகமாகும். அல்குர்ஆனாக இருந்தாலும் சரி, ஸுன்னாவாக இருந்தாலும் சரி அவற்றை எமக்குத் தந்தவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே ஆவார். அல்லாஹ் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூலம் அவர்களுக்கு அல்குர்ஆனை இறக்கினான். அதுவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்வாகவும், வாக்காகவும் அமைந்திருக்கிறது. இவ்விரண்டையும் வைத்தே இஸ்லாமிய வாழ்க்கை முறை வகுக்கப்பட்டுள்ளது. எனவேதான், மக்கள் வழி தவறாமல் இருப்பதற்காக அவ்விரண்டையும் விட்டுச் செல்வதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதிப் பிரசங்கத்தில் எடுத்துக் கூறினார்கள். இந்த வகையில் இஸ்லாமிய வாழ்க்கைமுறையின் நடைமுறைக்கு உதாரணமாக ஸீறா அமைந்துள்ளது எனக் குறிப்பிடலாம்.

ஏனையோரது வாழ்வு மரணத்துடன் முடிவடைய, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்வு இன்றும் நிலைக்கின்றது. ஏனெனில் ஏனையோர் வரலாற்றினால் உருவாக்கப்பட்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோ வரலாற்றையே உருவாக்கிவிட்டுச் சென்றுள்ளார்கள்.

**பயிற்சி**

1. பின்வரும் அரபுச் சொற்களின் பொருளைத் தருக.

| | | |
|---|---|---|
| (அ) ஸீறா | (ஆ) ரப்புல் ஆலமீன் | (இ) ஸஹாபா |
| (ஈ) ரப்புன் நாஸ் | (உ) தாபிஈ | (ஊ) காப்பதன் லின் நாஸ் |
| (எ) தபஉத் தாபிஈன்கள் | (ஏ) ரஹ்மதுல் லில் ஆலமீன் | |

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஸீறா எல்லா மக்களுக்கும் பொதுவானது என்பதற்கான ஆதாரங்களை எடுத்துக்காட்டுக.
3. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஸீறா மாசுபடாமல் இருப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட வழிமுறைகளைப் பட்டியற்படுத்திக் காட்டுக.
4. ஸீறாவைக் கற்க வேண்டுமென்பதற்கான காரணங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுக
5. நீர் அறிந்த ஸீறா நூல்களின் அட்டவணை ஒன்றைத் தயாரிக்குக.

# 21



# பொருளாதாரம் தொடர்பான இஸ்லாமியக் கண்ணோட்டம்



இஸ்லாம் மனித வாழ்வின் சகல துறைக்குமான சீரிய வழிகாட்டலைக் கொண்ட மார்க்கம் என்ற வகையில் அது பொருளாதாரம் பற்றிய உன்னத வழிகாட்டலைத் தந்துள்ளது.

பொருளாதாரம் என்ற சொல் மனித முயற்சியின்றிப் பெறமுடியாத மனிதத் தேவைகளை அடைந்து கொள்வதற்கான செல்வத்தைக் குறிக்கவே பயன்படுத்தப் படுகின்றது. இவ்வகையில் மனிதனின் அடிப்படைத் தேவைகளாகிய உணவு, உடை, உறையுள் என்பவற்றையும் சமூக வளர்ச்சியுடன் தோற்றம் பெற்ற கல்வி, பாதுகாப்பு, தொலைத்தொடர்பு, பொழுதுபோக்கு போன்ற வேறு தேவைகளையும் அடைந்து கொள்வது எந்த ஒரு பொருளாதாரத்தினதும் முக்கிய நோக்கமாகும். இவற்றைப் பெற்றுக்கொள்வதற்காக மேற்கொள்ளும் முயற்சி பொருளாதார முயற்சி என்றும் அம் முயற்சி பற்றி ஆராயும் அறிவியல் பொருளியல் என்றும் அழைக்கப்படுகின்றது.

பொருளாதாரம் பற்றிய மனிதர்களது நோக்கும் அதைப்பெற்றுக் கொள்வதற்காக அவர்கள் மேற்கொள்ளும் முயற்சிகளும் ஆளுக்காள் வேறுபடுகின்றன. இதன் காரணமாக மனிதர்களின் பொருளாதார நிலையும் வேறுபடுகின்றது. சிலர் பொருளாதாரத்தில் உயர்வாகவும் சிலர் தாழ்வாகவும் இன்னும் சிலர் மத்திய நிலையிலும் இருப்பர். இயல்பாக உருவாகும் இவ்வேற்றத் தாழ்வுகளுக்கு மத்தியில் எல்லா மனிதர்களினதும் பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்யும் வகையில் முன்வைக்கப் படும் திட்டமே சிறந்த பொருளாதாரத் திட்டமாகும்.

இன்றைய நவீன உலகில் மனிதர்களது பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்காக இரு பிரதான பொருளாதார சிந்தனைகள் முன்வைக்கப்பட்டுள்ளன. ஒன்று, தனி நபர்களின் பொருளாதார நலனிற்கு அதிக முக்கியத்துவம் வழங்கும் முதலாளித்துவப் பொருளாதார சிந்தனை. மற்றையது, தனிநபர்களின் பொருளாதார நலனை நிராகரித்து சொத்துக்கள் அனைத்தையும் பொது உடமையாக்கும் சமவுடமைப் பொருளாதாரச் சிந்தனை. இவ்விரண்டும் மனிதர்கள் தோற்றுவித்த ஒன்றுக்கொன்று முரணான சிந்தனைகளாகும். இவை இரண்டும் நடுநிலையற்றவை. இவற்றின் மூலம் உலகப் பொருளாதாரம் தீர்க்க முடியாத பல சவால்களை எதிர்கொண்டது. ஆனால் இஸ்லாம் நடு நிலையான பொருளாதாரக் கோட்பாடொன்றை முன்வைத்துள்ளது. அது தனி நபர்களினதும் சமூகத்தினதும் பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு நிரந்தரமான தீர்வைத் தரக் கூடியதாகவும் உள்ளது.

**இஸ்லாமியப் பொருளாதாரத்தின் அடிப்படைகள் இரு வகையானவை.**

1. கோட்பாடு ரீதியானவை (நம்பிக்கை சார்ந்தவை)

2. நடைமுறை சார்ந்தவை

## கோட்பாடு ரீதியானவை

★ வளங்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன. அவற்றை அவன் மனிதர்களுக்காகப் படைத்துள்ளான்.

'மேலும் வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அனைத்தும் அல்லாஹ்வுக்குரியவை' (53:31)

'அவன்தான் பூமியில் உள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்'(2:29)

★ செல்வம் தொடர்பில் மனிதன் மறுமையில் விசாரிக்கப்படுவான்.

'(உங்களுக்கு இறைவன் அளித்த) அருளைப் பற்றியும் பின்னர் அந்நாளில் நிச்சயமா நீங்கள் கேட்கப்படுவீர்கள்' (102:08)

★ தனிநபர்களின் சொத்தில் சமூகத்துக்கும் பங்குண்டு.

'அவர்களது சொத்தில் கேட்டு வருவோர்க்கும் இல்லாதோர்க்கும் குறித்த அளவு பங்குண்டு' (70:24-25)

★ செல்வத்தைத் திரட்டுவதற்காக மனிதர்கள் மேற்கொள்ளும் முயற்சி பலனளிப்பதும் பலனளிக்காதிருப்பதும் அல்லாஹ்வின் நாட்டத்தைப் பொறுத்ததே.

'நிச்சயமாக உங்களது இறைவன் தான் விரும்பியவர்களுக்கு விரிவாகக் கொடுக்கின்றான் (தான் விரும்பியவர்களுக்கு சுருக்கிக் குறைத்தும்) அளவாகவும் கொடுக்கின்றான்' (17:30)

★ செல்வம் மனிதனைச் சோதிப்பதற்காகத் தரப்பட்டதாகும்.

'நிச்சயமாக உங்களது செல்வங்களும் பிள்ளைகளும் ஒரு சோதனையாகவே உள்ளன' (64:15)

மேற்கூறப்பட்ட நம்பிக்கை சார்ந்த கோட்பாடுகளே இஸ்லாமியப் பொருளாதாரத்தின் உயிரோட்டமாகும். இவற்றின் மூலமே முதலாளித்துவ சமவுடமைப் பொருளாதார முறைமைகளினால் மனிதனுக்குக் கிடைக்கத் தவறிய நிம்மதி, மனநிறைவு, உளச் சாந்தி போன்றன இஸ்லாமியப் பொருளாதார முறைமையின் மூலம் கிடைக்கின்றன.

## நடைமுறை சார்ந்த அடிப்படைகள்

★ **அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துதல்**

'இது நான் அவனுக்கு நன்றி செலுத்துகின்றேனா இல்லையா என்று என்னைச் சோதிப்பதற்காக என் இறைவன் எனக்குப் புரிந்த பேரருளாகும்' (27:40)

**★ ஸக்காத் ஸதகா ஏனைய தர்மங்கள் மூலம் சமூகத்துக்குரிய பங்கைச் செலுத்துதல்**

*'நிச்சயமாக தானம் என்பதெல்லாம் வறியவர்களுக்கும் ஏழைகளுக்கும் தானத்தை வசூலிப்பவர்களுக்கும் புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர்களுக்கும் அடிமைகளை விடுதலை செய்வதற்கும் கடனில் மூழ்கியவர்களுக்கும் அல்லாஹ்வுடைய பாதையில் போர் செய்வதற்கும் வழிப்போக்கர்களுக்கும் (உரித்தானதாக) அல்லாஹ் ஏற்படுத்தியதாகும்' (9:60)*

**★ செலவு செய்வதிலும் சேமிப்பதிலும் நடுநிலைத்தன்மை பேணுதல்**

*'(உலோபியைப் போன்று உங்களுடைய பொருள்களில் எதையும் செலவு செய்யாது) உம் கையை உம் கழுத்தில் மாட்டிக் கொள்ளாதீர்கள்! அன்றி (உம்மிடம் இருப்பதையெல்லாம் கொடுத்து) உம் கையை முற்றிலும் விரித்தும் விடாதீர்கள்' (17:29)*

**★ எந்த ஒரு பொருளாதார நடவடிக்கையிலும் வட்டி இடம் பெறாமல் கவனமாயிருத்தல்.**

*'வட்டி வாங்கித் தின்பவர்கள் ஷைத்தான் பிடித்துப் பித்தம் கொண்டவர்கள் எழும்புவது போலன்றி எழும்ப மாட்டார்கள்' (2:275)*

**★ லஞ்சம், ஏமாற்று, சூது, சுரண்டல் போன்ற ஒழுக்க விழுமியங்களுக்கு முரணான செயற்பாடுகளை முழுமையாகத் தவிர்த்தல்**

*'உங்களுக்கிடையில் ஒருவர் மற்றவரின் பொருள்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்.(உங்கள் வாதம் பொய்யானதென) நீங்கள் அறிந்திருந்தும் (இதர) மனிதர்களின் பொருள்களில் எதனையும் பாவமான வழியில் (அநியாயமாக லஞ்சம் கொடுத்து) அபகரித்துக் கொள்ள அதிகாரிகளிடம் செல்லாதீர்கள்' (2:188)*

*★ கால சூழ்நிலைகளினால் ஏற்படும் பொருளாதார ரீதியான தேவைகள், மாற்றங்கள், சிக்கல்களின் போது இஸ்லாமிய அறிஞர்கள் இஜ்திஹாத் செய்து தீர்வு காணல்.*

*இவ்வடிப்படை காரணமாகத்தான் இஸ்லாமிய பொருளாதார முறைமைகள் எல்லாக் கால இட சூழ்நிலைகளுக்கும் ஏற்றதாய் அமைகின்றது.*

*★ ஒப்பந்த ரீதியான பொருளாதாரச் செயற்பாடுகள் சாட்சிப்படுத்தப்படலும் எழுதப்படலும்.*

*'நம்பிக்கையாளர்களே! நீங்கள் ஒரு குறித்த தவணையின் மீது கடன் கொடுத்துக் கொண்டால் அதை எழுதிக் கொள்ளுங்கள்' (2:282)*

இஸ்லாமியப் பொருளாதாரத்தின் இவ்விரு அடிப்படைகளுக்கும் ஆதாரமாக அல்குர்ஆன் வசனங்களை மாத்திரமே தந்துள்ளோம். இவற்றைப் பலப்படுத்தும் பல ஹதீஸ்களும் உள்ளன. அவை இந்த அல்குர்ஆன் வசனங்களுக்கு நடைமுறை சார்ந்த விளக்கங்களாகவும் உள்ளன. முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே முஸ்லிம் சமூகத்தில் இவ்வடிப்படைகளை முதன் முதலாக நடைமுறைப்படுத்திக் காட்டினார்கள். அதன் சிறந்த பெறுபேற்றை அவர்களது முன்மாதிரியைப் பின்பற்றிய பின் வந்த கலீபாக்கள் காலத்தில் முஸ்லிம் சமூகம் கண்டு கொண்டது.

## இஸ்லாமிய பொருளாதார முறைமையின் சிறப்பம்சங்கள்

- **தெய்வீகத் தன்மை**

இஸ்லாமியப் பொருளாதாரக் கோட்பாடு அல்லாஹ்வின் வழிகாட்டலை அடிப்படையாகக் கொண்டது. இதனால் மனிதர்கள் உருவாக்கும் கோட்பாடுகள் திட்டங்களில் உள்ள குறைபாடுகளை அதில் காண முடியாது.

- **சமூகத்தினுள் ஏற்படும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை சீர் செய்தல்**

இஸ்லாத்தின் சிறப்பான பங்கீட்டு முறையே இதற்குக் காரணம் 'செல்வம் உங்களிலுள்ள பணக்காரர்களிடையில் மாத்திரம் சுற்றிக் கொண்டிருக்காமல் (மற்றவர்களுக்கும் கிடைக்கும் பொருட்டு இவ்வாறு பொருளைப் பங்கிடும்படி கட்டளையிடுகின்றான்' (59:7)

- **சமூக நலனுக்கும் தனி மனித நலனுக்கும் இடையே இணக்கம் காணல்**

இதனால் முதலாளித்துவ, சம உடைமைப் பொருளாதார முறைமைகளில் இருந்து வேறுபடுகின்றது.

- **ஆத்மீகத் தேவை லௌகீகத் தேவை ஆகிய இரண்டையும் சமகாலத்தில் கவனத்திற் கொள்ளல்.**

நடைமுறையில் உள்ள பொருளாதாரக் கோட்பாடுகள் இலாபத்தைத் தவிர வேறெந்தப் பெறுமானங்களுக்கும் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இஸ்லாமிய பொருளாதாரத்தில் இலாபத்தைப் போலவே விழுமியம், பண்பாடு, கலாசாரம், நாகரிகம் ஆகிய அனைத்தும் முக்கியத்துவம் பெறுகின்றன.

- **எவருக்கும் அநீதி நிகழாமை.**

இஸ்லாமியப் பொருளாதாரச் செயற்பாடுகளில் இது முக்கியமானதோர் குறிக்கோளாகும்.

'அநீதி இழைக்கவும் மாட்டீர்கள். அநீதி இழைக்கப்படவும் மாட்டீர்கள்' (2:279)

- **நெகிழ்வுத் தன்மை**

பொருளாதாரச் செயற்பாடுகள் முஆமலாத் சார்ந்தவை என்பதனால் இஸ்லாம் தடுத்துள்ள சிலதைத் தவிர ஏனைய அனைத்தும் அனுமதிக்கப்பட்டவைகளாகும். இங்கு, பொருளாதாரப் பிரயோகச் செயற்பாட்டுக்கு உட்படும்போது புதுமைகள் பல தோற்றம் பெற வாய்ப்புண்டு. அந்நிலையில், அவற்றை இஜ்திஹாதுக்கு உட்படுத்தி, ஷரீஆவின் நிழலில் காலத்துக்குப் பொருத்தமான தீர்வுகளைக் கண்டுகொள்ள முடியும்.

இஸ்லாமிய பொருளாதார கோட்பாடுகள் வஹியின் அடிப்படையில் அமையப் பெற்றவையாகும். உலகவாழ் அனைத்து மக்களுக்கும் பொருத்தமானதாகவும் அது

அமைந்திருக்கின்றது. நிச்சயமாக இதனை வாழ்வில் எடுத்து நடக்கும்போது அதில் அல்லாஹ்வின் அருளை, பரக்கத் எனும் விருத்தியை கண்டுகொள்ள முடியும்.

முரண்பட்ட சிந்தனைகள் ஒன்றையொன்று எதிர்ப்பது நியதியாகும். எனவேதான் முதலாளித்துவ சிந்தனையும் சமவுடமைச் சிந்தனையும் ஒன்றையொன்று எதிர்த்துக்கொண்டன. இஸ்லாமியப் பொருளாதார சிந்தனை அவை இரண்டிற்கும் முரணாக இருப்பதனால் அவை இதனை எதிர்க்கின்றன. முஸ்லிம்களாகிய நாம் இஸ்லாமியப் பொருளாதார கோட்பாடுகளை எமது தனிப்பட்ட சமூக வாழ்வில் நடைமுறைப்படுத்தி அதன் சிறப்பை உலகறியச் செய்வது எமது கடமையாகும். அவ்வாறு செய்வதன் மூலம் நாம் ஈருலகிலும் வெற்றி பெறுவோம்.

### பயிற்சி

பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. இஸ்லாமியப் பொருளாதாரத்தின் அடிப்படைகளை எவ்வாறு வகைப்படுத்தலாம்?
2. இஸ்லாமியப் பொருளாதாரம் முதலாளித்துவ, சமவுடமை முறைகளிலிருந்து எவ்வாறு வேறுபடுகின்றது?
3. இஸ்லாமியப் பொருளாதாரத்தின் சிறப்புக்களைக் கூறுக.

### செயற்பாடு

உலக மக்கள் எதிர் நோக்கும் இன்றைய பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு இஸ்லாமியக் கோட்பாடுகள் மூலமே தீர்வு காண முடியும் என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதுக.

22

# உழைப்பின் முக்கியத்துவம்

மனிதன் தன் வாழ்க்கைக்குத் தேவையான செல்வத்தைத் திரட்டுவதற்காக உழைப்பது இஸ்லாத்தின் பார்வையில் உயர்ந்த அம்சமாகும். தனது தேவைகளைத் தானே நிறைவேற்றிக் கொள்ளாமல் பிறர் உழைப்பில் தங்கி வாழ்பவர் இஸ்லாத்தின் பார்வையில் தாழ்ந்தவராவார்.

ஒரு முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு மனிதனின் சிறப்புக்கள் எடுத்துரைக்கப்பட்டன. அப்போது சில தோழர்கள் சொன்னார்கள். அல்லாஹ்வின் தூதரே அவர் எங்களுடன் நீண்ட தூரம் பயணம் செய்தார். நாம் ஓரிடத்தில் தங்கினால் மீண்டும் பயணத்தை ஆரம்பிக்கும் வரை அவர் தொழுத வண்ணம் இருப்பார். நாம் பிரயாணம் செய்யும் போது நாம் தங்கும் வரை திக்ர் செய்த வண்ணமே இருப்பார். என்றனர். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவர் பயணம் செய்த ஒட்டகத்தை மேயவிட்டவரும் அவருக்கு உணவு சமைத்துக் கொடுத்தவரும் யார்? எனக் கேட்டார்கள். அதற்கு நாம் எல்லோரும் என்று பதில் கூறினர். அதைக்கேட்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அப்படியாயின் நீங்கள் எல்லோரும் அவரை விடச் சிறந்தவர்கள் என்றார்கள் (அதபுத் துன்யா வத்தீன் - இமாம் மாவர்தி). இந்த சம்பவம் உழைப்பவர்கள் பிறர் உழைப்பில் தங்கி வாழ்வோரை விட மிகவும் சிறந்தவர்கள், அவர்கள் வணக்கவாளிகளாக இருப்பினும் சரியே என்ற கருத்தைத் தெளிவாக முன்வைக்கின்றது.

அல்லாஹ்வின் கண்ணியமான படைப்பாகிய மனிதன் பிறர் உழைப்பில் தங்கி நிற்கும் போது அவனது கண்ணியம் குறைகிறது. இதன் காரணமாகத்தான் யாசித்தலை இஸ்லாம் வன்மையாகக் கண்டிக்கின்றது.





நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் 'ஒருவர் தொடர்ந்து யாசகம் கேட்டு வந்தால் மறுமையில் முகத்தில் சதையில்லாத நிலையிலே வருவான்' (புஹாரி, முஸ்லிம்)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு தடவை உழைத்து உழைத்து வலுவேறிய ஒரு தொழிலாளியின் கையை நீண்ட நேரம் பற்றிப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். இதனைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டபோது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

'நிச்சயமாக அல்லாஹ் தொழில் புரியும் விசுவாசியை நேசிக்கின்றான் என்றார்கள்'. (தபரானி)

உழைப்பு இஸ்லாத்தில் பல காரணங்களுக்காக முக்கியத்துவம் பெறுகின்றது.

### 1. உழைப்பு அல்லாஹ்வின் அருளைத் தேடும் முயற்சியாகும்.

மனிதனின் வாழ்வாதாரத்திற்குரிய அனைத்தும் இப்புவியிலேயே வைக்கப்பட்டுள்ளன.

இது பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்.

'(மனிதர்களே!) நிச்சயமாக நாம் உங்களுக்குப் பூமியில் எல்லா வசதிகளையும் அளித்து அதில் உங்களுக்கு வாழ்வதற்குத் தேவையான அனைத்து சாதனங்களையும் ஏற்படுத்தினோம். (இவ்வாறிருந்தும்) நீங்கள் நன்றி செலுத்துவதோ மிகக்குறைவு' (7: 10)

'நாம் பூமியை விரித்து அதில் அசையாத மலைகளை நட்டினோம். ஒவ்வொரு புற்பூண்டையும் (அதற்குரிய) ஒழுங்கான முறையில் அதில் நாம் முளைப்பித்தோம். உங்களுக்கும் நீங்கள் உணவு கொடுத்து வளர்க்காது ஆகாயத்திலும், பூமியிலும் வசிக்கக் கூடியதுமான உயிரினங்களுக்கும் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களையும் நாமே அதில் அமைத்தோம்.' (15:19-20)

இவ்வாறு அல்லாஹ் பூமியெங்கும் மனிதனுக்காகப் பரப்பியுள்ள அவனது வாழ்வாதாரத்துக்குரிய அனைத்து அம்சங்களும் அல்லாஹ்வின் அருளாகும். அவற்றை அடைவதற்காக மனிதன் முயற்சி செய்தாலேயன்றி அவை மனிதனை வந்தடைவதில்லை. எனவே தான் அல்குர்ஆன் அவற்றைத் தேடிச் செல்லுமாறு மனிதனைப் பணிக்கின்றது.

'அவன் தான் உங்களுக்குப் பூமியை (நீங்கள் வசிப்பதற்கு) வசதியாக ஆக்கி வைத்தான். ஆகவே பல கோணங்களிலும் சென்று அவன் (உங்களுக்கு) அளித்திருப்பவைகளைப் புசித்துக் கொண்டிருங்கள்.' (67:15)

'(ஜும்ஆத்) தொழுகை முடிந்ததும் பூமியில் பரந்து சென்று அல்லாஹ்வின் அருளைத் தேடிப் பெற்றுக் கொள்ளுங்கள்' (62:10)

இவ்வகையில் பொருளீட்டல் என்பது அல்லாஹ்வின் அருளைத் தேடும் முயற்சியாகும்.

## *2. உழைப்பு முஸ்லிமின் மீது கடமையான ஒன்றாகும்.*

இதனை இரு வகைகளில் நோக்க முடியும்.

'எது இல்லாமல் ஒரு கடமை பூர்த்தியாகாதோ அதனை நிறைவேற்றுவதும் கடமையாகும்' என்ற இஸ்லாமிய ஷரீஅத்தின் சட்ட விதியின் படி இஸ்லாம் முஸ்லிம்கள் மீது விதியாக்கியுள்ள கடமைகளுற் சில அவனது செல்வத்துடன் தொடர்பானவைகளாகும். (உ-ம்) ஸக்காத், ஹஜ், குடும்பப் பராமரிப்பு ஆகியன. இக்கடமைகளை நிறைவேற்றுவதற்கு செல்வம் தேவைப்படுகின்றமையால் செல்வத்தைத் தேடுவதும் கடமையாகின்றது.

பிக்ஹுத் துறை அறிஞர்கள், அல்லாஹ்வின் கட்டளைகள் கடமைகளைச் சுட்டும் என்று கருத்து கொண்டுள்ளனர். இவர்களின் கூற்றுபடி 'அல்லாஹ்வின் அருளை தேடிச் சென்று பெற்றுக் கொள்ளுங்கள்' (62:10) என்ற இறை கட்டளை பொருளீட்டலைக் கடமையாக்குகின்றது.

## *3. உழைப்பு ஒரு வணக்கமாகும்*

ஒரு முஸ்லிம் எந்த ஒரு செயலையும் இஸ்லாமிய வழிகாட்டல்களுக்கு அமைய நிறைவேற்றும்போது அச்செயல் வணக்கமாகின்றது. அதுபோலவே உழைப்பும் அவ்வழிகாட்டலுக்கு அமைய மேற்கொள்ளப்படும்போது அது வணக்கமாகின்றது. எனவேதான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

'எவர் ஹலாலான உழைப்பில் ஈடுபட்டு களைப்படைந்த நிலையில் ஓர் இரவை அடைகின்றாரோ அவர் பாவங்கள் மன்னிக்கப்பட்ட நிலையில் அவ்விரவை அடைந்தவராவார்.' (இப்னுமாஜா)

இஸ்லாம் உழைப்பை ஒரு வணக்கமாக நோக்குவதன் காரணமாகத்தான், பொருளீட்டலில் ஈடுபடுவோர்க்கு தொழுகையில் சிறிய ஸூறாக்களை ஓதுவதற்குச் சலுகையளித்துள்ளது. அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது.

'ஆகவே (இரவில் நீங்கள் தொழுதால்) குர்ஆனில் உங்களுக்குச் சாத்தியமான அளவு ஓதுங்கள். ஏனென்றால் உங்களில் நோயாளிகள் இருக்கக் கூடுமென்பதையும் வேறு சிலர் அல்லாஹ்வின் அரு(ளாகிய பொரு)ளைத் தேடி பூமியின் பல பாகங்களிலும் செல்ல வேண்டியிருக்கும் என்பதையும் வேறு சிலர் அல்லாஹ்வுடைய பாதையில் போர் புரியச் செல்ல வேண்டியிருக்கும் என்பதையும் அவன் நன்கறிவான். ஆதலால் (உங்கள் அவகாசத்து க்குத் தக்கவாறு கூட்டியோ குறைத்தோ) உங்களுக்கு சௌகரியமான அளவே ஓதுங்கள்' (73:20)

**பொருளீட்டல் வணக்கமாக வேண்டுமாயின் கடைப்பிடிக்க வேண்டிய இஸ்லாமிய வழிகாட்டல்கள் வருமாறு..**

1. தூய எண்ணம்.
2. அடிப்படை வணக்க வழிபாடுகளுக்குத் தடையில்லாதிருத்தல்.
3. ஷரீஆவின் அனுமதி
4. ஷரீஅத்தின் வரையறைகளை மீறாதிருத்தல்.
5. நேர்த்தியாகவும் ஒழுங்காகவும் செய்தல்

பொருளீட்டலில் பேணவேண்டிய ஷரீஅத் வரையறைகளாகப் பின்வருவன வற்றைக் குறிப்பிடலாம்.

1. ஹராமான பொருளைக் கொண்டதாக இருக்கக் கூடாது.

(உ-ம்) மதுபானம், பன்றியின் மாமிசம், திருடப்பட்ட பொருட்கள்.

2. ஹராமாக்கப்பட்ட செயல் முறைகள் மூலமானதாக இருக்கக் கூடாது.

(உ-ம்) கொள்ளை, வட்டி, லஞ்சம்.

3. மக்களுக்குப் பாதிப்பையும் ஏமாற்றத்தையும் உண்டாக்கும் விதமானதாக இருக்கக் கூடாது.
(உ-ம்) பதுக்கல், கலப்படம், வாக்கு மீறல்.

4. பொதுச்சட்டங்களை மீறும் செயல்முறையாக இருக்கக் கூடாது.

(உ-ம்) கறுப்புச் சந்தை, கடத்தல் தொழில்.

5. நல்லொழுக்க விழுமியங்களுக்கு முரணான செயன்முறைகளாக இருக்கக் கூடாது.
(உ-ம்) பொய், பேராசை, மோசடி, சுயநலம்.

இதுவரை பார்த்தவற்றின் மூலம் இஸ்லாம் உழைப்புக்கு வழங்கியுள்ள முக்கியத்து வத்தை விளங்கினோம் அல்லவா? எனினும் சிலர் முயற்சி இன்றியும் உழைப்பதில் அசிரத்தையாகவும் இருப்பதைக் காண்கின்றோம். இதற்கு இமாம் மாவர்தி அவர்கள் மூன்று காரணங்களைக் கூறுகின்றார்.

**1. சோம்பல்:** இஸ்லாம் சோம்பேறித் தனத்தை வெறுக்கின்றது. சோம்பேறி எப்போதும் வறுமைப்பட்டவனாகவே இருப்பான். இதனை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெறுத்ததுடன் அதிலிருந்து பாதுகாப்புத் தேடி அல்லாஹ்விடம் இவ்வாறு பிரார்த்திப்பார்கள்.

'யா அல்லாஹ்! சோம்பேரித் தனத்தில் இருந்தும் இயலாமை யிலிருந்தும் என்னைப் பாது காப்பாயாக. அத்துடன் அவர்கள் தன் உம்மத்தினர் அதிகாலை யிலேயே சுறுசுறுப்புடன் எழுந்து செயற்பட வேண்டும் என்பதற்காக யா அல்லாஹ் எனது உம்மத்துக்கு நீ அதிகாலையிலே பரக்கத்தை செய்வாயாக' (அஹ்மத்) என பிரார்த்தித்தார்கள். எனவே சோம்பல் காரணமாக உழைக்காமல் இருப்பது இஸ்லாத்துக்கு முரணான செயலாகும்.



***2. தவக்குல் பற்றிய பிழையான அபிப்பிராயம்:*** தவக்குல் என்பது அல்லாஹ் வரவேற்கின்ற ஈமான் சார்ந்த ஓர் அம்சமாகும். நாம் ஒரு செயலில் முழு முயற்சியோடு ஈடுபட்டுவிட்டு இறுதி விளைவை அல்லாஹ்வின் மீது பொறுப்புச் சாட்டுவதே உண்மையான தவக்குல் ஆகும். எனினும் சிலர் இதைப் பிழையாக விளங்கி முயற்சியில் ஆர்வம் காட்டாமல் விளைவை மாத்திரம் அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டி விடுகின்றனர். இச்செயலை அவர்கள் தவக்குல் என எண்ணுகின்றனர். இது இஸ்லாத்தில் வரவேற்கத்தக்க செயல் அல்ல.

***3. பற்றின்மையும் மனத்திருப்தியும்:*** சிலர் உலக மோகத்திற்கு அஞ்சி அதிகமாக உழைப்பதை தவிர்க்கின்றனர். தமக்குக் கிடைக்கும் குறைந்த வருமானத்தைக் கொண்டு திருப்தி அடைகின்றனர். இதனை இஸ்லாம் வரவேற்கின்றது. பல ஸஹாபாக்கள் அவ்வாறு வாழ்ந்துள்ளனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக அபூதர்தா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள். 'ஒவ்வொரு நாளும் சூரியன் உதிக்கும் போது அதன் இரு புறம் இருந்தும் இரு மலக்குகள் அழைப்பு விடுப்பர். மனிதன், ஜின் தவிர்ந்த அனைத்தும் அதைச் செவியுறுகின்றன. மனிதர்களே! உங்கள் இரட்சகனிடம் விரையுங்கள். அதிகமாகக் கிடைத்து பராக்காவதை விட குறைவாகக் கிடைத்து போதுமாக்கிக் கொள்வது சிறந்தது'.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஸஹாபாக்களுள் சிலர் தம் செல்வங்களினால் அதிக நன்மைகளையும் அடைந்து கொண்டுள்ளனர். அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு ,கதீஜா ரழியல்லாஹு அன்ஹா, உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு, அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் ரழியல்லாஹு அன்ஹு ஆகியோர் அதற்கு சிறந்த உதாரணங்களாவர். இத்தகையோர் செய்யும் அதிக நன்மைகளைப் பார்த்துத் தான் ஏனைய ஸஹாபாக்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! செல்வந்தர்கள் எங்களை முந்தி விட்டார்களே என்று முறைப்பட்டார்கள். எனவே நாமும் இஸ்லாமிய வழிகாட்டலைக் கற்று உற்சாகமாய் உழைத்து நல்வழியில் செலவு செய்வோம்.

### பயிற்சி

1. இஸ்லாத்தில் பொருளீட்டல் முக்கியத்துவம் பெறுவதற்கான காரணங்களைக் குறிப்பிடுக.
2. பொருளீட்டல் வணக்கமாக வேண்டும் எனின் கடைப்பிடிக்க வேண்டிய இஸ்லாமிய வழிகாட்டல்கள் எவை?
3. பொருளீட்டும் போது கவனிக்க வேண்டிய ஷரீஅத் வரையறைகள் எவை?
4. மக்கள் உழைப்பில் ஆர்வம் காட்டாமல் இருப்பதற்கு இமாம் மாவர்தி குறிப்பிடும் காரணங்கள் எவை?

# 23

# உழைப்பு - I

முந்திய பாடத்தில் இஸ்லாம் உழைப்புக்கு வழங்கும் முக்கியத்துவம் பற்றிப் பார்த்தோம். இப்போது பொருளீட்டுவதற்கான முயற்சிகள் பற்றிப் பார்க்கவுள்ளோம். மனிதன் உழைத்து வாழ்வதற்காக அல்லாஹ் இப்புவியில் எண்ணிலடங்கா வழிகளை வைத்துள்ளான். அவற்றைப் பயன்படுத்தும் வெவ்வேறு விதமான அறிவையும் மனிதனுக்கு வழங்கியுள்ளான். அதனைப் பயன்படுத்தி, தன் தேவையை நிறைவேற்ற முயற்சிப்பது மனிதனின் பொறுப்பாகும். இந்த வகையில் மனிதன் கண்டு பிடித்த தொழில் முயற்சிகள் ஏராளம். அவற்றுள் அடிப்படையான சிலவற்றை மாத்திரம் இஸ்லாமிய நோக்கில் இங்கு அறிமுகம் செய்கிறோம்.

## விவசாயம்

விவசாயம் மிகவும் பழமை வாய்ந்த அடிப்படையான ஒரு பொருளீட்டல் முயற்சியாகும். இது இரு வகையானவை.

1. தாவர உணவை பெற்றுக் கொள்வதற்காக மேற்கொள்ளப்படும் பயிர்ச் செய்கை.

2. மாமிச உணவைப் பெற்றுக் கொள்வதற்காக மேற்கொள்ளப்படும் கால்நடை வளர்ப்பு. இவ்விரு விவசாய முயற்சிகளும் அல்லாஹ்வின் பேரருள் என்று அல்குர்ஆன் கூறுகின்றது.



'மேலும் (பந்தல்களில்) படரும் கொடிகள், படராத செடிகள் ஆகியவற்றைக் கொண்ட (பலவிதமான) தோட்டங்களையும், பேரீச்சந் தோப்புக ளையும் பல வகைப்பட்ட உணவுப் பொருட்களையும் அளிக்கக் கூடிய தாவரங்களையும் மற்றும் தோற்றத்தில் ஒரே மாதிரியாகவும் (சுவையில்) வேறுபட்டதாகவும் இருக்கும் ஒலிவ், மாதுளை ஆகியவற்றையும் படைத்தவன் அந்த அல்லாஹ்தான்' *(6:141)*

'(ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற பெரிய) கால் நடைகளில், சுமை சுமக்கக் கூடியவற்றையும், (சுமை சுமக்க முடியாத) சிறிய கால் நடைகளையும் (அவனே படைத் திருக்கின்றான். ஆகவே) அல்லாஹ் உங்களுக்கு அளித்திருக்கும் இவற்றில் புசிக்கக் கூடியவற்றை நீங்கள் புசியுங்கள்' *(6:142)*

ஹதீஸ் ஆதாரங்களின் அடிப்படையில் நோக்குகையில் உலகின் முதன் மனிதனாகிய ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இவ்விரு விவசாய நடவடிக்கை களையும் உலகில் ஆரம்பித்து வைத்துள்ளதைக் காண முடிகின்றது. அவரிடமிருந்து அவரது ஒரு மகனாகிய ஹாபில், பயிர்ச் செய்கையையும் மற்றொரு மகனாகிய காபில் கால்நடை வளர்ப்பையும் தமக்குரிய விசேட தொழில் முயற்சியாக மேற்கொண்டு வந்து ள்ளனர். இதனடிப்படையில் தான் ஆரம்ப சமூகங்கள் பயிர் செய்வோர் என்றும் மந்தை மேய்ப்போர் என்றும் இரு பிரிவுகளாக பிரித்து நோக்கப்பட்டுள்ளனர்.

அல்லாஹ், இவ்விரு தொழில் முயற்சிகளிலும் மனிதர்கள் ஈடுபட வேண்டும் என்பதற்காக வளமான பயிர் நிலங்களையும் மேய்ச்சல் தரைகளையும் புவி மீது இயற்கையாகவே ஏற்படுத்தியுள்ளான்.இதனை அல்குர்ஆன் பின்வருமாறு எடுத்துக்காட்டியுள்ளது.

'படைப்புகள் வசித்திருக்க வசதியாக பூமியை அமைத்தான். அதில் பல வகை கனி வர்க்கங்களும் குலைகள் நிறைந்த பாளைகளை உடைய பேரீச்சை மரங்களும் உற்பத் தியாகின்றன. உமியால் மூடப்பட்ட தானியங்களும், வாசனைப் புற் பூண்டுகளும் உண்டாகின்றன'. *(55:10-12)*

அவனே கால்நடைகளுக்கு மேய்ச்சல் பொருட்களையும் உருவாக்கினான் *(87:04)*

பயிரிடுதல் மந்தை மேய்த்தல் ஆகிய இரு பொருளாதார முயற்சிகளும் மனிதர்களால் கைவிடப்படக் கூடாது என்பதற்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவற்றை வலியுறுத்தியும் சிலாகித்தும் கூறியுள்ளார்கள்.

* உரிமை கோரப்படாத நிலத்தை ஒருவர் பயன்படுத்தி வளமாக்கினால் அவரே அதற்குத் தகுதியானவர் (புஹாரி)

* 'ஒருவருக்கு நிலம் இருப்பின் அதில் அவர் பயிர் செய்யவும். அல்லது அதனைத் தன் சகோதரனுக்கு தர்மம் செய்து விடவும்'

* யார் ஒரு மரத்தை நட்டி அது காய்க்கும் வரை பொறுமையுடன் அதை பராமரிக்கின்றாரோ அவருக்கு, அம்மரத்தின் மூலம் யார் பயனடைந்தாலும் அது அல்லாஹ்விடத்தில் தர்மமாகவே ஏற்றுக்கொள்ளப்படும். (அஹ்மத்)

மேற்கூறப்பட்ட ஹதீஸ்களும் கைபர் யுத்த வெற்றியின்போது கிடைத்த விவசாய நிலத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விவசாயம் செய்வோருக்குப் பகிர்ந்து கொடுத்தமையும் விவசாய தொழிற்பாட்டின் சிறப்பையும் அவசியத்தையும் உணர்த்துகின்றன.

இவற்றுடன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தரிசு நிலத்தில் பயிர் செய்தல், விவசாயம், பங்குடமை, குத்தகைக்கு விடல் போன்ற தலைப்புக்களில் ஹதீஸ்கள் தொகுக்கப்பட்டிருப்பதும் பிக்ஹு நூல்களில் விவசாயம் தொடர்பான சட்டங்கள் தொகுக்கப்பட்டிருப்பதும் விவசாயத் துறையில் முஸ்லிம்களின் ஈடுபாட்டை நெறிப்படுத்துவதாக உள்ளன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற போது மதீனா வாசிகள் பேரீச்சை மரங்களில் மகரந்தச் சேர்க்கை செய்து உற்பத்தியைப் பெருக்க எடுத்த முயற்சியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுமதித்தமை, விவசாய நுட்ப முறைகளுக்கு அவர்கள் வழங்கிய அனுமதியாகவே கருதப்படுகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மந்தை மேய்த்தல் பற்றி சிலாகித்துக் கூறுகையில் அல்லாஹ் அனுப்பிய அனைத்து நபிமார்களும் மந்தை மேய்த்துள்ளார்கள் எனக் குறிப்பிட்டபோது, அல்லாஹ்வின் தூதரே நீங்களுமா? என ஸஹாபாக்கள் வினவினார்கள். ஆம் மக்கா வாசிகளின் மேய்ச்சல் தரையில் நானும் மந்தை மேய்த்தேன் என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். (புஹாரி)

இன்று சனத்தொகை அதிகரித்துள்ள நிலையில் விவசாயம் மற்றும் மேய்ச்சல் நடவடிக்கைகள் விஞ்ஞானத்துடன் இணைந்து நவீனமயப்படுத்தப்பட்டுள்ளன. குறைந்த நிலப்பரப்பில் குறுகிய காலப்பகுதியில் அதிக பயன்பாட்டைப் பெறத்தக்கதாய் அவை வளர்ச்சியடைந்துள்ளன. இந்நிலையில் மேற்படி தொழில் முயற்சிகளில் நாட்ட முடையவர்கள் அவற்றை நன்கு கற்று, துறைசார் நிபுணர்களின் ஆலோசனைகளையும் பெற்று, தம் பொருளாதாரத்தைக் கட்டியெழுப்ப முனைவது இஸ்லாத்தின் பார்வையில் பாராட்டத்தக்க செயலாகவே அமையும்.

## கைத்தொழில்

கைத்தொழில் என்பது, மனிதன் தனது அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி ஒரு மூலப்பொருளில் இருந்து தனக்குத் தேவையான ஒரு முடிவுப் பொருளைத் தயாரிப்பதைக் குறிக்கும். கைத்தொழில் பல வகையானது. அவற்றுள் மிகவும் பழமையானது நெசவுத் தொழிலும் தச்சுத் தொழிலுமாகும். இதுபற்றி இமாம் இப்னு கல்தூன் கூறுகையில் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நெசவுத் தொழிலை அறிமுகஞ் செய்ததாக பரவலாக நம்பப்படுகின்றது. அவரைத் தொடர்ந்து வந்த நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தச்சுத் தொழிலை அறிமுகம் செய்திருக்கலாம் என்பது தெளிவாகின்றது. ஏனெனில் அவரது கப்பல் மரப்பலகை, ஆணிகள் கொண்டு உருவாக்கப்பட்டது என அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது. (முகத்திமா)

இது ஸூறதுல் கமர் (அத்தியாயம் 54) 13 ஆம் வசனத்தில் கூறப்பட்டுள்ளது.

*பிற்காலத்தில் நபி ஸகரிய்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தச்சுத் தொழிலில் ஈடுபட்டதாக ஸஹீஹ் முஸ்லிமில் பதியப்பட்டுள்ள ஒரு ஹதீஸ் குறிப்பிடுகின்றது.*

*கைத்தொழில் துறையில் இரும்புருக்குக் கைத்தொழில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். அதிகமான உற்பத்திப் பொருட்களுக்கு அது மூலப்பொருளாகின்றது.*

*இரும்பை நாமே இறக்கினோம். அதில் கடுமையான சக்தியும், மனிதனுக்குப் பலவகைப் பயனும் இருக்கிறது. (57:25)*

*இரும்பினை மனிதத் தேவைகளுக்கு பயன்படுத்தும் தொழில் நுட்ப அறிவை அல்லாஹ் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வழங்கியிருந்தான்.*

*அவருக்கு (தாவூதுக்கு) இரும்பை மிருதுவாக்கிக் கொடுத்தோம். நிறைவான கவசங்களை உற்பத்தி செய்வீராக. அவற்றுள் சங்கிலி வளையங்களை ஒழுங்காக இணைத்து போர்ச் சட்டை செய்யும்படியும் கட்டளையிட்டோம். (34:10-11)*

*இரும்பை பயன்படுத்தி பெரும் சுவர்களையும், அணைகளையும் நிர்மாணிக்கும் தொழில் நுட்பத்தை மன்னன் துல்கர்னைன் பெற்றிருந்ததாக ஸூறா அல் கஹ்பில் கூறப்பட்டுள்ளது. (18:94-96)*

*கி.பி.18 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட கைத்தொழில் புரட்சியைத் தொடர்ந்து புதுப் புதுக் கண்டுபிடிப்புக்கள் பல கைத்தொழிற் துறையில் அறிமுகமாகியுள்ளன. இவை அனைத்தும் அல்லாஹ்வின் பிரதிநிதியாக வந்த மனிதன் தனது தேவைகளை அடைந்து கொள்வதற்காக தன் அறிவைப் பயன்படுத்தியதால் ஏற்பட்ட விளைவுகளாகும். இவ்வகையில் புவியில் பல்வேறு வளங்களையும் அவற்றை எவ்வாறு பயன்படுத்துவது என்ற அறிவையும் ஆற்றலையும் வழங்கிய அல்லாஹ்வே மிகவும் நன்றிக்குரியவனாவான்.*

*கைத்தொழிலானது பாரிய கைத்தொழில், சிறுகைத்தொழில் (குடிசைக் கைத்தொழில்) என இருவகைப்படுகிறது. பாரிய கைத்தொழிலுக்குப் பாரிய மூலதனமும் பெரும் அளவிலான மனித உழைப்பும் தேவைப்படுகிறது. ஆனால் சிறு கைத்தொழிலோ அவ்வாறில்லை. ஒரு சாதாரண முதலீட்டைக் கொண்டே ஒருவர் அதில் ஈடுபட்டு தனது பொருளீட்டலில் வெற்றியடையலாம். சிறு கைத்தொழில் வகைகளுக்கு உதாரணமாக ஆடை தைத்தல், உணவுப்பொருள் தயாரித்தல், இயந்திரம் பழுது பார்த்தல், புத்தகம் கட்டுதல், அச்சுவேலைகள், கைப்பணிப் பொருட்கள் தயாரித்தல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.*



*இந்த கைத்தொழில் துறையும் விவசாயம் போன்று வரவேற்கப்பட்ட ஒரு தொழில் முயற்சியாகும்.*

*ஒரு முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் 'சிறந்த தொழில் எது?' எனக் கேட்கப்பட்டதற்கு 'கைத்தொழிலும் பொய் கலவாத வர்த்தகமும்' என்றார்கள். (அஹ்மத்)*

இன்னொரு சந்தர்ப்பத்தில் 'தனது இரு கரங்களினால் உழைத்துச் சாப்பிடுவதை விட சிறந்த உணவை ஒருவர் சாப்பிட முடியாது. நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் தாவூத் அலைஹிஸ்ஸலாம் தனது கரத்தால் உழைத்தே சாப்பிட்டார்கள்' (புஹாரி) எனக் கூறினார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது காலத்தில் ஆண்களைப் போலவே ஸஹாபாப் பெண்மணிகளும் கைத்தொழில் செய்து பிழைப்பு நடத்தியுள்ளனர். எடுத்துக்காட்டாக உம்மஹாதுல் முஃமின்களில் ஒருவரான ஸைனப் பின்த் ஜஹஷ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் வலை பின்னி சீவியம் நடத்தியதைக் குறிப்பிடலாம்.

எந்தத் தொழிலைச் செய்தாலும் அதில் ஹலால் - ஹராம் இருப்பது சாதாரண நிகழ்வாகும். எனவே முஸ்லிம்களாகிய நாம் எமது தொழிற்துறைகளில் இஸ்லாமிய ஷரீஆவைப் பேணிக்கொள்வது அவசியமாகும்.

கைத்தொழில் துறையின் வளர்ச்சிக்கு உந்து சக்தியாய் அமைவது அவ்வப்போது கண்டுபிடிக்கப்படுகின்ற புதிய கண்டுபிடிப்புக்களாகும். எனவே நாம் புதுப்புது வழிகளில் சிந்தித்து எமது புத்தாக்கத் திறனை இப்போதிருந்தே வளர்த்துக்கொள்ள முயல வேண்டும். அல்லாஹ்வின் அருளைத்தேடி நாம் முயற்சிக்கையில் அவன் பல வழிகளை எமக்குக் காண்பிப்பான்.

உலகம் அதில் வாழும் அனைத்து மக்களுக்கும் பொதுவானது. இங்கு முயற்சிப்பவர்கள் தம் முயற்சியின் பிரதிபலனைக் கண்டு கொள்கின்றனர். இஸ்லாமிய நெறிமுறைக்குள் நின்று செயற்படும் மனிதன் தன் முயற்சியின் பலனை மறுமையிலும் கண்டு கொள்வான்.

**பயிற்சி**

1. விவசாயத்தின் இரு பிரிவுகளையும் கூறுக.
2. இவ்விரு விவசாய தொழில் முயற்சியுடனும் தொடர்பான அல்குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்களை வேறுவேறாக அட்டவணைப்படுத்துக.
3. முஸ்லிம்கள் கைத்தொழிற் துறையில் ஈடுபடல் வேண்டும் என்பதை எவ்வாறு வலியுறுத்திக் கூறுவீர்?

# 24

# உழைப்பு - II

## வியாபாரம்

'ஒரு உடைமைக்கு அல்லது பொருளுக்குப் பிரதியீடு ஒன்றைப் பெற்றுக் கொண்டு அதன் உரிமையை மற்றொருவருக்குக் கையளிக்கும் நடவடிக்கை' வியாபாரம் எனப்படுகிறது. விவசாய உற்பத்தியாயினும் சரி கைத்தொழில் உற்பத்தியாயினும் சரி அவை வியாபாரத்தினூடாகவே மக்களை வந்தடைகின்றன. இவ்வகையில் வியாபாரி உற்பத்தியாளனுக்கும் பாவனையாளனுக்கும் இடையில் தொடர்பாளனாகவும் செயற்படுகின்றான். எனவே இஸ்லாம் வியாபாரத்தை அனுமதித்ததுடன் வியாபாரியின் இச்சேவையை பாராட்டியும் உள்ளது.

'நம்பிக்கையும் நாணயமும் உள்ள வியாபாரிகள் (மறுமையில்) நபிமார்கள் ஷுஹதாக்களுடன் இருப்பார்கள்' (திர்மிதி)



வியாபாரம் என்பது சிக்கலான ஒரு பொருளீட்டல் செயற்பாடாகும். ஒரு சாரார் வியாபாரத்தையும் வட்டியையும் பிரித்தறிய முடியாமல் தடுமாறுகின்றனர். மற்றொரு சாரார் வியாபாரம் ஹலாலாவதற்கான நிபந்தனைகள் தெரியாமல் இலாபமீட்டலை மாத்திரம் கருத்தில் கொண்டு முழுச் சுதந்திரத்துடன் செயற்படுகின்றனர். எனவே சிக்கலான இப்பொருளாதார செயற்பாட்டின் ஹலாலான செயன்முறையை தெளிவுபடுத்துவதற்காக இஸ்லாமிய சட்ட அறிஞர்கள் அல்குர்ஆன் சுன்னாவின் அடிப்படையில் வியாபாரம் தொடர்பான சட்ட திட்டங்களை விளக்கியுள்ளனர். ஒரு முஸ்லிம் வியாபாரி அவற்றை அறிந்து அதன் படி செயற்படுவது அவர் மீது கடமையாகும்.

உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் சந்தைக்குச் சென்றபோது வியாபாரம் தொடர்பான சட்ட விளக்கமுள்ளவர்களைத் தவிர ஏனையோர் சந்தையில் வியாபாரம் செய்யக் கூடாது. ஏனெனில் அத்தகையோர் விரும்பியோ விரும்பாமலோ வட்டியை உட்கொள்ள வேண்டி ஏற்படலாம். என எச்சரித்துள்ளார்கள். இஸ்லாமிய நோக்கில் ஒரு வியாபாரம் செல்லுபடியாவதற்கு சில அடிப்படைகளும் நிபந்தனைகளும் பூர்த்தியாதல் வேண்டும்.

**வியாபாரத்திற்கான அடிப்படைகள்**

1. வாங்குவோன் - விற்போன்
2. வியாபாரப் பொருள்
3. ஈஜாப் - கபூல்

### வாங்குவோன் - விற்போன்

1. பருவமடைந்தவராக இருத்தல்
2. புத்தியுடையவராக இருத்தல்
3. வியாபாரம் பற்றிய விபரம் தெரிந்தவராக இருத்தல்

### வியாபாரப் பொருள்

1. விற்பவருக்குச் சொந்தமானதாக இருத்தல்
2. வாங்குபவருக்கு ஒப்படைக்கும் தகுதியுடையதாக இருத்தல்
3. கையிருப்பில் காணப்படல்
4. இஸ்லாமிய ஷரீஅத்தின் அடிப்படையில் சுத்தமானதாகவும் பயனுள்ளதாகவும் இருத்தல்

### ஈஜாப் - கபூல்

ஈஜாப் என்பது விற்றவர், தான் குறித்த பொருளை விற்று விட்டதாகவும், கபூல் என்பது அதனை வாங்கியவர், தான் அதை ஏற்றுக் கொண்டதாகவும் வெளிப்படுத்தும் திருப்தியைக் குறிக்கும். இது வாய்மொழியாகவோ, எழுத்து வடிவிலோ அல்லது நடைமுறையில் உள்ள வேறு வழிமுறைகள் மூலமோ இடம் பெறலாம்.

**வியாபாரக் கொடுக்கல் வாங்கலின் போது தடுக்கப்பட்டவைகள்**

1. தேவையில்லாத சத்தியம்.
2. அளவை நிறுவை மோசடி.
3. பதுக்கல்.
4. நியாயமற்ற விலை விதிப்பு.
5. கலப்படம்.
6. பொய் பேசுதல்.
7. ஏமாற்றுதல்.
8. பொதுச் சட்டங்களை மீறுதல்.

வியாபாரத்தின்போது வாங்குவோரும் விற்போரும் மேற்படி இஸ்லாமிய அடிப்படைகளைப் பேணி செயற்படும் போது அவர்கள் பல்வேறு நலன்களை அடைந்து கொள்வார்கள். அவற்றுள் சில:

1. அவர்களது கொடுக்கல் வாங்கல் நடவடிக்கை வணக்கமாகிவிடும்.
2. வாங்குவோர் விற்போருக்கிடையில் உறவு பேணப்படும்.
3. வியாபாரம் ஸ்திரத் தன்மையை அடையும்.
4. வீண் குற்றச் சாட்டுகளில் இருந்து பாதுகாப்புப் பெறப்படும்.
5. ஹராமான கொடுக்கல் வாங்கல்களிலிருந்து மீட்சி கிடைக்கும்.

எனவே வியாபார நடவடிக்கைகளின் போது இஸ்லாமிய வரையறைகளைப் பேணி ஈருலகிலும் பயன் பெற முயற்சிப்போம்.

## சேவைத் தொழில்

பொருளீட்டுவதற்கான முயற்சிகளுள் சேவைத் தொழிலும் ஒன்றாகும். ஒருவர் மற்றொருவருக்கு ஒரு சேவையை வழங்கி அவரிடமிருந்து அதற்குரிய கூலியைப் பெறுவது சேவைத் தொழில் எனப்படுகின்றது. சேவைத் தொழிலாளியின் அறிவு, ஆற்றல், நேரம், சிரமம் என்பனவே அவரது மூலதனமாக அமைகின்றன. ஒரு சேவைத் தொழிலாளி தனது அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப வெவ்வேறு விதமான சேவைகளை வழங்கி அதற்கேற்ப வருமானத்தைப் பெறுவது இஸ்லாம் அனுமதித்த நடைமுறையாகும்.

**சேவைத் தொழிலை இரண்டாகப் பிரிக்கலாம்.**

அ). புலமை சார்ந்தவை.

உதாரணம் (கற்பித்தல், தாதி, இலிகிதர், காழி).

ஆ). உடலுழைப்பு சார்ந்தவை.

உதாரணம் : (சிற்றூழியத்தொழில், காரியாலய உதிரித்தொழில், காவல் பணி)

இவற்றுள் சில கூடிய சமூக அந்தஸ்த்தையும் அதிக ஊதியத்தையும் பெற்றுத் தரக்கூடியவை. மற்றும் சில அவ்வாறானவையல்ல. எனினுமஇஸ்லாம் மனிதன் செய்யும் தொழிலைக் கொண்டு அவனது அந்தஸ்தை அளவிடுவதில்லை. செய்யும் தொழில் எது வாயினும் அதனையும் அதைச் செய்கின்றவனையும் இஸ்லாம் முழுமையாக மதிக்கின்றது. எனவேதான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'உங்களில் ஒருவர் தனது கயிற்றை எடுத்துச் சென்று விறகுகளைச் சேகரித்து அதைக் கட்டி தன் முதுகின்மேல் சுமந்து வந்து விற்றுச் சம்பாதிப்பது மக்களிடம் யாசிப்பதை விடச் சிறந்தது' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

இஸ்லாத்தின் பார்வையில் ஒவ்வொரு மனிதனும் அல்லாஹ்விடமிருந்து விசேட ஆற்றலைப் பெற்றவனாவான். அவன் தனது ஆற்றலை இனங்கண்டு அதற்கேற்ற தொழிலைச்செய்வதே அவனுக்குச்சிறப்பானதாகும். அந்தஸ்து, ஊதியம் என்பவற்றுக்காகப் பொருத்தமில்லாத தொழிலைச் செய்வதை இஸ்லாம் அனுமதிப்பதில்லை.

அபூதர் அல்கிபாரி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகின்றார்கள்: நான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே! என்னையும் ஒரு பதவியில் அமர்த்தமாட்டீர்களா? என வினவினேன். அதற்கு நபியவர்கள் தனது கையை எனது தோளில் தட்டி அபூதர்ரே நீங்கள் பலவீனமானவர். பதவி அமானிதமாகும். தகுதியானவர் அதைப்பெற்று அதன் கடமைகளை முறையாகச் செய்யாது விடின் மறுமையில் அது கவலையும் கைசேதமும் தருவதாகும். என்றார்கள். (முஸ்லிம்)

மேலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் 'நீதிபதிகள் மூன்று வகையினர், அவர்களுள் ஒரு பிரிவினர் சுவர்க்கத்தில் இருக்க மற்ற இரு பிரிவினரும் நரகத்திலிருப்பர். சுவர்க்கத்தில் இருப்பவர் யாரெனில் உண்மையை விளங்கி அதன்படி தீர்ப்புச் சொன்னவராவார். உண்மையை விளங்கி அதற்கு மாறாகத் தீர்ப்புச் சொன்னவரும் அறிவின்றித் தீர்ப்புச் சொன்னவரும் நரகில் இருப்பர்' (திர்மிதி)

அல்லாஹ் தன் அடியார்களில் பலருக்கு வித்தியாசம், வித்தியாசமான ஆற்றல்களை, தகைமைகளை வழங்கியிருக்கும்போது அவரவர்கள் தமக்குப் பொருத்தமான உழைப்பு முயற்சிகளைத் தேடிப் பெறுவது விரும்பத்தக்கதாகும். இன்றேல் அவர்கள் அல்லாஹ்வின் அருளைத் துஷ்பிரயோகம் செய்தவர்களாகிவிடுவர்.

ஏனைய தொழில்கள் போலன்றி சேவைத் தொழில் ஊதியத்தைப் பிரதியீடாகக் கொண்டது. எனவே ஊதியத்துக்கேற்ற சேவையை வழங்குவது சேவைத் தொழில் செய்பவனின் கடமையாகும்.

சேவைத் தொழில் இன்று உலகம் முழுவதிலும் வியாபித்துள்ளது. ஒரு நாட்டின் பொருளாதார அபிவிருத்தியில் இவர்களது பங்களிப்பு பாரியதாக உள்ளது. சேவைத் தொழிலாளிகள் அனைவரும் கௌரவமாக மதிக்கப்பட வேண்டியவர்களாவர். அவர்களது சேவைகள் பாழ்படுத்தப்படாமல் உரிமைகள் பாதுகாக்கப்பட்டு உரிய நேரத்தில் உரிய வேதனமும் அவர்களுக்கு வழங்கப்பட வேண்டும். தொழிலாளியின் வியர்வை வற்றமுன் அவனது ஊதியத்தைக் கொடுத்து விடுங்கள் என்ற நபி மொழி இதனையே வலியுறுத்து கின்றது.

சேவைத் தொழிலாளியின் உரிமைகளுக்கு இஸ்லாம் உத்தரவாதம் வழங்குவது போல் அவர்கள் மீதுள்ள கடமைகள் பற்றியும் உரைக்கின்றது. தாம் பெறும் ஊதியத் துக்கும் தமது உடன்படிக்கைகளுக்கும் ஏற்ப தமது சேவையை வழங்குவது அவர்கள் மீதுள்ள தலையாய கடமையாகும். பின்வரும் அல்குர்ஆன் வசனம் இதனை நன்கு தெளிவுபடுத்துகின்றது.

*'.... மனிதர்களுக்கிடையே நீங்கள் தீர்ப்புக் கூறினால் (பாரபட்சமின்றி) நீதமாகவே தீர்ப்பளிக்குமாறு நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான்....' (4: 58)*

இவ்வசனம், நீதி வழங்கும் சேவையை அதற்குரியவர்கள் முறையாகச் செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றது.

ஊதியம் அதிகமாகத் தரப்பட வேண்டும் என எதிர்பார்க்கும் சேவைத் தொழிலாளி தான் வழங்கும் சேவையில் குறைவு செய்வதன் மூலம் அல்லாஹ்வின் சாபத்தையே பெற்றுக்கொள்கின்றான். எனவே ஒவ்வொரு சேவைத் தொழிலாளியும் தனது தொழிலை ஒரு அமானிதமாகக் கருதி அதில் நம்பிக்கை நாணயத்துடன் நடந்து கொள்ள வேண்டும். அதன் மூலம் தனது சேவைத் தொழிலை வணக்கமாக்கிக் கொள்ளும் வாய்ப்பையும் பெற்றுக்கொள்கின்றான்.

### பயிற்சி

1. வியாபாரத்தின் அடிப்படைகளையும் அவற்றின் நிபந்தனைகளையும் குறிப்பிடுக.
2. வியாபாரக் கொடுக்கல் வாங்கலில் தடுக்கப்பட்ட விடயங்கள் எவை?
3. வியாபார நடடிவடிக்கைகளின்போது இஸ்லாமிய வழிகாட்டலைப் பேணுவதன் மூலம் கிடைக்கும் நன்மைகளைப் பட்டியலிடுக.

25



# அஜ்னபி மஹ்ரமி வரையறைகளைப் பேணிடுவோம்



மனிதன் தனித்து வாழ முடியாதவன். கூட்டு வாழ்வை மேற்கொள்ளும் இயல்புடையவன். தனித்து வாழும்போது இஸ்லாம் சுமத்தியுள்ள கடமைகள் எதனையும் அவனால் நிறைவேற்ற முடியாமற் போகும். சமூகக் கடமையான பர்ளு கிபாயாவை நடைமுறைப்படுத்துவது சாத்தியமற்றதாகிவிடும். எனவே கண்டிப்பாக சமூகத்தோடு சேர்ந்து வாழவும் உறவுகளைப் பலப்படுத்தவும் வேண்டிய தேவை உள்ளது. இவ்வாறு சேர்ந்து வாழும்போதும், தொடர்புகளைப் பலப்படுத்தும்போதும் பேணிக் கொள்ள வேண்டிய வரையறைகளை விளக்குவதற்காகவே அஜ்னபீ - மஹ்ரம் பற்றிய சட்டதிட் டங்கள் தேவைப்படுகின்றன.

முதலில் மஹ்ரம் என்ற சொல்லை நோக்குவோம். இச்சொல் மொழியில் ‘ஹராம்’ என்ற கருத்தைக் கொடுக்கின்றது, பரிபாஷையில் குடும்ப உறவின் காரணத்தால் அல்லது வேறு ஏதேனும் ஒரு காரணத்தால் ஒரு பெண்ணுக்கு அல்லது ஆணுக்கு நிரந்தரமாகவே திருமணம் முடிக்கத் தடைசெய்யப்பட்ட ஆணை அல்லது பெண்ணைக் குறிப்பதற்கு இச் சொல் பயன்படுகின்றது. பின்வரும் அட்டவணை ஆண்களுக்குத் திருமணம் முடிக்க தடைசெய்யப்பட்டவர்கள் (மஹ்ரம்கள்) பற்றிய தகவலைத் தருகிறது.

### குடும்ப உறவு

- ★ தாய், தாயின் தாய்
- ★ புதல்வி, மகனின் புதல்வி, மகளின் புதல்வி
- ★ சகோதரி, தந்தைவழி சகோதரி, தாய்வழி சகோதரி
- ★ தந்தையின் சகோதரி
- ★ தாயின் சகோதரி
- ★ சகோதரனின் புதல்வி, தாய்வழி சகோதரனின் புதல்வி, தந்தைவழி சகோதரனின் புதல்வி
- ★ சகோதரியின் புதல்வி, தாய்வழி சகோதரியின் புதல்வி, தந்தைவழி சகோதரியின் புதல்வி

**பால்குடி உறவு**

★ பால் கொடுத்த தாய், அவளின் தாய்மார்கள், தந்தையின் தாய்

★ பால்குடி உறவிலான புதல்வி, மகளின் புதல்வி, மகனின் புதல்வி

★ பால்குடி உறவிலான சகோதரி, தாய்வழி சகோதரி, தந்தைவழி சகோதரி

★ பால் கொடுத்த தாயின் சகோதரி

★ பால்குடி உறவு தந்தையின் சகோதரி

★ பால்குடி உறவு சகோதரனின் புதல்வி

★ பால்குடி உறவு சகோதரியின் புதல்வி

**திருமண உறவு**

★ மனைவியின் தாய்

★ மனைவியின் புதல்வி

★ மகனின் மனைவி

★ தந்தையின் மனைவி

மேலே குறிப்பிடப்பட்டுள்ள மஹ்ரம் என்ற பிரிவில் அடங்காத அனைவரும் அஜ்னபி என்ற பிரிவில் அடங்குவர். அஜ்னபி என்ற சொல்லுக்கு அந்நியமானவர், புதியவர், உறவினர் அல்லாதவர், தொடர்பற்றவர் போன்ற பல கருத்துக்கள் உள்ளன.

இனி நாம் திருமணம் முடிக்க அனுமதிக்கப்பட்டுள்ள அஜ்னபியான ஆண்களோடு பழகும்போது பேண வேண்டிய வரையறைகளை நோக்குவோம்.

**1.** பார்வையைத் தாழ்த்துதல்

அவ்ரத்தில் உள்ளடங்கும் உடற்பகுதியைப் பார்த்தல், இரசனையுடன் பார்த்தல், காரணமின்றி தேவையின்றி தொடர்ந்து பார்த்துக் கொண்டே இருத்தல் என்பவற்றிலிருந்து தவிர்ந்து கொள்ளல்

மூவரது கண்கள் நரகைக் காண மாட்டாது...

★ அல்லாஹ்வின் பாதையில் விழித்திருந்த கண்

★ அல்லாஹ்வின் அச்சத்தால் அழுத கண்

★ அல்லாஹ் தடை செய்தவற்றைப் பார்வையிடாது தவிர்த்துக்கொண்ட கண்"

***2.*** *பெண் அவ்ரத்தை முழுமையாக மறைக்கக் கூடிய வகையிலும், மரியாதையான அமைப்பிலும் ஆடை அணிந்திருத்தல்*

***3.*** *நடை, உடை, பாவனை, பேச்சு போன்ற அனைத்திலும் இஸ்லாமிய ஒழுக்கங்களைப் பேணிக்கொள்ளல்*

***4.*** *ஆண்களின் உணர்வுகளைத் தூண்டக்கூடிய அனைத்து விதமான காரியங் களிலிருந்தும் விலகியிருத்தல்: நறுமணம் பூசுதல், மிகுந்த அலங்காரங்களைக் கொண்ட ஆடைகளை அணிதல் போன்றன வீட்டிலிருக்கும்போது தடுக்கப்படவில்லை. ஆனால், வெளியே செல்லும்போது சமூக சீரழிவுக்கு வழிவகுக்குமாதலால் அவை தடுக்கப்பட்டுள்ளன.*

***5.*** *ஆண் - பெண் தனித்திருத்தலுக்கான சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொள்ளக்கூடாது.*

*உங்களில் ஒருவர் ஓர் அந்நிய பெண்ணுடன் தனித்திருந்தால், அவர்கள் இருவருடனும் மூன்றாம் நபராக ஷைத்தான் காணப்படுகின்றான் (பஸ்ஸார்) என்பது ஹதீஸாகும்.*

***6.*** *சமூக நலனையும், தேவையையும் கருத்திற் கொண்டே இரு சாராரும் சந்திக்கின்ற நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட வேண்டும். பெண்ணின் சுபாவத்திலிருந்து அவளைத் தூரமாக்கக் கூடிய வகையில் அவளுக்கு அவப் பெயரைத் தேடிக்கொடுக்கும் வகையில் அவளது அடிப்படைப் பணியிலிருந்து அவளை அப்புறப்படுத்தும் வகையில் ஆண் - பெண் சந்திப்புக்கள் இடம்பெறுவது அவ்விருவருக்கும் மட்டுமல்ல. முழு சமூகத்து க்குமே நாசத்தைத் தேடித்தரும்.*

*எமது நலனைக் கருத்திற்கொண்டு இஸ்லாம் எமக்கு வகுத்துத் தந்துள்ள இவ்வரையறைகளைப் பேணி, உறவுகளை உயிர்ப்பிக்க வேண்டும். அதுதான் உள்ளங்கள் உயிர்வாழக் காரணமாக அமையும்.*

### பயிற்சி

1. *ஆண் - பெண் கலந்துரையாடும்போது பேண வேண்டிய வரையறைகள் யாவை? அவ்வரையறைகளைப் பேணி வராமையால் சமூகத்தில் ஏற்படும் விபரீதங்களை எடுத்துக்காட்டுக.*
2. *வரையறைகளற்ற ஆண், பெண் தொடர்புகளினால் ஏற்பட்ட தீமைகள் மூன்றினை பத்திரிகை செய்திகள் மூலம் நிரூபித்துக்காட்டுக.*
3. *மஹ்ரமி அஜ்னபி வேறுபாட்டை சுருக்கமாக விளக்குக.*

26

# மனித உரிமை

இஸ்லாம் மனித வாழ்வின் அனைத்துத் துறைகளுக்கும் வழி காட்டுகின்ற ஒரு மார்க்கமாகும். ஆதலால் அது மனிதனின் தனிப்பட்ட, குடும்ப, சமூக வாழ்வு தொடர்பான அனைத்துத் துறைகளுக்குமான நியதிகளையும், சட்டதிட்டங்களையும் வகுத்துத் தந்துள்ளது.

மனிதன், மனிதனாக வாழ்வதற்குக் கடமைகள் நிறைவேற்றப்படுவதும் உரிமைகளைப் பெற்றுக்கொள்வதும் அவசியமாகும். அல்லாஹ்வின் சிரேஷ்ட படைப்பு என்ற வகையில் எல்லா மனிதர்களும் சமமானவர்கள். எந்தக் காலத்தில் எந்தச் சூழலில் வாழ்பவராக இருந்தாலும் எந்த நாட்டை, இனத்தை, அரசியல், சமூக, பொருளாதார கல்வி நிலையைக் கொண்டவராக இருந்தாலும் அவர்கள் அனைவருக்கும் பொதுவான கடமைகளும், உரிமைகளும் உள்ளன. அவற்றை வகுத்தும், வழங்கியும் வருபவன் எல்லாம் வல்ல அல்லாஹ் ஒருவனே. ஏனெனில் அவனால் மட்டுமே எல்லோருக்கும் பொதுவான, சமநிலையான, பாகுபாடற்ற கடமைகளையும் உரிமைகளையும் காட்டிக் கொடுக்க முடியும்.

எனவேதான் இஸ்லாம், மனித உரிமைகளை அல்குர்ஆனிலிருந்தும், ஸுன்னாவிலிருந்தும் பெற்றுக்கொள்கிறது. அல்லாஹ் மனிதனுக்கு வழங்கியுள்ள



உரிமைகள் பிறப்புரிமைகளாகும். ஆதலால் அவற்றை எவரும் மறுக்க முடியாது பறிக்கவும் முடியாது; துஷ்பிரயோகம் செய்யவும் முடியாது. அவ்வாறு செய்பவர்கள் பெருந் துரோகிகள் மட்டுமல்லர். அல்லாஹ்வின் தண்டனைக்குரியவர்களுமாவர்.

அல்லாஹ் வழங்கியுள்ள உரிமைகள், மனிதன் வகுத்துக் கொடுக்கும் உரிமைகள் போல பலவீனமானவையல்ல. மனிதன் உருவாக்கிக் கொடுத்த உரிமைகள் காலத்தால், இடத்தால் வேறுபடுபவை; கொடுக்கப்படுவது போல பறிக்கப்படுபவை; ஏட்டளவில் இருப்பவை; செயல்படாதவை; அதிகார பலத்தாலோ, வேறு வகையாலோ மறுக்கப்படுபவை; பல்வேறு காரணங்களால் காலாவதியாகுபவை. இவ்வாறான நிலைகளால் மனித இன சமத்துவம் பாதிக்கப்படுகின்றது. ஒரு காலத்தில், ஒரு பிரதேசத்தில் வாழ்ந்த, வாழுகின்ற மக்கள் அனுபவித்த உரிமைகள், மற்றொரு காலத்தில் அல்லது பிரதேசத்தில் வாழ்ந்த மக்களுக்கு கிடைக்காமலும் போகலாம். நவீன உலகம் வகுத்துத் தந்துள்ள உரிமைகளில் இவ்வாறான குறைபாடுகள் காணப்படுகின்றன. அவற்றை வகுத்துத் தந்த மேற்குலகம் சிந்திப்பதற்கு, ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்பே, இஸ்லாம் மனித உரிமைகளைப் பிரகடனப்படுத்தியது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவுக்குக் குடிபெயர்ந்த - (ஹிஜ்ரத் செய்த) ஆரம்பத்தில் அங்கு வாழ்ந்த மக்களோடு செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கை மதீனா சாசனம் எனப்படுகின்றது.

இதற்கு ஆறு நூற்றாண்டுகளுக்குப் பின் 1215 இல் மகா சாசனம் 'மக்னா காட்டா' எனும் பெயரில் இங்கிலாந்தில் இரண்டாம் ஜோன் மன்னனுக்கும் மக்களுக்குமிடையிலான உடன்படிக்கை நிகழ்ந்திருக்கின்றது. எனினும் காலப்போக்கில் அதில் பல மாற்றங்களும் செய்யப்பட்டுள்ளன.

ஆனால் இஸ்லாம் வழங்கியுள்ள உரிமைகள் நிரந்தரமானவை. மனித இயல்போடு பொருந்தியவை. தொடர்ச்சியாக செயல்படுபவை. எவராலும் பறிக்க முடியாதவை. அவற்றை வழங்க மறுப்பது சட்டவிரோதமானது மட்டுமல்ல. பாவமானதும் தண்டனைக்குரியதுமாகும்.

இது பற்றி முன்னாள் நீதியரசர் கலாநிதி சீ.வி. வீரமந்திரி, 'இஸ்லாமிய சட்டவியல் ஒரு சர்வதேசப் பார்வை' என்ற தனது நூலில் புதியதொரு கோணத்தில் விளக்கம் தருகிறார். இன்றைய சர்வதேச சாசனங்கள் எதனையும் கருத்திற்கொள்ளாது, இஸ்லாமிய சட்ட இலக்கியத்தை மாத்திரம் ஆராய்ந்து, அவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள மனித உரிமைகளைப் பொறுக்கி சர்வதேச இஸ்லாமிய மனித உரிமைப் பிரகடனம் என்ற ஒரு சாசனத்தை அமைக்கலாம். அப்படி ஒன்று அமைக்கப்பட்டால் அது இன்றைய மனித உரிமை சாசனத்துக்கு ஒப்பானதாகவே இருக்கும்.

## இஸ்லாம் வழங்கியுள்ள மனித உரிமைகளிற் சில...

### 1. உயிர் வாழ்வதற்கான உரிமை

மனித உயிர் புனிதமானது. அது பாதுகாக்கப்பட வேண்டியது. ஆதலால் ஒவ்வொரு மனிதனும் எத்தகைய தலையீடுமின்றி உலகில் உயிர்வாழும் உரிமையைப் பெற்றுள்ளான்.

அல்லாஹ் புனிதமாக்கிய உயிரை முறையான நீதி விசாரணையின்றிக் கொல்லாதீர்கள் (6: 151) என்றும், எவனொருவன் ஓர் உயிரை (அநியாயமாக) கொலை செய்கிறானோ,

அவன் மனிதர்கள் அனைவரையுமே கொலை செய்தவன் போலாவான். அன்றி, எவன் ஓர் ஆத்மாவை வாழ வைக்கின்றானோ அவன் மனிதர்கள் அனைவரையும் வாழ வைத்தவன் போலாவான் (5:32) என்றும் அல்குர்ஆன் கூறுகின்றது.

### 2. சமத்துவத்துக்கான உரிமை

மனிதர்கள் அனைவரும் சட்டத்தின் முன் சமமானவர்கள். இனம், இடம், நிறம், தோற்றம் போன்றவற்றால் வேறுபடுத்த முடியாதவர்கள்.

மனிதர்களே உங்களது இரட்சகன் ஒருவனே. அறிந்து கொள்ளுங்கள். அறபிகள் அறபிகளல்லாதவர்களை விடவோ, வெள்ளை நிறத்தவர், கறுப்பு நிறத்தவர்களை விடவோ மேம்பட்டவர்களல்லர். இறையச்சத்தின் மூலமாகவே நீங்கள் உயர்ந்தவர்களாக கணிக்கப்படுவீர்கள் (பைஹகீ) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

### 3. தனி மனித சுதந்திரத்துக்கான உரிமை

மூன்று வகை மனிதர்களுக்கு எதிராக நான் மறுமையில் வாதாடுவேன். அவர்களில் ஒரு வகையினர், மனிதர்களை அடிமைப்படுத்தி அவர்களை விற்று அந்தப் பணத்தில் சாப்பிடுபவர் (புஹாரி) என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனால்தான், இஸ்லாம் அடிமை விடுதலையை ஊக்குவிக்கின்றது. அடிமை வியாபாரத்தைத் தடை செய்கின்றது.

மார்க்கத்தில் நிர்ப்பந்தமில்லை. (ஏனென்றால்) வழிகேட்டிலிருந்து நேர்வழி தெளிவாகிவிட்டது (2:256) என்று அல்குர்ஆன் குறிப்பிடுவது, தனி மனிதன் தான் விரும்பிய சமயத்தைப் பின்பற்ற முடியுமென்ற சமய சுதந்திரத்தை எடுத்துக் காட்டுகின்றது.

### 4. நீதி பெறுவதற்கான உரிமை

ஒவ்வொரு தனிமனிதனும் சட்டத்துக்கு முன் சமமாக நிறுத்தப்படுவதற்கும், சம நீதியைப் பெற்றுக் கொள்வதற்கும் உரிமை பெற்றிருக்கின்றான்.

நம்பிக்கையாளர்களே அல்லாஹ்வுக்காக நீதமாக (உண்மையான) சாட்சி சொல்பவர்களாகவே இருங்கள். ஒரு வகுப்பார் மீது உங்களுக்குள்ள துவேஷம், அவர்களுக்கு அநியாயம் செய்யும்படி உங்களைத் தூண்டாதிருக்கட்டும். (எவ்வளவு குரோதம் இருந்த போதிலும்) நீங்கள் நீதியே செலுத்துங்கள். அதுதான் பரிசுத்தத் தன்மைக்கு மிக நெருங்கியது (5:8)

எனது மகள் பாத்திமா களவெடுத்தாலும் அவரது கையைத் துண்டிக்க தயங்க மாட்டேன் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

### 5. கண்ணியத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கான உரிமை

ஒவ்வொரு தனி மனிதனுக்கும் அவனது மதிப்பை, கண்ணியத்தைக் கெடுக்கும் நடவடிக்கைகளில் இருந்தும், அடிப்படையற்ற குற்றச்சாட்டுகளில் இருந்தும் பாதுகாப்புப் பெறுவதற்கான உத்தரவாதத்தை அல்குர்ஆன் உறுதிபடுத்துகின்றது.

*நம்பிக்கையாளர்களே அநேகமான சந்தேகங்களில் இருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். ஏனென்றால் நிச்சயமாக சந்தேகங்களில் சில, பாவமானவைகளாக இருக்கின்றன. (எவருடைய குற்றத்தையும்) நீங்கள் துருவித் துருவி விசாரித்துக் கொண்டிருக்க வேண்டாம். உங்களில் ஒருவர் மற்றவர் பற்றி புறம் பேச வேண்டாம் (49:12)*

#### 6. சொத்துக்களைப் பாதுகாப்பதற்கான உரிமை

ஒவ்வொரு தனி மனிதனுக்கும் வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளைப் பெறுகின்ற உரிமை வழங்கப்பட்டுள்ளது.

*ஆண்கள் சம்பாதித்தவை ஆண்களுக்கே உரியன. (அவ்வாறே) பெண்கள் சம்பாதித்தவை பெண்களுக்கே உரியன (4:32)*

#### 7. மத உணர்வுகளுக்குப் பாதுகாப்பு வழங்கும் உரிமை

*(விசுவாசிகளே) அல்லாஹ் அல்லாத எவற்றை அவர்கள் (இறைவன் என) அழைக்கிறார்களோ, அவற்றை நீங்கள் திட்டாதீர்கள். அதனால் அவர்கள் அறியாமை காரணமாக வரம்பு மீறி அல்லாஹ்வைத் திட்டுவார்கள். இவ்வாறே ஒவ்வொரு வகுப்பாருக்கும் அவர்களுடைய செயலை நாம் அழகாக்கி வைத்திருக்கின்றோம். பின்னர் அவர்கள் தங்கள் இறைவனிடமே செல்வார்கள். அவர்கள் செய்து கொண்டிருந்ததைப் பற்றி அவன் அவர்களுக்கு அறிவித்து விடுவான் (6:108)*

இங்கு இஸ்லாம் வழங்கியுள்ள மனித உரிமைகள் சிலவற்றை மாத்திரம் எடுத்துக்காட்டியுள்ளோம். இஸ்லாத்தின் மனித உரிமைகள் என்ற பகுதி மிக விரிவானது. தனி மனிதன் முதல் சமூக வாழ்வின் அனைத்துத் துறைகளையும் உள்ளடக்கியதாக அவை பிணைந்துள்ளன. அவற்றை நீங்கள் உயர் வகுப்புகளில் தொடர்ந்து படிப்பீர்கள்.

**பயிற்சி**

1. கடமை, உரிமை என்பதை வேறுபடுத்திக்காட்டுக.
2. மனித உரிமைகள் அல்லாஹ்வினால் வகுக்கப்பட்டிருப்பதற்கான காரணங்கள் யாவை?
3. மனிதன் வகுக்கின்ற உரிமைகள் பலவீனமானவை எனப்படுவது ஏன்?
4. மனித உரிமைப் பிரகடனங்கள் இரண்டை சுட்டிக்காட்டி, அவற்றின் தோற்றத்தைச் சுருக்கமாக எடுத்துக்காட்டுக.
5. இஸ்லாம் வழங்கியுள்ள மனித உரிமைகள் இரண்டைச் சுட்டிக்காட்டி அவற்றின் சிறப்பை எடுத்துக்காட்டுக.

# 27



# இளமையும் பணியும்



மனித வாழ்வில் இளமைப் பருவம் முக்கியமான ஒரு காலகட்டமாகும். பிள்ளைப் பருவத்தை அடுத்து ஆரம்பிக்கும் இப்பருவம் இளமைப் பருவமாகும். இப்பருவத்தில் ஏற்படுகின்ற உடல் வளர்ச்சியும் உள வளர்ச்சியும் ஒருவரின் வாழ்க்கையில் பெருந் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியனவாகும். ஆதலால் இப்பருவத்தை மிகக் கவனமாகவும் ஒழுங்காகவும் அறிவு பூர்வமாகவும் அமைத்துக் கொள்வதன் மூலமே எதிர்காலத்தை ஒளிமயமானதாக உருவாக்கிக் கொள்ள முடியும்.

இன்று, இளமையைப் பயன்படுத்துவது தொடர்பான ஆய்வுகளும், அறிவுரைகளும் நிறையக் கிடைக்கின்றன. மனித வாழ்வைச் செம்மைப்படுத்த வந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் இளமைப் பருவம் பற்றி விரிவாக விளக்கியுள்ளார்கள். முதுமைக்கு முன் இளமையைப் பயன்படுத்து (ஹாகிம்) என்பது அவற்றுள் முதன்மையானது எனலாம்.

மனித வாழ்வில், இப்பருவத்தில் தான் உடற்பலமும், கால அவகாசமும், சமூகத்தின் ஒத்துழைப்பும், ஆற்றல்களை வளர்ப்பதற்கான வாய்ப்புகளும், தடையின்றிக் கிடைக்கின்றன. ஆதலால் தமக்குக் கிடைக்கின்ற இவ்வருள்களை இளைஞர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். எனவேதான், மறுமையில் விசாரணைக்குட்படுத்தப்படும் நான்கு வினாக்களுள் ஒன்று உனது வாலிபத்தை எவ்வாறு பயன்படுத்தினாய்? என்பதாகும். 'வேறு எந்த நிழலும் கிடைக்காத மஹ்ஷர் வெளியில் அர்ஷின் நிழலில் தங்குகின்ற வாய்ப்பு பெற்ற ஏழு தொகுதியினரில் ஒரு தொகுதியினராக அல்லாஹ்வின் வழிபாட்டில் வளர்ந்த இளைஞர்களும் இருப்பர்' (முஸ்லிம்) அவர்களுள் எம்மை இணைத்துக்கொள்ள வேண்டுமாயின் வாலிபத்தை சீராக வழிநடத்திச் செல்ல வேண்டும்.

இஸ்லாத்தின் வரலாற்றை நோக்கினால் அதன் வளர்ச்சியில் இளைஞர்களது பங்களிப்பு மிகைத்திருப்பதைக் காணலாம். ஷிர்க்கில் மூழ்கியிருந்த சமுதாயத்தை தவ்ஹீதின் பால் வழிநடத்திய நபி இப்றாஹிம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. இவர் தனது இளமைப் பருவத்தில், தான் வாழ்ந்த சமூகத்துக்கு அறிவுரைப்புச் செய்த வரலாறு ஸூறா பகராவில் சுட்டிக்காட்டப்படுகின்றது. நபி யூஸுப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வாலிப வயதில் கற்பொழுக்கத்தைக் காப்பாற்றிய வரலாறு ஸூறா யூசுபில் எடுத்துக்காட்டப் படுகின்றது. மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கற்பொழுக்கத்தைக் காத்த நிகழ்வு ஸூறா மர்யமில் குறித்துக் காட்டப்படுகின்றது. சமூகத்தை அடிமைத்துவத்திலிருந்து விடுவித்த மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின்

வரலாறு ஸூறா அஃராபில் குறிக்கப்படுகின்றது. அரச அத்துமீறலில் இருந்து தமது ஈமானைப் பாதுகாத்துக்கொண்ட இளைஞர்களின் வரலாறு ஸூறா கஹ்ஃபில் போதிக்கப்படுகின்றது.

நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபித்துவத்தை அடையுமுன்பே முன்மாதிரியான ஓர் இளைஞனாகத் திகழ்ந்த வரலாறு ஸீறாவில் விளக்கப்படுகின்றது. அவர்கள், தமது இளமைப்பருவத்தைப் பருவக் கோளாறுகளால் களங்கப்படுத்திக் கொள்ளாமல் மக்களால் பாராட்டப்படும் வகையில் அமைத்துக் கொண்டார்கள். அவர்களின் குணப்பண்புகளும் சீரான செயற்பாடுகளும் அழகான முன்மாதிரிகளும் சமூக ஈடுபாடும் இளைஞருக்கான வழிகாட்டல்களாக அமைந்துள்ளன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நாற்பதாவது வயதில், தான் நபியாக தேர்ந்தெடுக்கப்பட்டபோது அந்தப் பண்புகள் அவர்களுக்குப் பக்கபலமாக அமைந்தன. அவர்களை ஏற்றவர்கள், ஆதரித்தவர்கள், சூழ்ந்து நின்றவர்கள் அணியில் பெரும்பான்மையினர் இளைஞர்களாகவே இருந்தார்கள். அர்கம், அலி, முஸ்அப், ஜஃபர், இப்னு அப்பாஸ், இப்னு உமர், முஆத், ஸஅத் பின் அபீ வக்காஸ் ரழியல்லாஹு அன்ஹும் என நீண்டதோர் இளைஞர் அணியினர் அவர்களால் ஈர்க்கப்பட்டிருந்தனர். இளமையின் இயல்பறிந்து இந்த இளைஞர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பயிற்றுவித்து நெறிப்படுத்தியதன் காரணமாகவே இஸ்லாம் என்ற கோட்டையைத் தாங்கி நிற்கும் தூண்களாக இவ்வாலிபர்கள் மாறினார்கள். 'வயோதிபர்கள் எல்லாம் என்னைப் பொய்ப்பித்துக் கொண்டிருந்தபோது இளைஞர்களே என்னை விசுவாசித்து உண்மைப்படுத்தினர்' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இவர்களை சிலாகித்துப் பேசினார்கள்.

அந்த இளைஞர்களிடம் காணப்பட்ட ஈமானிய பலம், நேரிய சிந்தனை, ஒழுக்க மேம்பாடு, இலட்சிய வேட்கை, சிரமங்களை எதிர்கொள்ளல், அறிவுத்தாகம், கட்டுப்பாடான வாழ்வு, உழைத்து வாழல், அர்ப்பண சிந்தை போன்ற குணநலன்கள் அடுத்துவரும் சந்ததிகளுக்குப் பாடமாக அமைந்தன.



இவர்களின் அடிச்சுவட்டில் வளர்ந்து வந்த அடுத்த பரம்பரையில் சாதனை படைத்த இளைஞர்களின் பட்டியல் நீளமானது. உன்னத ஆட்சியாளர் உமர் இப்னு அப்துல் அஸீஸ் ரஹிமஹுல்லாஹ் ஸ்பெய்னை வெற்றி கொண்ட தாரிக் பின் ஸியாத், சிந்துவை வெற்றி கொண்ட முஹம்மத் பின் காசிம், கொன்ஸ்தாந்தி நோபிளை வெற்றி கொண்ட முஹம்மத் அல் பாத்திஹ், ஸஹீஹுல் புஹாரியைத் தொகுத்த இமாம் புஹாரி, உஸூலுல் பிக்ஹை தொகுத்தளித்த இமாம் ஷாபிஈ அறபு இலக்கண வல்லுனரான இமாம் ஷீபவைஹி தம் இளமைப் பருவத்திலேயே சாதனை படைத்தமை அவதானிக்கத்தக்கதாகும்.

இளமை வாள் போன்றது. அதனை ஆக்கபூர்வமான செயல்களுக்கும் பயன்படுத்தலாம். அழிவுக்கான முயற்சிகளிலும் ஈடுபடுத்தலாம். ஏனெனில், அந்தப்பருவம் எதில் கவர்ச்சியூட்டப்படுகின்றதோ அதன்பால் ஈர்க்கப்படும். அன்று போலவே இன்றும் இளைஞர்களை அழிவுப்பாதையில் இட்டுச் செல்வதற்கான வாயில்கள் நவீனம் எனும் பெயரில் சாதனங்களாகவும், செயற்பாடுகளாகவும் திறந்து விடப்பட்டுள்ளன. திட்டமிட்ட முறையில் கவர்ச்சிகரமாக அழைத்துகொண்டிருக்கின்றன. அழகு சாதனங்கள், அலங்கார வடிவங்கள், சரீர இச்சைக்கான தூண்டல்கள், பொழுதுபோக்குச் சாதனங்களாகவும், செல்வம் திரட்டும் வழிகளாகவும் எடுத்துக்காட்டப்படுகின்றன. ஆக்கபூர்வமாக வழிநடத்தப்பட வேண்டிய இளைஞர் களையும், யுவதிகளையும் அழிவுக்கு இட்டுச் செல்கின்றன.

இந்த நிலையில் இளமையைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இளைஞர்களுக்கு மட்டும் உரியதல்ல. சமூகத்துக்கும் இதில் பெரும் பங்குண்டு. இளமையில் ஒன்றிணையும் சகபாடிகள் இளமையைப் பாழ்படுத்துவதில் நிறைய பங்கேற்கின்றனர். நல்ல நண்பர்களையும், நல்ல முன்மாதிரிகளையும் (ஹீரோ) இனங்காண வேண்டிய பொறுப்பு இளைஞர்களுக்கும், இனங்காட்ட வேண்டிய பொறுப்பு சமூகத்துக்கும் உண்டு.

இளைஞர், யுவதிகள் தமது இளமைப்பருவத்தை அல்லாஹ்வின் பொருத்தத்துக்கும், மக்களின் விருப்பத்துக்கும் உரியதாக அமைத்துக்கொள்ள வேண்டும். அற்ப இன்பங்களுக்கும், தற்காலிக சுகங்களுக்கும் இடமளிக்காமல் தமது இளமையை இலட்சிய உணர்வோடும் திட்டமிட்ட செயல்களோடும் இணைத்துக்கொள்ள வேண்டும். மனிதன் உடலாலும், அறிவாலும், ஆன்மாவாலும் இயக்கப்படுகின்றான். எனவே, இவை மூன்றும் சமநிலையில் வளர்க்கப்பட வேண்டும்.

இளமைப் பணி, சீராக அமைய வேண்டுமெனில் தெளிவான இலக்கோடும், நிதானமான அணுகுதலோடும் கடுமையாக உழைக்க வேண்டும். தூரநோக்கோடு செயல்பட வேண்டும். விரிவான அறிவு, சீரான ஒழுக்கம், சமூக அபிமானம், தியாக உணர்வு, நல்ல தொடர்பு போன்றவற்றை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். போலிகளைக் கண்டு மயங்கிவிடக்கூடாது. அற்ப விடயங்களில் நேரத்தை வீணாக்கக் கூடாது. நவீன தொழில்நுட்ப சாதனங்கள் கட்டுப்பாட்டுடன் பயன்படுத்தப்பட வேண்டும். ஆக்க முயற்சி களுக்கன்றி அழிவு வேலைகளுக்காக திட்டமிடுவதோ, ஒத்துழைப்பதோ, பங்கேற்பதோ முற்றாகத் தவிர்க்கப்பட வேண்டும்.

இளமையை இனிய வழியில் இட்டுச் செல்வதற்கு ஆதாரமாக அமைவது சமய பக்தியும், சமயத் தொடர்புகளுமாகும். இளமையைத் தீய செயல்களில்

*இருந்து கட்டுப்படுத்துவதில் இறை பக்தி - தக்வாவுக்கு முதலிடம் உண்டு. அதனை வளர்த்துக்கொள்வதற்காக ஆன்மீகச் செயற்பாடுகளில் ஈடுபட வேண்டும். திக்ர், ஸலவாத், தஸ்பா, இஸ்திஃபார், திலாவதுல் குர்ஆன், ஸுன்னத்தான தொழுகைகள் போன்றவற்றுக்காக தினமும் நேரம் ஒதுக்கப்பட்ட வேண்டும். வாசிப்பதிலும், கற்பதிலும் அதிக நேரத்தைச் செலவிடுதல் வேண்டும். நல்லவர்களோடு சேர்ந்து பழக வேண்டும். அவர்களிடம் நஸீஹத் (உபதேசம்) பெற வேண்டும். தினமும் உடற்பயிற்சியில் ஈடுபடுவதோடு போசாக்கான உணவுப் பொருள்களுக்கு முன்னுரிமை வழங்க வேண்டும். உற்சாக பானங்கள், ஆடம்பர உணவுப் பொருட்கள், உடையலங்காரம், பொழுதுபோக்குகள் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தப்பட வேண்டும். நாட்டுக்கும், சமூகத்துக்கும் பயன்தரக்கூடிய தொழிற் கல்வியைத் தேடிக் கொள்ள வேண்டும். நாம் தனித்து வாழ முடியாது. இணைந்து வாழ வேண்டும். அதற்காக ஒன்றிணைந்து செயற்பட வேண்டும்.*

*இதோ அல்லாமா இக்பால் இளைஞர்களுக்காகப் பாடுகின்றார்.*

**உள்ளத்தின் சோகப் பெருமூச்சின் வேதனையை**
**இளைஞர்களுக்கு அளிப்பாயாக!**
**எனது அன்பையும் ஆழமான தீட்சண்ய பார்வையையும்**
**அவர்களுக்குக் கொடுப்பாயாக!**
**எனது அதிகாலைப் புலம்பலை**
**இளைஞர்களுக்குக் கொடுப்பாயாக!**
**இளம் ராஜாளிக் குஞ்சுகளுக்கு**
**மீண்டும் இறக்கையைக் கொடு**
**இறைவா, எனக்கு ஒரே ஒரு ஆவல்**
**எல்லோருக்கும் எனது தீட்சண்ய பார்வையைக் கொடு!**

*ஆகவே இளமையை உரிய முறையில் பயன்படுத்தி நற்பேறடைவோமாக!*

### *பயிற்சி*

*பின்வரும் தொடர்களுக்கு விளக்கம் தருக.*

1. *'முதுமைக்கு முன் இளமையைப் பயன்படுத்து'*
2. *'நல்ல நண்பர்களையும், நல்ல முன்மாதிரிகளையும் இனங்காண வேண்டிய பொறுப்பு சமூகத்துக்கும் உண்டு'*
3. *'நவீன விஞ்ஞான தொழில்நுட்ப சாதனங்களை கட்டுப்பாட்டுடன் பயன்படுத்த வேண்டும்'*
4. *'இளமை வாள் போன்றது'*

# 28

# உடல் உள ஆரோக்கியம்

## உடல் ஆரோக்கியம்

மனிதன் பெற்றுள்ள அருட்கொடைகளுள் ஆரோக்கியம் முக்கியமானதாகும். 'ஒருநாள் விடிகின்றபோது ஆரோக்கியமான உடலுடனும் பாதுகாப்பான வீட்டுடனும் அன்றைய நாளின் உணவுடனும் ஒருவன் காணப்படுவானாயின் அவன் உலகை அதன் அனைத்து பாகங்களுடனும் பெற்றுக்கொண்டவனாவான்' (திர்மிதி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

இஸ்லாம் உடல் ஆரோக்கியத்தை வலியுறுத்துகின்ற வாழ்வு முறையாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூட ஆரோக்கியத்தை வேண்டி அல்லாஹ்விடம் நிதமும் பிரார்த்தித்து வந்துள்ளார்கள். 'இறைவா! எனது உடலிலும் எனது பார்வை செவிப் புலன்களிலும் ஆரோக்கியத்தை ஏற்படுத்துவாயாக' (அபூதாவூத்) என அவர்கள் பிரார்த்தித்தார்கள். 'பலசாலியான ஒரு முஃமின் பலவீனமான ஒரு முஃமினை விட சிறந்தவனும், அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானவனுமாவான்' (முஸ்லிம்) எனக் குறிப்பிட்டார்கள்.



ஆகவே ஒரு முஸ்லிமுக்கு ஆரோக்கியம் இன்றியமையாதது. ஏனெனில் அவன் நிறைவேற்ற வேண்டிய அடிப்படை இபாதத்கள், சமூகப்பணிகள், வாழ்வதற்கான உழைப்பு முதலான அனைத்தையும் நிறைவேற்றுவதற்கு உடலாரோக்கியம் அவசியமாகும். ஆதலால் ஸஹாபாக்கள் உடலை ஆரோக்கியத்துடனும் உற்சாகத்துடனும் வைத்திருந் தார்கள். பகலில் குதிரை வீரர்களாகவும் இரவில் துறவிகளாகவும் வாழ்ந்து தம்மை திடப்படுத்திக் கொண்டார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஐந்து நிகழ்வுகள் இடம்பெறுவதற்கு முன்னர் ஐந்து வாய்ப்புக்களைப் பயன்படுத்திக்கொள்ளுங்கள் என்றார்கள். அதிலொன்று நோய் வருமுன் ஆரோக்கியத்தைப் பயன்படுத்தல் என்பதாகும். ஆரோக்கியமான உடலிலேயே ஆரோக்கிய மான உள்ளம் காணப்பட முடியும். இதற்காகப் பல வழிமுறைகளைக் கையாள வேண்டியிருக்கின்றது.

### 1. உணவுப் பழக்கம்





ஒரு முஸ்லிம் உணவில் நடுநிலைமையைப் பேண வேண்டும். அளவு கடந்து உண்பதையும் உடலுக்கு ஒவ்வாதவற்றை உட்கொள்வதையும் தவிர்த்துக்கொள்ள வேண்டும். 'மனிதன் வயிற்றைத் தவிர கெட்ட பாத்திரம் ஒன்றை நிரப்புவதில்லை. சாப்பிட வேண்டும் என்ற நிலை ஏற்பட்டால் மூன்றிலொரு பகுதி உணவுக்கும் மூன்றிலொரு பகுதி நீருக்கும் மூன்றிலொரு பகுதி காற்றுக்கும் வகுத்துக்கொள்ள வேண்டும்' (திர்மிதி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

இது பற்றி விளக்கிய உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் 'உண்டும், குடித்தும் வயிற்றை நிரப்புவது பற்றி உங்களை எச்சரிக்கிறேன். வயிறு நிரம்ப உண்பது உடம்பை வீணடிக்கும். நோயை உண்டாக்கும். தொழுகையில் சோம்பலை ஏற்படுத்தும். ஆதலால் அந்த இரண்டிலும் நடுநிலைமையைப் பேணிக்கொள்ளுங்கள். அது உடம்பை சீர்படுத்தி வீண் விரயத்தையும் தவிர்க்கும். நிச்சயமாக அல்லாஹ் கொழுத்த உடல்களை வெறுக்கிறான். மனிதன் மார்க்கத்தைவிட மனோ இச்சையைத் தேர்ந்தெடுத்தால் அழிந்துவிடுவான்' (கன்ஸுல் உம்மால்) என்றார்கள்.

ஆதலால், ஒரு முஸ்லிம் தனது உடலாரோக்கியத்தைக் காத்துக்கொள்ளும் வகையில் தனது உணவுப் பழக்கங்களை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். புகைத்தல், போதைப் பொருள் பாவனை போன்றவற்றை முற்றாகவே தவிர்த்துக்கொள்ள வேண்டும். அவை ஹராமானவை மட்டுமன்றி உடலாரோக்கியத்தையும் சுகவாழ்வையும் இல்லாதொழிக்கும். இன்று மனிதன் உற்சாக மென்பானங்களுக்கு அடிமையாகியுள்ளான். கோப்பி, தேநீர் போன்ற அனுமதிக்கப்பட்ட உற்சாக பானங்களைக்கூட அளவுக்கதிகமாக உட்கொள்வது உடலாரோக்கியத்தைப் பாதிக்கும்.

## 2. உடற் பயிற்சி

உடலை சீரான கட்டுக்கோப்பில் வைத்திருப்பதும் இபாதத் ஆகும். சீரான உடல் நலத்திற்கு உடற் பயிற்சி இன்றியமையாதது. உடலுறுப்புக்கள் உறுதியாகவும் சீராகவும் இருப்பதற்கும், நோயெதிர்ப்புச் சக்தியை வலுப்படுத்தி நோய்க் கிருமிகளின் தாக்கங்களில் இருந்து காத்து, உற்சாகத்துடன் இயங்குவதற்கும் உடற் பயிற்சி துணை செய்கின்றது. இவ்விடயத்தை இஸ்லாம் உற்சாகப்படுத்தியுள்ளது. உங்கள் பிள்ளைகளுக்கு நீந்தவும், அம்பெறியவும், குதிரைச் சவாரி செய்யவும் கற்றுக்கொடுங்கள் என அது போதிக்கின்றது. எனவே ஒரு முஸ்லிம் தனது வயது, பருமன், இயலாமை போன்றவற்றைக் கருத்திற்கொண்டு உடற்பயிற்சி செய்துவர வேண்டும்.

## 3. சுத்தம்

ஆரோக்கியமாக இருப்பதற்கு மற்றொரு வழி சுத்தமாக இருப்பதாகும். உடலையும், உடையையும் மட்டுமன்றி உணவு, உறைவிடம், தொழிற்தளம், பாவனைப் பொருட்கள் முதலான அனைத்திலும் சுத்தம் பேண வேண்டும். குளித்து உடம்பைச் சுத்தமாக வைத்திருப்பதன் அவசியம் பற்றியும் இஸ்லாம் எடுத்தியம்பியுள்ளது. 'நீங்கள் குளிப்பு கடமையானவர்களாக இல்லாதிருந்தாலும் ஜும்ஆ நாளில் குளித்து தலையைக்கழுவிக் கொள்ளுங்கள். மணம் பூசிக்கொள்ளுங்கள்' (புஹாரி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

மனிதன் எல்லா நிலையிலும் சுத்தமாக இருக்க வேண்டுமென இஸ்லாம் வலியுறுத்துகின்றது. தூய்மையான நறுமணப் பொருட்கள் மூலம் உடம்பை நறுமணம் கமழச் செய்வது சிறப்புக்குரியதாகும்.

## 4. ஓய்வு

உடல் ஆரோக்கியத்தைப் பேணுவதில் ஓய்வுக்கும் பங்கு உண்டு. களைப்புற்ற உடம்பால் உற்சாகமாக இயங்க முடியாது. கடமைகளை உயிரோட்டத்துடன் நிறைவேற்ற முடியாது. நாம் ஓய்வெடுத்துக்கொள்ளும்போது எமது உடலுறுப்புக்கள் அலுப்பு, சோர்வு, களைப்பு போன்றவற்றிலிருந்து நீங்கி புத்துணர்ச்சி பெறுகின்றன. மீண்டும் உற்சாகத்துடன் பணியாற்றுவதற்காக சக்தியையும், உத்வேகத்தையும் பெற்றுக்கொள்கின்றன. இதனைத்தான், 'இன்னும் தன்னருளால் இரவையும் பகலையும் உங்களுக்கு அவனே ஆக்கினான். (இரவை) அதில் நீங்கள் இளைப்பாறுவதற்கும் பகலை (அதில்) நீங்கள் அவனுடைய அருளைத் தேடுவதற்கும் இன்னும் நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்து வதற்காகவும் (அவ்வாறு) ஆக்கியுள்ளான். (28:73) என்று அல்குர்ஆன் கூறுகின்றது.

எனவே ஒவ்வொரு முஸ்லிமும் தனது உடம்பை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள வேண்டும். அதில் காட்டப்படும் அலட்சியம் மனிதனை ஆபத்தில் வீழ்த்திவிடும். இதனால்தான் 'அதிகமான மக்கள் அலட்சியமாக நடந்துகொள்ளும் இரண்டு அருட் கொடைகள் ஆரோக்கியமும் ஓய்வுமாகும்' (புஹாரி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவுறுத்தியுள்ளார்கள்.

## உள ஆரோக்கியம்

உடலாரோக்கியம் போலவே மனிதனுக்கு உள ஆரோக்கியமும் அவசியமான தாகும். இஸ்லாம் உடலைப் போலவே உள்ளத்துக்கு முன்னுரிமை வழங்க வேண்டு மெனக் கேட்டுக்கொள்கின்றது. உள்ளத்தின் களங்கமற்ற நிலையில்தான் உடம்பினால் நிறைவேற்றப்படும் செயல்களின் அங்கீகாரத்தை அல்லாஹ் வைத்திருக்கின்றான். 'அல்லாஹ் உங்களது உடல்களையோ, வடிவங்களையோ நோக்குவதில்லை. உங்கள் உள்ளங்களையும், செயல்களையுமே பார்க்கிறான்.' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். *(புஹாரி, முஸ்லிம்)*

இதனால்தான் இஸ்லாத்தின் பார்வையில் உறுப்புகளின் நற்செயலை விடவும் உள்ளத்தின் நற்செயல்களுக்கான நன்மைகள் அதிகமாகக் கொடுக்கப்படுகின்றன. இவை உள்ளத்தின் பிரதிபலிப்புகளாகும். ஆரோக்கியமான உள்ளத்திலிருந்தே ஆரோக்கியமான நற்செயல்கள், சிந்தனைகள் உருவாக முடியும். நோயுற்ற உள்ளத்திலிருந்து பாவங்கள்தான் வெளியாகும். உடலுறுப்புகளின் பாவங்களைவிட உள்ளத்தின் பாவங்கள் கடுமையானவை.

இதன் காரணமாகத்தான் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பாவத்தைவிட, இப்லீஸின் பாவம் பாரியதாக நோக்கப்பட்டது. ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பாவம் உறுப்புகளால் நேர்ந்தது. அதனை உணர்ந்து அவர்கள் மன்னிப்பு கேட்டார்கள். அல்லாஹ் அதனை மன்னித்துவிட்டான். ஆனால், இப்லீசுடைய பாவம் உள்ளத்தின் பாவம். அவன் அதனை உணரவேயில்லை. அதற்கான தண்டனையாக சபிக்கப்பட்டான். வெளியேற்றப்பட்டான்.

உறுப்புகளின் பாவத்தை மனிதன் உடனே உணர்ந்து கொள்வான். ஆனால், உள்ளத்தின் பாவத்தை உணர்வதற்கான வாய்ப்பு குறைவாகவே உள்ளது. 'யார் (உள்ளமாகிய) அதனை சீர்படுத்துகின்றாரோ அவர் வெற்றியடைந்துவிட்டார். யார் அதனை (பாவங்களால்) மூடி மறைக்கின்றாரோ அவர் தோல்வியடைந்துவிட்டார். (91:9-10) என்று குர்ஆன் குறிப்பிடுகின்றது.

ஆதலால் உடலாரோக்கியத்தைவிட உள ஆரோக்கியம் முதன்மைப்படுத்தப்பட வேண்டும். உள்ளம் மறைந்திருந்தாலும் அதுவே உடலை இயக்குகின்றது. ஒருவரது உள்ளம் நல்லதாக இருந்தால் அவர்களது செயல்கள் சீரானதாக அமையும். உள்ளம் கெட்டுவிட்டால் அவரது செயல்களும் கெட்டுவிடும் என்ற கருத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். 'உடம்பில் ஒரு தசைத்துண்டு உண்டு. அது சீரானால் முழு உடம்பும் சீராகிவிடும். அது சீர்கெட்டுவிட்டால் முழு உடம்பும் சீர்கெட்டுவிடும். அதுதான் உள்ளம்' (புஹாரி) உள்ளம் பாதிப்படைந்தால் உடல் நோயுறுகிறது என்பதை மருத்துவ உலகம் அங்கீகரிக்கின்றது. மனிதன் உடலை நோக்க, அல்லாஹ் உள்ளத்தை நோக்குகின்றான். உள்ளம் என்பது மனிதனுக்கு மட்டுமே உரியதொரு சிறப்பாகும். உள்ளத்துக்கு மட்டுமே இறைவனை அறியும் சக்தி உண்டு.

உடலைப் போன்றே உள்ளமும் நோயுறுகின்றது. உடல் போசாக்கின்மையாலும், தொற்றுக்களாலும், திடீர் நிகழ்வுகளாலும் பாதிக்கப்பட்டு நோயுறுகின்றது. இதுபோல, அல்லாஹ் மீதான நம்பிக்கையில் ஏற்படும் தளர்வு, மிதமிஞ்சிய ஆசை, ஷைத்தானிய

தூண்டுதல், கட்டுப்பாடற்ற வாழ்வுமுறை, பிறரைத் திருப்திப்படுத்துவதற்காக வாழல் போன்ற காரணங்களால் உள்ளம் நோயுறுகின்றது. இதன் காரணமாக பெருமை, பொறாமை, மற்றவர்களை இழிவாகக் கருதுதல், சூழ்ச்சியிலும் மோசடியிலும் ஈடுபடத் தூண்டல், சுயநலம் போன்ற நோய்கள் தொற்றிக்கொள்கின்றன. இவர்களின் முகத்தில் மலர்ச்சி இருக்காது. வாழ்வில் திருப்தி இருக்காது. எப்போதும் குழம்பிய நிலையிலேயே காணப்படுவார்கள்.

இந்நிலையிலிருந்து விடுபடுவதற்கு எப்போதும் அல்லாஹ்வை நினைவுபடுத்த வேண்டும். திக்ர், துஆ, இஸ்திஃபார் போன்றவற்றில் ஈடுபட வேண்டும். சொற்ப நேரமாவது தனித்திருந்து அல்லாஹ்வுடன் முனாஜாத் செய்தல், படைப்புகள் பற்றி சிந்தித்தல், இரவு வணக்கங்களில் ஈடுபடல், சுன்னத்தான தொழுகைகளை அதிகரித்தல், நபிலான நோன்புகளை நோற்றல், தர்மம் செய்தல் போன்றன உள்ளத்தைப் போசிக்கும். உள நோய்களில் இருந்து பாதுகாக்கும்.

ஆகவே உடலாரோக்கியத்தையும், உள ஆரோக்கியத்தையும் பேணி நல்ல மனிதர்களாக வாழ்ந்து இறையருள் பெற்று சுவனம் செல்ல முயற்சிப்போமாக!

### பயிற்சி

சுருக்கமான விடை தருக

1. உடல் ஆரோக்கியம் என்றால் என்ன?
2. உள ஆரோக்கியம் என்றால் என்ன?
3. உடலாரோக்கியத்தைப் பாதுகாப்பதற்கான அனுட்டானங்கள் பற்றி சுருக்கமாக எடுத்துக்காட்டுக.
4. உடலாரோக்கியத்தைத் தக்க வைத்துக்கொள்வதற்காக நாம் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்காட்டுக.
5. உளவாரோக்கியத்துக்கு இறைதொடர்பு எவ்வாறு உதவுகிறது என்பதை விளக்கி ஒரு சிறு கட்டுரை எழுதுக.



# 29

# நடுநிலைமை பேணல்



இரு தீவிரங்களுக்கிடையில் நடுநிலையான நிலையை ஏற்பது **வஸதிய்யா** எனப்படுகின்றது. இஸ்லாம் எல்லா விவகாரங்களிலும் இந்த நடுநிலை போக்கையே விரும்புகின்றது. அதனையே கடைப்பிடிக்குமாறு ஏவுகின்றது. இதனையே அல்குர்ஆன்

*(விசுவாசிகளே) அவ்வாறே (ஏற்றத்தாழ்வற்ற) நடுநிலையான சமுதாயத்தினராகவும் நாம் உங்களை ஆக்கினோம். ஆகவே, நீங்கள் (மற்ற) மனிதர்களுக்கு (வழிகாட்டக்கூடிய) சாட்சிகளாக இருங்கள். (நம்முடைய) தூதர் உங்களுக்கு (வழிகாட்டக்கூடிய) சாட்சியாக இருப்பார். (2:143)* என்று சுட்டிக்காட்டுகின்றது.

இங்கு முஸ்லிம் சமுதாயத்தை உம்மதன் வஸதன் - நடுநிலைச் சமுதாயம் என்று குறிப்பிடுகின்றது. இதனால்தான் சமூகம் சார்ந்த அல்லது தனிமனித சமூக வாழ்வு தொடர்பான எல்லா விவகாரங்களும் நடுநிலமையான போக்கைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்பது எதிர்பார்க்கப்படுகின்றது. உலகியல் விவகாரங்களில் மட்டும் தீவிரமாக ஈடுபடுவதும் ஆன்மீக விவகாரங்களில் மட்டும் தீவிரமாக ஈடுபடுவதும் வஸதிய்யாவின் நிலைப்பாட்டுக்கு முரணானதாகும்

ஒருமுறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் அப்துல்லா இப்னு அம்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும், இடையில் ஓர் உரையாடல் இடம்பெற்றது.

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் :-*

*நீர் பகல் முழுவதும் நோன்பு நோற்று இரவு முழுவதும் நின்று வணங்குவதாகக் கேள்விப்பட்டேன்.*

*இப்னு அம்ர்:-*

*ஆம் அல்லாஹ்வின் தூதரே!*

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்:-*

*அவ்வாறு செய்யாதீர்கள். நோன்பு வையுங்கள். நோன்பின்றியும் இருங்கள். (இரவில்) தொழுதும் வாருங்கள். தூங்கவும் செய்யுங்கள். உங்கள் உடலுக்கும், உங்கள் மனைவிக்கும் உங்களைச் சந்திக்க வருபவர்களுக்கும் நீங்கள் செலுத்த வேண்டிய கடமைகள் உள்ளன. (புஹாரி)*

*இதைக் கேட்ட இப்னு அம்ர் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்கள் அதுவரை ஆன்மீக செயற்பாடுகளில் தான் கையாண்ட கடும்போக்கைத் தளர்த்திக் கொண்டார்கள்.*

*அல்லாஹ்வின் தூதரது வீட்டுக்குச் சென்று அவர்களது வாழ்வுமுறையைக் கேட்டறிந்த பின் ஸஹாபாக்கள் சிலர், தாங்கள் நிறைவேற்றி வரும் இபாதாக்கள் போது மானவையல்ல என்ற முடிவுக்கு வந்தார்கள். அவர்களுள் ஒருவர் 'நான் இரவு முழுவதும் (தூங்காமல்) தொழுது வருவேன்' என்றார். அடுத்தவர், 'நான் வருடம் முழுவதும் (தவறாமல்) நோன்பு நோற்பேன்' என்றார். மூன்றாமவர் 'நான் மணமுடிக்க மாட்டேன்' என்றார். இதைக் கேள்வியுற்ற நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள், 'அல்லாஹ்வின் பெயரால், நான் உங்களைவிட அல்லாஹ்வை அதிகமாக அஞ்சுகிறேன். அடிபணிகிறேன். இருந்தும் நான் நோன்பு நோற்கிறேன். நோன்பை விடவும் செய்கிறேன். பெண்களை மணமுடித்தும் இருக்கிறேன். எனது சுன்னாவைப் பின்பற்றாதோர் என்னைச் சேர்ந்தவரல்லர்' (புஹாரி) என்றார்கள்.*

*அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது: '(உலோபியைப் போன்று உங்களுடைய பொருள்களில் ஒன்றையுமே செலவு செய்யாது) உங்கள் கையை கழுத்தில் மாட்டிக் கொள்ளாதீர்கள். (உங்களிடமிருப்பதை எல்லாம் கொடுத்து) உங்களுடைய கையை முற்றிலும் விரித்தும் விடாதீர்கள். அதனால் நீங்கள் நிந்திக்கப்பட்டவராகவும் (கையில் எதுவுமில்லாது) துக்கப்பட்டவராகவும் அமைந்துவிடுவீர்' (17:29)*

*இங்கு உலோபியாகவும் வாழ வேண்டாம். ஊதாரியாகவும் வாழ வேண்டாம் எனக்கூறும் அல்குர்ஆன், செலவிடுவதில் நடுநிலைப் போக்கை கடைப்பிடிக்குமாறு அறிவுறுத்துகின்றது.*

*ஹஜ்ஜை நிறைவேற்றிக் கொண்டிருந்த நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் முஸ்தலிபாவில் தங்கியிருந்தார்கள். தமக்காக (மீக்காத்களில் எறிவதற்காக) கற்களை சேகரித்து வரும்படி இப்னு அப்பாஸ் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்களை அனுப்பி வைத்தார்கள். அளவில் பெரிய கற்களைப் பயன்படுத்துவதே சிறந்தது என மக்கள் அதில் ஆர்வம் கொண்டிருந்தபோது, இப்னு அப்பாஸ் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்கள் சிறிய கற்களைப் பொறுக்கி வந்தார்கள். அக்கற்களை அங்கீகரித்த நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் 'மார்க்கத்தில் மிதமிஞ்சிய தன்மை குறித்து எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள் (அஹ்மத்) என்று அறிவுறுத்தினார்கள். மிதமிஞ்சிய நுணுக்கத்து டன் செயல்பட்டோர் அழிவுக்குள்ளாகட்டும்' என்று மூன்று முறை கூறி எச்சரித்தார்கள் (முஸ்லிம்). இவ்வாறு குறிப்பிடப்பட்டோர் வரம்பு மீறி, மிதமிஞ்சிய தன்மையுடன் நடந்து கொள்வோர் என இமாம் நவவி ரஹிமஹுுல்லாஹ் அவர்கள் விளக்கமளிக்கின்றார்கள். இது நடுநிலை தவறுவோர் இம்மையிலும், மறுமையிலும் நஷ்டமடைவர் என்பதை எடுத்து க்காட்டுகின்றது.*

*நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் மிகத் தெளிவாகக் கூறுகிறார்கள்: பெருஞ் சுமைகளை உங்கள் மீது ஏற்றிக் கொள்ளாதீர்கள். நீங்கள் அழிந்து போவீர்கள். உங்களுக்கு முன் சென்ற மக்கள், தம் மீது அதிக சுமைகளை ஏற்றிக் கொண்டார்கள். இதனால் அழிந்து போனார்கள். அவர்களது எச்சங்கள் மடாலயங்களிலும், ஆசிரமங்களிலும் காணப்படுகின்றன. (முஸ்னத் அஹ்மத்).*

உடலைத் தந்த அல்லாஹ், ஆன்மாவையும் வழங்கியுள்ளான். உடலைப் பேணிப் பாதுகாப்பது போல ஆன்மாவையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். உடலை வளர்த்து ஆன்மாவைப் புறக்கணிப்பதோ, ஆன்மாவை வளர்த்து உடலைப் புறக்கணிப்பதோ இஸ்லாம் அல்ல. அடியான் அல்லாஹ்விற்குச் செலுத்த வேண்டிய கடமைகளை செவ்வனே நிறைவேற்றுவது போல் அடியார்களுக்கும், தனது சகோதர முஸ்லிம்களுக்கும், முஸ்லிம் அல்லாதவர்களுக்கும் செலுத்த வேண்டிய கடமைகளையும் நிறைவேற்றி வர வேண்டும்.

ஒருமுறை, முஆத் இப்னு ஜபல் ரழியல்லாஹுஅன்ஹு அவர்கள் தொழுகையை முன்னின்று (இமாமாக) நடத்திக் கொண்டிருந்தார்கள். அல்லாஹ் மீது கொண்ட பக்தியின் காரணமாக தொழுகையில் நீண்ட ஸூறாவை ஓதிக் கொண்டிருந்தார்கள். அவருக்குப் பின்னால் நின்று தொழுத ஒருவர், பொறுமை இழந்தவராக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் முறையிடச் சென்றார். முஆத் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை விளித்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'முஆதே நீங்கள் மக்களை சோதனைக்குள்ளாக்குகிறீர்களா?' என்று மூன்று முறை கடுமையாகக் கூறினார்கள். பின்னர்' மக்களுக்கு இலகுவாக்கி வையுங்கள். கஷ்டப்படுத்தாதீர்கள். ஆர்வமூட்டுங்கள். வெறுப்படையச் செய்யாதீர்கள்' (முஸ்லிம்) என்று அறிவுரை பகர்ந்தார்கள். இங்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நடுநிலைப் போக்கை எடுத்துக்காட்டுகின்றார்கள்.

அல்குர்ஆன் கூறும் மற்றும் சில போதனைகளை அவதானியுங்கள்:

'உண்ணுங்கள். பருகுங்கள். எனினும் (அவற்றில்) அளவு கடந்து (வீண்) விரயம் செய்யாதீர்கள்' *(7:31)*

'உனது நடையில் மத்திய தரத்தைக் கடைப்பிடி. உனது சத்தத்தைத் தாழ்த்திக் கொள். சத்தங்களில் மிக வெறுக்கத்தக்கது கழுதையின் (உரத்த) சத்தமாகும்' *(31:19)*

இங்கே உண்பதிலும், பருகுவதிலும் அளவு மீறுவதையும், பேசும்போது ஒலி எழுப்புவதில் எல்லை மீறுவதையும், நடப்பதில் மிகத் தாமதமாகவோ, மிக வேகமாகவோ நடப்பதையும் கண்டித்து நடுநிலையைப் பேணுமாறு அல்குர்ஆன் கட்டளையிடுகின்றது.

இம்மை, மறுமை பற்றிய விவகாரங்களில் நடுநிலை பேண வேண்டுமென்பதை அல்குர்ஆனின் கீழ்வரும் இரண்டு வசனங்களும் தெளிவு படுத்துகின்றன. 'எங்கள் இறைவனே, எங்களுக்கு (வேண்டியவைகளை எல்லாம்) இம்மையிலேயே அளித்து விடுவாயாக என்று கோருபவர்களும் மனிதர்களில் உள்ளனர். ஆனால் இத்தகையவர்களுக்கு மறுமையில் யாதொரு பாக்கியமுமில்லை. அன்றி, எங்கள் இறைவனே, எங்களுக்கு நீ இம்மையிலும், மறுமையிலும் நன்மையளிப்பாயாக. (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் எங்களை நீ பாதுகாப்பாயாக என்று கோருபவர்களும் மனிதர்களில் உள்ளனர்' *(2:200, 201)*.

இங்கு இம்மையின் நலனை மட்டும் கோருவதைக் கண்டித்தும் இம்மை மறுமை இரண்டினதும் நலன் கோரப்படுவதைப் பாராட்டியும் கூறப்படுவது கருத்திற்கொள்ள வேண்டிய விடயமாகும். ஆதலால் இஸ்லாத்தைச் சரியாக புரிந்து, அது போதிக்கும் நடுநிலைப் பண்பை வாழ்வின் எல்லாத் துறைகளிலும் பின்பற்றி நடப்போமாக.

***பயிற்சி***

*1.* *‘நீங்கள் மனிதர்களுக்குச் சாட்சியாக இருங்கள். தூதர் உங்களுக்குச் சாட்சியாக இருப்பார்’ என்பதன் மூலம் நீர் விளங்கிக் கொள்வது யாது?*

*2.* *தீவிரவாதம், நடுநிலைப் போக்கு இரண்டுக்கும் உதாரணமாக ஆன்மீகம் சார்ந்த உதாரணங்கள் இரண்டையும் உலகியல் சார்ந்த உதாரணங்கள் இரண்டையும் தருக.*

*3.* *அல்லாஹ்வுக்கும் அடியானுக்குமிடையிலான நடுநிலைமைத் தன்மைக்கு பாடத்தில் காட்டப்பட்டுள்ள உதாரணத்தை எடுத்துக்காட்டி விளக்கம் தருக.*

30



# பிக்ஹுல் அவ்லவிய்யாத்



பிக்ஹுல் அவ்லவிய்யாத் என்ற அறபுப் பதம் 'முதன்மைப்படுத்தப்பட வேண்டியவை பற்றிய சட்டநோக்கு' என்ற கருத்தைத் தருகின்றது. அதனை விளக்கமாகக் கூறுவதாயின், ஒரு முஸ்லிம் முக்கியமானதை விட முக்கியமல்லாதவற்றுக்கோ, மிக முக்கியமானதைவிட முக்கியமானதற்கோ முன்னுரிமை வழங்கக் கூடாது. முன்னுரிமை வழங்கப்பட வேண்டியவற்றுக்கு முன்னுரிமை வழங்க வேண்டும். பிற்படுத்த வேண்டியவற்றைப் பிற்படுத்த வேண்டும்; பாரதூரமானவற்றை அலட்சியப்படுத்தவும் கூடாது என்பதாகும்.

பின்வரும் உதாரணத்தின் மூலம் இதனை விளங்கலாம். ஒரு பிரதேச மக்கள் வரட்சியால் பாதிக்கப்பட்டு அன்றாட தேவையை நிறைவேற்றிக்கொள்ள முடியாமல் திண்டாடுகிறார்கள். அதே நேரத்தில் ஒரு குழுவினர் தமது மூன்றாவது உம்றாவை நிறைவேற்றுவதற்காகத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில் வரட்சியால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரண உதவியை வழங்குவதா? மூன்றாவது உம்றாவை நிறைவேற்றுவதா? என்ற கேள்வி எழுகின்றது. சமய, சமூக ரீதியாக நோக்கும்போது இந்நிலையில் மூன்றாவது உம்றாவை விட நிவாரண உதவி வழங்குவது அச்சந்தர்ப்பத்தில் முன்னுரிமை வழங்கப்பட வேண்டிய விடயமாகக் கருத்திற்கொள்ளப்படும். இவ்வாறு முன்னுரிமை வழங்குவதையே பிக்ஹுல் அவ்லவிய்யாத் என்ற தொடர் உணர்த்துகிறது.

மற்றொரு உதாரணத்தையும் கவனியுங்கள். இளமை என்பது வளமான எதிர்காலத்துக்கான ஒரு பயிற்சிக் காலமாகும். முதுமை வருமுன்னே இளமையைப் பயன்படுத்துமாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வலியுறுத்தியிருக்கின்றார்கள். இந்த நிலையில் வாழ்வைச் சீரமைப்பதற்கான அறிவையும், ஆற்றலையும், உளப் பக்குவத்தையும், ஆன்மீக பயிற்சியையும் பெற்றுக்கொள்வதற்கான காலகட்டமாக அதனைப் பயன்படுத்த வேண்டும். இவையே இப்பருவத்தில் முதன்மைப்படுத்த வேண்டிய விடயங்களாகும். மாற்றமாக இப்பருவத்தை விளையாட்டுக்கும், களியாட்டத்துக்கும், வீண் பொழுது போக்குக்குமாக நேரம் ஒதுக்கிக்கொள்வது பொருத்தமற்றதாகும். எனவே, இளமையை எதிர்காலத்துக்காக பயிற்றுவித்துக் கொள்வதே பிக்ஹுல் அவ்லவிய்யாத் ஆகும்.

முஸ்லிம் தனி மனிதன் என்ற நிலையிலும் சமூகம் என்ற நிலையிலும் தனது விவகாரங்களில் முதன்மைப்படுத்த வேண்டியதைக் கண்டறிந்து அதனைக் கையாள வேண்டும். அல்குர்ஆனும், ஸுன்னாவும் இதற்கு வழிகாட்டுகின்றன. அல்குர்ஆன் ஒரே

நேரத்தில் முழுமையாக இறக்கப்படவில்லை. இருபத்தி மூன்று ஆண்டுகளாக சமூக, அரசியல், பொருளாதார தேவைக்கேற்ப கட்டம் கட்டமாக இறக்கப்பட்டது. அல்குர்ஆனின் போதனைகள் படிமுறையாக நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என்பதால் இவ்வாறு அருளப்பட்டிருக்கலாம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் தங்கள் தஃவாவில் முற்படுத்த வேண்டியதை முற்படுத்தி வழிகாட்டியுள்ளார்கள். சட்டங்களை அறிமுகப்படுத்தியபோது அல்குர்ஆனும் ஸுன்னாவும் படிமுறை ஒழுங்கையே கடைப்பிடித்தன.

தரம் குறைந்ததை விட தரம் கூடியதை முற்படுத்த வேண்டும் என்பதை அல்குர்ஆன் காட்டித் தந்திருக்கிறது. உதாரணமாக இஸ்ராயீல் சமூகத்துக்கு அல்லாஹ் மன்னு ஸல்வா என்ற பெறுமதிமிக்க உணவை வழங்கினான். அவர்களோ சாதாரண உணவுகளைத் தருமாறு நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் கேட்டார்கள். அல்லாஹ் இதனைக் கண்டித்து மன்னு, ஸல்வாவை முற்படுத்துமாறு கூறினான். (2: 61)

இவ்வாறே வெளித்தோற்றத்தைவிட உள்ளடக்கத்துக்கு முன்னுரிமை வழங்குமாறு அல்குர்ஆன் பணிக்கிறது. யூதர்களின் கிப்லாவா, முஸ்லிம்களின் கிப்லாவா என்ற சர்ச்சை எழுந்தபோது திசைகளை நோக்கியிருப்பதில் சிறப்பில்லை. செயல்களின் உள்ளடக்கமான ஈமானிலும், அதனைத் தொடர்ந்து வரும் நற்செயல்களிலுமே நன்மை இருக்கிறது என அல்குர்ஆன் (2:177) தெளிவுபடுத்தியது.

போர், சமாதானம் என்ற இரு நிலைகளில் எதனை முதன்மைப்படுத்த வேண்டுமென அல்குர்ஆன் குறித்துக்காட்டுகிறது. அது போரை விட சமாதானத்தை முற்படுத்துகிறது. இஸ்லாத்தில் சமாதானம் விதியாகவும், போர் விதிவிலக்காகவுமே நோக்கப்படுகிறது. திருமணத்தில் முஷ்ரிக்கைவிட முஃமினை முற்படுத்த வேண்டும் (2:221) என்பதும் இம்மைக்கான உழைப்பை விட, மறுமைக்கான உழைப்பை முற்படுத்த வேண்டும் என்பதும் (16:30) சில ஆதாரங்களாகும்.

தஃவாவை தனி நபர்களிலிருந்து ஆரம்பிப்பதா, சமூக மட்டத்தில் நின்று ஆரம்பிப்பதா? என்ற வினாவுக்கு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனி நபர்களை உருவாக்கி அதன் மூலம் சமூகத்தை உருவாக்கலாம் என விடை கண்டார்கள். எனவே தான், அவர்களின் மக்கா காலகட்டத்தில் தனிநபர்களை உருவாக்குவதற்கு முன்னுரிமை வழங்கினார்கள். இதற்கு மக்கா, மதீனா சமூகத்தில் காணப்பட்ட பௌதீக, சமூகக் கூறுகள் காரணமாக இருந்திருக்கலாம். பின்னர், தனி நபர்களை விட சமூகத்துக்கு முன்னுரிமை வழங்கப்பட்டு சமூகமே தஃவாவை முன்னெடுத்தது. அல்குர்ஆன் அந்த சமூகத்தை ‘கைரு உம்மத்’ (சிறந்த சமூகம்) என்று பாராட்டியது.

ஒவ்வொரு விவகாரத்துக்கும் அதற்கே உரிய தனியான மதிப்பும் பெறுமானமும் காணப்படுகின்றன. அவை உரிய சந்தர்ப்பத்தில் வழங்கப்படாதபோது சமூக அநீதி இடம்பெறுகின்றது. குறிப்பிட்ட விவகாரத்தில் நாம் செலுத்துகின்ற கவனம், கூடுதலாகவோ குறைவாகவோ அமையும்போது குழப்பங்கள் உருவாக முடியும். பெறுமானம் குறைந்த விடயங்கள் முன்னே வந்து பெறுமானம் கூடிய விடயங்கள் பின்னால் தள்ளப்படும்போது அங்கு அமளிதுமளிகள் ஏற்படும். இந்த நிலை ஏற்படாமல் தவிர்ப்பதில் பிக்ஹுல் அவ்லவிய்யாத் பெரும் பங்கு வகிக்கின்றது.

ஷரீஆ எல்லா விவகாரங்களையும் ஒரே தரத்தில் நோக்கவில்லை. ஒவ்வொரு விடயத்திற்கும் அதற்குரிய பெறுமானங்களை வழங்கியிருக்கிறது. இதைத்தான் சட்ட அறிஞர்கள் பர்ள், வாஜிப், ஜாஇஸ், மக்ரூஹ், ஹராம் என தரப்படுத்தியுள்ளனர். ஸுன்னத் பர்ளை முந்த முடியாது. ஹராம் ஹலாலை முந்த முடியாது. அசத்தியம் சத்தியத்தை வெல்லக்கூடாது. தகுதியில்லாதவர் தகுதியுள்ளவரை மிகைக்கக்கூடாது.

அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது. 'குருடனும் பார்வையுடையவனும் சமமாக மாட்டார்கள். (அவ்வாறே) இருளும் ஒளியும் சமமாக மாட்டா. நிழலும் வெயிலும் சமமாக மாட்டா. உயிருள்ளவரும், மரணித்தவரும் சமமாக மாட்டார்கள்' **(35: 19 - 22)** கல்வி அறிவுள்ளவர்களும் கல்வி அறிவில்லாதவர்களும் சமமாக மாட்டார்கள்.**(39:9)** எதிர்நிலையில் இரண்டு விடயங்களில் எதற்கு முன்னுரிமை வழங்கப்பட வேண்டும் என்பது இங்கு சுட்டிக்காட்டப்படுகின்றது.

ஹதீஸ்களிலும் இதனைக் காணலாம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சந்தர்ப்ப சூழ்நிலைக்கு ஏற்பவும் ஒவ்வொருவருடைய ஆளுமைக்கேற்பவும் செயற்பாடுகளில் வெவ்வேறு விடயங்களுக்கு முன்னுரிமை வழங்கியிருப்பதைக் காணலாம். உதாரணமாக சிறந்த செயல் எது என ஒருவர் கேட்டபோது தொழுகையை அதற்குரிய நேரத்தில் நிறைவேற்றுவது என்றார். இதே கேள்வியை இன்னொருவர் கேட்டபோது அல்லாஹ்வில் நம்பிக்கை கொள்வது என்றார். இங்கு எல்லோரும் ஸஹாபாக்களாக இருந்தும் கூட அவரவர்களின் தேவையையோ, மனோ நிலையையோ, பலவீனத்தையோ மையப்படுத்தி அறிவுரை வழங்கியிருப்பதைக் காண்கிறோம்.

தனிநபர் ஆளுமை, சூழ்நிலை, கால வளர்ச்சி, அறிவு வளர்ச்சி போன்ற காரணங்களால் எதனை முதன்மைப்படுத்த வேண்டும், எதற்கு முன்னுரிமை வழங்க வேண்டும் என்ற அறிவு இன்றைய அவசரத் தேவையாக உள்ளது. ஏனெனில் முற்படுத்த வேண்டியதை முற்படுத்தாமையால் ஏற்கனவே குறிப்பிட்டது போல, சமூகப் பிரச்சினைகள் பெருகி வருகின்றன. ஒற்றுமையாயிருத்தல் என்ற வாஜிபான விடயத்தில் காண்பிக்கப்படும் மந்தநிலை முஸ்லிம் சமூகத்தைப் பிளவுபடும் நிலைக்குத்தள்ளியிருப்பதை இன்று சாதாரணமாவே கண்டுகொள்ள முடிகின்றது.

பிக்ஹுல் அவ்லவிய்யாத் என்பது ஒரு இயல்பான செயற்பாடாகும். சந்தர்ப்ப சூழ்நிலையானது, ஒன்றைவிட ஒன்றை முற்படுத்த வேண்டிய நிலைக்குத் தள்ளி வைக்கலாம். அவ்வேளைகளில் ஷரீஆவின் வரையறைகளை மீறாமல் செயற்படுவதற்கு பிக்ஹுல் அவ்லவிய்யாத் பற்றிய விளக்கம் தேவைப்படுகின்றது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்துக்கு பின்னர் கலீபாவைத் தெரிவு செய்வதில் ஸஹாபாக்கள் இந்த அணுகுமுறையைப் பின்பற்றினார்கள். அபூ உபைதா ரழியல்லாஹு அன்ஹு , உமர் ரழியல்லாஹு அன்ஹு , அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு ஆகிய மூவரில் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை முற்படுத்தியமை தூரநோக்கோடு செயற்பட்டதாக அமைந்தது. அவர்களின் தெரிவு கிலாபத்தைப் பாதுகாத்தது.

எனவே இது பற்றிய அறிவையும், தெளிவையும் பெற்றுக்கொள்ள முயல்வோமாக.

**பயிற்சி**

1. பின்வரும் செயற்பாடுகளில் முன்னுரிமை வழங்கக் கூடியவைகளை கோடிட்டுக் காட்டுக.

    அ) இஷாத் தொழுகையை மஸ்ஜிதில் தனியாக நிறைவேற்றல்

    வீட்டுப் பணிகளில் தாயாருக்கு உதவுதல்

    ஆ) இஷாத் தொழுகையை ஜமாத்தாக நிறைவேற்றல்

    அல்குர்ஆனை மனனம் செய்தல்

    இ) மாலை நேரத்தில் விளையாடச் செல்லல்

    நூலகத்துக்கு செல்லல்

    ஈ) அல்குர்ஆன் இறுவட்டைக் கேட்டல்

    விபத்தில் சிக்கிய ஒருவரை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லல்

    உ) ஞாயிற்றுக்கிழமையில் நண்பர்களுடன் அரட்டையடித்தல்

    உறவினரை சந்திக்கச் செல்லல்

2. இஸ்லாத்தில் சமாதானம் விதியாகவும், போர் விதிவிலக்காகவும் உள்ளது என்ற தொடரை விளக்குக.

3. முற்படுத்த வேண்டியதை பிற்படுத்துவதாலும், பிற்படுத்த வேண்டியதை முற்படுத்துவதாலும் ஏற்படும் விளைவை உதாரணம் ஒன்றின் மூலம் விளக்குக.